# சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு

**பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (Ph.D) அளிக்கப்படும் ஆய்வேடு (முழுநேரம்)**

**ஆய்வாளர்**
**ந. உமாதேவி எம்.ஏ., எம்.ஃபில்.**

**நெறியாளர்**
**முனைவர் ந. சிவசுப்பிரமணி**
**உதவிப் பேராசிரியர்**

**தமிழாய்வுத்துறை**
**மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி)**
**காளிப்பட்டி – 637 501, நாமக்கல் மாவட்டம்.**

**பிப்ரவரி – 2017**

முனைவர் ந.சிவசுப்பிரமணி

உதவிப் பேராசிரியர் / நெறியாளர்

மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி)

காளிப்பட்டி – 637 501.

# நெறியாளர் சான்றிதழ்

பெரியார் பல்கலைக்கழகம் அளிக்கும் முனைவர் பட்டத்திற்காக **“சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு”** எனும் பொருளில் **ந. உமாதேவி** அவர்கள் என் மேற்பார்வையின் கீழ் செய்த இவ்வாராய்ச்சி முழுவதும் அவருடைய சொந்த முயற்சியால் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் இத்தலைப்புக் குறித்து வேறெந்த பட்டமும் இவ்வாய்வேட்டின் மீது அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

MAHENDRA ARTS & SCIENCE COLLEGE
NAMAKKAL DIST.
Date:........................
KALIPPATTI - 637 501.

இடம்: காளிப்பட்டி

தேதி: 10.2.17

நெறியாளர் கையொப்பம்

முனைவர். ந. சிவசுப்பிரமணி,
எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,பி.எட்.,
உதவிப் பேராசிரியர் / ஆராய்ச்சி நெறியாளர்,
தமிழாய்வுத்துறை,
மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி,
காளிப்பட்டி, நாமக்கல்–637 501.

துறைத்தலைவர்

முனைவர். கா. காந்தி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
தலைவர் / ஆராய்ச்சி நெறியாளர்,
தமிழாய்வுத்துறை,
மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி,
காளிப்பட்டி, நாமக்கல் - 637 501.

10/2/17

முதல்வர்

PRINCIPAL
Mahendra Arts & Science College,
(Autonomous),
Kalipatti-637 501, Namakkal (Dt.)

**ந. உமாதேவி, எம்.ஏ., எம்.ஃ.பில்.**

ஆய்வாளர்

தமிழாய்வுத்துறை

மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி)

காளிப்பட்டி – 637 501.

## ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு"** எனும் தலைப்பில் பி.எச்.டி பட்டத்திற்காகச் செய்யப்பட்டுள்ள இவ்வாய்வு முழுவதும் **முனைவர் ந. சிவசுப்பிரமணி,** அவர்களை நெறியாளராகக் கொண்டு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லையென உறுதியளிக்கிறேன்.

இடம்:

தேதி: **ஆய்வாளர் கையொப்பம்**

**(ந.உமாதேவி)**

# நன்றியுரை

இவ்வாய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய பெரியார் பல்கலைக் கழகத்திற்கும், அதற்கு வாய்ப்பளித்த மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரித் **தாளாளர்** அவர்களுக்கும் மற்றும் கல்லூரி முதல்வர் **முனைவர் ஆர்.கே. வைத்தியநாதன்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணி சிறக்கத் தக்க அறிவுரைகள் வழங்கிய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் கா. காந்தி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செம்மையுற அமைப்பதற்கு நேரம் கருதாது வேண்டிய பொழுதெல்லாம் ஆய்வுத் தொடர்பான ஐயங்களைத் தீர்த்து ஆய்வினை மேற்பார்வை செய்து நெறிப்படுத்திய உதவிப் பேராசிரியர், நெறியாளர் **முனைவர் ந.சிவசுப்பிரமணி** அவர்களுக்கும் என் இதயங்கனிந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்விற்குத் தேவையான ஆலோசனைகளை வழங்கிய தமிழ்த்துறை **உதவிப் பேராசிரியர்கள்** அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை வளர்த்து ஆளாக்கி, படிக்க வைத்த **என் பெற்றோர்க்கும்** இவ்வாய்வினை மேற்க்கொள்ள காரணமாயிருந்த என் கணவர் **அ.ரவிச்சந்திரன்** அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய என் தோழிகளான **க.மணிமேகலை** மற்றும் **பெ.தாமரைச்செல்வி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பல்வேறு நூல்களைப் பார்வையிடுவதற்கு அனுமதியளித்த மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி **நூலகர்** அவர்களுக்கும் என் நன்றி.

என் ஆய்வேடு சிறப்பாக அமைய தட்டச்சு செய்துக் கொடுத்த **கிருஷ்ணா இன்ஸ்டிடியூட், திருச்செங்கோடு** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி.

**(ந.உமாதேவி)**

**ஆய்வாளர்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| நற். | - | நற்றிணை |
| குறுந். | - | குறுந்தொகை |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| நம்பி. | - | நம்பியகப்பொருள் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| குறள். | - | திருக்குறள் |
| பத்து. | - | பத்துப்பாட்டு |
| பதினெண். | - | பதினெண்கீழ்க்கணக்கு |
| பா. | - | பாடல் |
| ப. | - | பக்கம் |
| மேலது. | - | மேலே குறிப்பிட்ட நூல் |

# உள்ளடக்கம்

## "சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு"

**1.1** தமிழில் வளர்ந்துவரும் துறைகளுள் ஒன்று தகவல் தொடர்பியலாகும். ஆங்கிலத்தில் இத்துறைப் பற்றிய நூல்கள் மிகுதியாக வெளிவந்துள்ளன. தகவல்களைப் பரிமாற்றம் செய்வதில் மக்கள் தொடர்பு சாதனங்கள் மாபெரும் அளவில் பணியாற்றி வருகின்றன. வளர்ந்து வரும் இத்துறைக்கு வளம் சேர்த்த விஞ்ஞானிகள் பலர். தகவல் தொடர்பியலில் அரை நூற்றாண்டாக அடைந்த சாதனைகள் அளவிலடங்கா. நுண்ணிய செய்திகளை நுண்ணலைகள் மூலம் உலகம் முழுவதும் பரவ வகைச் செய்கின்றன. மலைகளும் கடல்களும் பிரிக்கும் மனித இனத்தைத் தகவல் தொடர்பே இணைக்கிறது. பொழுது புலர்வதற்கு முன் புற்றீசல் போல் செய்திகள் வந்து குவிகின்றன. வளர்ந்துவரும் அறிவியல் வளர்ச்சி மனித சமுதாய மேம்பாட்டிற்கும், உலக ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டிற்கும் ஆற்றிவரும் பணிகள் போற்றுவதற்குரியதாகும்.

**1.1.1** அனைத்து சமுதாய உறவுகளுக்கும் ஆணிவேராய்த் தகவல் தொடர்பு திகழ்கின்றது. தகவல் தொடர்பு இல்லையேல் தொழில், வேளாண்மை, வணிகம் என எதுவும் கிடையாது. மனித சமுதாயத்தின் அடித்தளமே தகவல் தொடர்பு தான். கூவி ஒலியெழுப்பிக் கூப்பிடும் தொலைவில் இருப்பவருடன் தொடர்பு கொண்டான் அன்றைய மனிதன். ஆனால் அறிவியல் வளர்ச்சியின் காரணமாக இன்றைய மனிதனுக்கு உலகமே ஒரு கிராமமாகச் சுருங்கிவிட்டது எனலாம். மனிதன் பிறந்தது முதல் தன் எண்ணங்களை மற்றவர்களிடம் பகிர்ந்து கொள்வதன் மூலமாக தகவலைப் பரப்பினான். பின்னர் அவையே இலக்கியங்களாக மலர்ந்தது. இத்தகைய இலக்கிய வகைகளில் ஒன்றான 'தொகை நூல்களில்' எவ்வாறு ஒருவருக்கொருவர் தங்கள் எண்ணக் கருத்துக்களை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குப் பரிமாற்றம் செய்துள்ளனர் என்பதைக் காண்பதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 1.2 ஆய்வுத்தலைப்பு

சங்கத் தொகை நூல்களில் பல்வேறு விதமானப் பொருளில் பல்வேறு பொருண்மையில் ஆய்வுகள் மேற்கொண்டுள்ள போதும் அதில் பல்வேறு ஆய்வுப் பொருள் பொதிந்து கிடக்கத்தான் செய்கின்றன. அத்தகைய சங்கத் தொகை நூல்களில் தொடர்பு முறையும், அறிவித்தல், அறிவூட்டல், மகிழ்வித்தல் ஆகிய தொடர்பியல் பணிகளை ஆய்வதன் பொருட்டும் "சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு" என்ற பொருளில் ஆய்வுத் தலைப்பு தேர்வு செய்யப்பட்டுள்ளது.

## 1.3 ஆய்வின் நோக்கம்

**'சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு'** என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்படும் இவ்வாய்வு, சங்ககால மக்கள் எவ்வாறு தங்கள் கருத்துக்களை மற்றவரிடம் பரிமாறிக் கொண்டனர் என்பதை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்து சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு முறைகள் எவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதை ஆராய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 1.4 கருதுகோள்

ஒன்றிற்கு மேற்பட்டவரிடம் மேற்கொள்ளப்படும் தகவல் தொடர்பு மனிதன் தோன்றிய காலத்திலேயே தோன்றியிருந்தது எனக் கூறலாம். அத்தகைய தொடர்பு முறைகள் தொகை நூல்களில் எவ்வாறு செயல்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை ஆராய்வதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## 1.5 ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான அகநூல்களில் ஒரு பகுதியாக உள்ள நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்ற ஐந்து நூல்கள் மட்டுமே ஆய்வு எல்லையாக அமைகின்றன.

## 1.6 ஆய்வு ஆதாரங்கள்

ஆய்வுக்குரிய அடிப்படை ஆதாரங்கள் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இருவகையாக அமைந்துள்ளன.

## 1.7 முதன்மை ஆதாரங்கள்

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய சங்க இலக்கிய அகநூல்கள் ஐந்தும் ஆய்வின் முதன்மை ஆதாரங்களாக உள்ளன.

## 1.8 துணைமை ஆதாரங்கள்

இவ்வாய்விற்கு உறுதுணையாக இலக்கியம் சார்ந்த நூல்கள், ஆய்வேடுகள், திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள் போன்றவை துணைமைச் சான்றுகளாக அமைந்துள்ளன.

## 1.9 ஆய்வு அணுகுமுறைகள்

சங்கத் தொகைப் பாடல்களை அடிப்படையாகக் கொண்ட இவ்வாய்வில், சங்கப் பாடல்களை விளக்குவதற்கு விளக்கமுறை ஆய்வும், ஒரு பாடலோடு மற்றொரு பாடல் கருத்துக்களைப் பொருத்தி ஆய்வு செய்வதற்கு ஒப்பீட்டு ஆய்வு முறையும், பாடல்களின் வழி சமூகத் தகவல்களை வெளிக் கொணர்வதற்கு சமூகவியல் ஆய்வு அணுகுமுறைகளும் இவ்வாய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## 1.10 இயல் பகுப்பு

இவ்வாய்வு ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,

| | |
|---|---|
| இயல் ஒன்று | – தோற்றுவாய் |
| இயல் இரண்டு | – தகவல் தொடர்பியல் அறிமுகம் |
| இயல் மூன்று | – தொகை நூல்களில் தொடர்பு திறன் |
| இயல் நான்கு | – தொகை நூல்களில் அறிவித்தல், அறிவூட்டல் மகிழ்வித்தல் |
| இயல் ஐந்து | – இறுவாய் |

### 1.10.1 இயல் ஒன்று

**‘தோற்றுவாய்’** எனும் ஆய்வு முன்னுரையில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வுக்களம், ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறைகள், இயல் பகுப்பு ஆகியவை அறிமுகம் செய்யும் வகையில் ஆய்வேட்டின் முன்னுரை அமைந்துள்ளது.

### 1.10.2 இயல் இரண்டு

**‘தகவல் தொடர்பியல் அறிமுகம்’** என்ற இரண்டாம் இயலில், தகவல் தொடர்பின் வளர்ச்சி, வரலாற்றைக் கூறும்போது தகவல் தொடர்பை ஆங்கிலத்தில் ‘கம்யூனிகேசன்’ என்பர். கம்யூனிகேசன் என்னும் சொல் ‘கம்யூனிசு’ என்னும் இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்ததாகும். பகிர்ந்துக் கொள், செயல் விளைவு, பயன், செய்திப்பரப்பு என்னும் பொருள்கள் உண்டு. கருத்துக்களைப் பொதுவாக்குவதே தொடர்பியலாகும். தொடர்பியல் என்பது ஒருவர் மற்றொருவருடன், தமது எண்ணங்கள், கருத்துக்கள், உணர்ச்சிகள், தகவல்கள் போன்றவை பரிமாறும் செயலாகும். மனிதத் தொடர்பு என்பது பொருளுள்ள செய்தியை ஒருவர் இன்னொருவருக்கு அனுப்புவதாகும். இத்தகைய தொடர்பியல் முறையை தொடர்பு விளக்கம், தொடர்பியல் தோற்றமும் வளர்ச்சியும், அஃறிணைப் பொருள்களும் தகவல் தொடர்பும், தொடர்பியல் செயல்முறை, தகவல் தொடர்பு வடிவங்கள் போன்ற தகவல் தொடர்பு முறைகளை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

### 1.10.3 இயல் மூன்று

**‘தொகை நூல்களில் தொடர்பு திறன்’** என்னும் மூன்றாம் இயலில் தொகை நூல்களில் தலைவன், தலைவி இடத்தில் இருக்கும் காதல் பற்றிய தகவல்களைத் தோழி தலைவன் இடத்தில் எடுத்துக் கூறுதல், தலைவியின் களவு வாழ்க்கை தகவல்களை

வெளிப்படுத்துவதில் தோழியின் செயல் திறனே மிகுதியாக காணப்படுகிறது. நேருக்கு நேராக நின்று தலைவனும் தலைவியும் தன் மனதில் எண்ணிய கருத்துக்களைப் பரிமாறுகின்றனர். பின் சில காரணங்களால் தலைவன் தலைவி சந்திப்பதில் தடை ஏற்படுகிறது. அதனால் தலைவி தலைவனைக் காணாமல் வருந்தி மெலிந்து காணப்படுகிறாள். இந்த நோய் எதனால் தலைவிக்கு ஏற்பட்டது என அறியாத செவிலியும் நற்றாயும் தெய்வத்தின் செயலே அதற்குக் காரணம் எனக் கருதி வெறியாட்டு நடத்துவர். வெறியாட்டு என்பது தெய்வத்திற்குச் செய்யும் சடங்குகளில் ஒன்று. தலைவியின் பொய்யான சடங்கினைத் தடுத்து நிறுத்தி, தோழி தலைவியின் காதல் பற்றிய தகவல்களைச் செவிலி இடத்தில் கூறுகின்றாள். செவிலித்தாய் அத்தகவல்களை நற்றாயிடத்தும் பரவச் செய்கிறாள். இவ்வாறு ஒரு செய்தி ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு பரவுகிறது. அது மட்டுமில்லாமல் தலைவி தன் செய்திகளைத் தலைவனிடம் கூற வேண்டும் என்ற எண்ணம் எழுகின்றது. அந்தச் செய்தியை நேரடியாக தலைவனிடம் கூற சில காரணங்களால் தடை ஏற்படுகிறது. அதனால் தோழியின் வாயிலாக தலைவனை வரவழைத்து தலைவன், தலைவி, தோழி மூவரும் குழுவாக உரையாடுகின்றனர். தலைவனின் நண்பனான பாணனும் தலைவனுக்காக தலைவி இடத்தில் தூதாக வருகிறான். அது மட்டுமில்லாமல் விறலியின் பங்கு மூலதனமாக இருக்கின்றது. அஃறிணை உயிர்களையும் தூதாக அனுப்பி தன் கருத்துக்களை வெளிப்படுத்துகின்றாள். இவ்வாறு எல்லாம் தகவல்களும் ஒருவருக்கொருவர் சென்றடைந்ததன் பயனாக தலைவியை விரும்பும் தலைவனுக்கே மணம் செய்துக் கொடுக்கப்படுகிறது. இதன் வாயிலாக தலைவனின் சிறந்த தகவல் தொடர்பாளர்களானப் பாணன், அறிவர், கூத்தர் போன்றோர் தகவல்

சிறப்பான முறையில் கொண்டுச் சென்றனர். தலைவியின் தகவல் தொடர்பாளரான தோழியின் பங்கு மிக அதிகமாக இருந்ததும் அறியமுடிகிறது. தொகை நூல்களில் இத்தகைய தகவல் தொடர்பாளரின் தகவல்கள் எடுத்துச் செல்லும் திறத்தை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

### 1.10.4 இயல் நான்கு

**'தொகை நூல்களில் அறிவித்தல், அறிவூட்டல், மகிழ்வித்தல்'** எனும் மூன்று பகுதியாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதிக்கும் விளக்கம் தரக்கூடியதாக நான்காம் இயல் அமைந்துள்ளது.

#### 1.10.4.1 அறிவித்தல்

தொடர்பியலின் முக்கியமானப் பணி வாசகர்களிடம் தகவல்களைப் பரப்புவதாகும். மக்களுக்கு எல்லா விவரங்களையும் உடனுக்குடன் உண்மையாக விருப்பு வெறுப்பின்றி சிதைக்காமல் முழுமையாக வழங்க வேண்டும். நாட்டின் சமுதாயம், சமயம், அரசியல், பொருளாதாரம், கலை, பண்பாடு ஆகியவை தொடர்பாக நடைபெறும் எல்லா நடவடிக்கைகளையும் விளக்கிக் கூறுகின்ற பொறுப்பானப் பணியைத் தொடர்பு சாதனங்கள் செய்கின்றன. இவ்வகையில் தொகை நூல்கள் தலைவன் தலைவி ஆகியோரின் நட்பை மேம்படுத்த தகவல்களை யார், யார் மூலமாக சூழலுக்கேற்ப, சமூகம், பண்பாடு, மரபு மாறுபடாமலிருக்கும் வகையில் பல்வேறு செய்திகளைத் தகவல்களாக்கி அறிவிக்கின்றனர் என்பதை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

#### 1.10.4.2 அறிவூட்டல்

இன்றைய உலகில் புதிய கண்டுபிடிப்புகளும், அறிவியல் முன்னேற்றங்களும் நாளும் பெருகி வருகின்றன. ஆனால் அன்றைய மக்களிடம் இத்தகைய தகவல் தொடர்பு முன்னேற்றம் இல்லை.

அதனால் தகவலைக் கொண்டு செல்வோரே தகவல் அனுப்பிய சூழ்நிலையை எடுத்துக் கூறி தேவையான விளக்கங்களுடன் தகவல் பெறுபவரிடம் அறிவூட்டினர். இவ்வகையான அறிவூட்டல் பணியை தொகை நூல்களில் எவ்வாறு அகநிலை மாந்தர்கள் செய்துள்ளனர் என்பதை ஆராயப்பட்டு இப்பகுதியில் கூறப்பட்டுள்ளன.

### 1.10.4.3 மகிழ்வித்தல்

தகவல் தொடர்பியலின் முக்கியமானப் பணிகளுள் மகிழ்வித்தலும் ஒன்றாகும். இப்பணியை தொகை நூல்களில் தலைவன் தலைவியரிடையே தொடர்ந்து மகிழ்விக்கக் கூடிய தகவல்களைக் கூறியும் சோர்ந்து விடாமல் உற்சாகமூட்டியும் சிக்கலானவையும் சிந்தனைக்குரியதுமானப் பலவகைச் செய்திகளை கூறுவதோடு தொடர்ந்து தகவல்களைப் பெறுபவர்களுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கும் வண்ணமாகவும், மனச்சோர்வை போக்கிக் கொள்வதற்கு எளிமையானப் பணி ஒருவரை மகிழ்வித்தலாகும். இவ்மகிழ்வித்தலின் சான்றாக இங்கு ஒரு பாடலின் கருத்தைக் காணலாம். அகநானூற்றில் ஒரு பாடலில் தலைவன் களவின் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்துச் சென்றிருந்தான். அதனால் தலைவி மிகவும் வருத்தத்துடன் காணப்பட்டாள். தலைவன் தலைவியை மணம் செய்துக் கொள்வதற்கு உற்றார் உறவினருடன் பெண் கேட்டு தலைவியின் இல்லத்தை நோக்கி வந்தான். இதை அறிந்த தோழி தலைவி இடத்தில் இச்செய்தியை அறிவித்து மகிழவைத்தாள். இவ்வாறாக தொகை நூல்களில் உள்ள பாடல்களில் மகிழ்வித்தல் எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை ஆராயப்படுகிறது.

### 1.10.5 இயல் ஐந்து

ஒவ்வொரு இயலின் முடிவிலும் அவ்வியலின் **ஆய்வு முடிவுகள்** தரப்பட்டுள்ளன. அதனைத் தொகுத்து ஆய்வு முடிவாக தரப்பட்டுள்ளன.

இயல் பகுப்புகளைத் தொடர்ந்து ஆய்வுக்கு துணைச் செய்த நூல்களின் பட்டியல் தரப்பட்டுள்ளது.

## 1.11 ஆய்வுப் பயன்

சங்க இலக்கியங்கள் என்பது எட்டுத்தொகையும், பத்துப்பாட்டையும் கூறுகிறோம். எட்டுத்தொகையில் அகநூல்களில் உள்ள ஐந்து நூல்களும் சங்ககால தமிழர்களுடைய அகவாழ்க்கையை மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன. தலைவன் தலைவி இயற்கையாக ஊழ் வினையின் காரணமாக ஒன்றுபடுகின்றனர். அவர்கள் இருவருக்கும் இடையில் தோழி சிறந்த தகவல் தொடர்பாளராக விளங்குகின்றாள். இவ்வகையான அகப் பாடல்கள் இன்றைய காலக்கட்டங்களில் ஒவ்வொரு மனதையும் சிந்திக்க தூண்டுகிறது.

சங்க இலக்கியங்களில் அகநூல்களில் உள்ள ஒவ்வொரு பாடல்களும் சிறந்த கருத்துக்களையும் மக்களின் பாரம்பரியமான வாழ்க்கை முறைகளையும் இன்றைய மக்களுக்கு கற்றுக் கொடுக்கும் வகையில் அமைந்துள்ளன. எளிதில் புரிந்துக் கொள்ளும்படியாகவும் அன்றைய புலவர்கள் நமக்கு பாடல்களைத் தந்துள்ளனர். இலக்கிய பாடல்களை நாம் படிக்கும் வண்ணம் சலிப்பு ஏற்படாமலும் அமைந்திருக்கின்றன. ஒரு செய்தியை இன்னொருவரிடம் கூறுவதற்கு அஃறிணை உயிரினங்களையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை சங்ககால பாடல்கள் மூலம் அறிய முடிகின்றன.

சங்க பாடல்களில் உள்ள அகநூல்கள், அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, ஐங்குறுநூறு போன்ற ஒவ்வொன்றும் ஒரு கருத்தை மட்டும் கூறாமல் இன்றைய மக்களுக்கு பயன்படும் வகையிலும் ஒவ்வொரு மனிதனையும் சிந்திக்க தூண்டுவதாக அமைந்துள்ளன.

இப்பாடல்களில் அமைந்துள்ள கருத்துகள் தலைவன், தலைவியின் அக வாழ்க்கையை சுட்டிக் காட்டியுள்ளது. இதன்மூலம் சங்ககால மக்களின் நம்பிக்கைகளையும், பண்பாடுகளையும் இன்றைய சமூகம் உணர்ந்து கொள்ளவும், சங்ககால மக்கள் ஒரு தகவலைக் கூற யாரையெல்லாம் தொடர்பாளராக பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் இன்றைய சமூகம் உணர்ந்து கொள்ள வாய்ப்பாக அமைந்துள்ளது.

எப்படியும் வாழ்வது வாழ்க்கையல்ல. இப்படித்தான் வாழ்வது வாழ்க்கை என்ற வாழ்வின் சாரா அம்சத்தைப் பாட்டின் வழி தந்தவர்கள் நம் புலவர் பெருமக்கள். வாழ்க்கையின் பயனாக காதலைப் பற்றியும், ஒரு செய்தியை எவ்வாறு அறிவித்தனர் என்பது பற்றியும் இவ்வாய்வில் காட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் பற்றி ஆய்வாளர்கள் பல்வேறு தலைப்புகளில் ஆய்வுக் மேற்கொண்ட போதிலும், சங்கத் தொகை நூல்களில் தகவல் தொடர்பு என்னும் ஆய்வு ஒரு மாறுபட்ட முயற்சியாகும்.

# 2. தகவல் தொடர்பியல் அறிமுகம்

**2.0** சங்க இலக்கியத்தில் சிறந்த சிந்தனைகள் மிளிர்வதையும், ஓங்கி வளர்ந்த நாகரிக தளத்திற்கு அடித்தளமிடுதலையும் காணலாம். சங்க கால இலக்கியங்கள் அனைத்தும் அக்கால தலைவன், தலைவியிரிடையே நிகழும் உள்ளத்தைப் பிரதிபலிக்கின்றன. தொடர்பியல் என்பது ஒருவர் மற்றொருவருடன் தமது எண்ணங்கள், கருத்துகள், உணர்ச்சிகள், தகவல்கள் போன்றவற்றை பரிமாறும் செயலாகும். ஒரு மனதின் வழியாக இன்னொரு மனதுடன் அது பேசுகின்றது. மனித தொடர்பு என்பது பொருளுள்ள செய்தியை ஒருவர் இன்னொருவருக்கு அனுப்புவதாகும். இத்தகைய தொடர்பியல் முறையை தொடர்பு விளக்கம், தொடர்பியல் தோற்றமும் வளர்ச்சியும், தொடர்பியல் செயல்முறை, தகவல் தொடர்பு வடிவங்கள் போன்ற தகவல் தொடர்பு முறைகளை இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## 2.1 தொடர்பு

இருவர் அல்லது இரு அமைப்புகளுக்கிடையே நடைபெறுகின்ற செய்திப் பரிமாற்றம், செய்தியைத் தெரியப்படுத்துதல், அறிவித்தல், செய்தியை அனுப்புதல், செய்தியில் பங்கு அளித்தல், கருத்துப் பரிமாறுதல், போன்றவை மூலமாகவும், அடையாளங்கள், குறியீடு, பேச்சு, எழுத்து, உடலசைவு மூலமாகவும் இவை நடைபெறுகின்றன. “தொடர்பு என்பது கருத்துக்கள் எண்ணங்கள், செய்திகள், மனநிலைகள் ஆகியவை ஒருவர் அனுப்பி மற்றொருவர் பெறுவதாகும். செய்தி அனுப்புதலையும், பெறுதலையும் தொடர்பு என்பர்.”[1]

## 2.2 தொடர்பியல் விளக்கம்

தொடர்பியல் என்னும் சொல்லிற்குப் 'பொதுமையாக்குதல்' என்பது பொருளாகும். அதாவது பெறுநருடைய மனதில் அனுப்புநரின் கருத்து அல்லது கருத்துப் படிவத்தை உருவாக்குகிறது. அனுப்புநருக்கும் பெறுநருக்கும் இடையே நிகழும் செய்திப் பறிமாற்றச் செயல் முறையே தொடர்பியல் எனப்படும். தொடர்பியல் என்னும் உருவக அமர்வையும், குறியீட்டு அமர்வையும் கொண்டு நிகழும் செய்திப் பரிமாற்றத்தின் பின்னலைக் குறிக்கிறது. அனுப்புநர், செய்திகள், அனுப்பு முறை, பெறுநருக்குப் பொருள்புரிதல் என்னும் நான்கு தொடர்ச்சியானக் கூறுகளை உள்ளடக்கியதே தொடர்பியலாகும். "தகவல் தொடர்பு என்பது எளிதானது அல்ல. மனித நினைவாற்றலை நம்ப முடியாது. அது வேண்டியதை மறந்து விடும். வேண்டாததை நினைவு வைத்திருக்கும். ஆகவே தகவலை எழுத்தில் வடித்து விட்டால் தகவல் திரியாமல் இருக்க உதவுகிறது."[2]

## 2.3 மக்கள் தகவல் தொடர்பியல்

"மக்கள் தகவல் தொடர்பியல் என்பதற்குப் பிறிதொரு விளக்கமும் தருகின்றன. தொழில்துறை சார்ந்த சமுதாயத்தில் நிறுவன மயமாக்கப்பட்ட தொழில் நுட்பத் திறனின் உதவியோடு மக்களுக்கு வழங்குவதற்காகப் பொதுத் தகவலை தயாரிக்கும் முறையே மக்கள் தகவல் தொடர்பியல் எனப்படும்."[3] எட்வர்ட் சாபிர் தகவல்களைப் பின்வரும் இருவகைகளாகப் பிரித்துப் பார்க்கிறார். "மக்கள் ஒருவரோடு ஒருவர் உரையாடுவதன் மூலமாகவும், பிற தகவல் வாயில்கள் மூலமாகவும் தகவல்களைத் தெரிந்துக் கொள்வது. தமக்கு ஏற்படும் அனுபவமும், ஞானம், உள்ளுணர்வு ஆற்றல், பிறரது நடவடிக்கைகள்

ஏற்படுத்திய தாக்கத்தின் வாயிலாகத் தம்மைத் தாமே மாற்றிக் கொள்ளும் தன்மை போன்றவற்றின் மூலமாகத் தகவல்களை உணர்ந்து கொள்வது.''[4] என தகவல் தொடர்பினைப் பகுத்துக் காண்பிக்கிறார். மேலும்,

**ஒருவருக்கொருவர் நேரடியாகக் கொள்ளும் தொடர்பு**

மணவிழா, பூசை போன்றவற்றின் போது உறவினர்கள் தமக்குள் உரையாடுதலும் கருத்தரங்க உரையாடல்களும்.

**படித்தலின் வழியாக கொள்ளும் தகவல் தொடர்பு**

பல்வகையான புத்தகங்கள், செய்தித்தாள்கள், பல்வகையான இதமழ்கள் முதலியவை.

**மனிதனும் இயந்திரமும் கொள்ளும் தகவல் தொடர்பு**

பலவிதமான அளவுக் கருவிகள், நுண்பெருக்காடி முதலியவை.

**மக்கள் கருவிகள் மூலமாகத் தங்களுக்குள் கொள்ளும் தொடர்பு**

தந்தி, தொலைபேசி, கைப்பேசி, வானொலி போன்றவை என வகைப்படுத்தலாம்..

## 2.4 தொடர்பு கருவிகள்

இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழும் நம்மைச் சுற்றிலும் தகவல் தொடர்பு கருவிகள் இருக்கின்றன. தொலைபேசி நம்மை எழுப்பி நேரத்தை அறிவிக்கிறது. அண்மையில் உள்ளவர்களுடனும், வெகு தூரத்தில் உள்ளவர்கள் இடத்திலும் பேசுவதற்கு அது உதவுகிறது. குடும்பத்தில் ஒருவர் விட்டுச்செல்லும் குறிப்பு, அன்று வீட்டில் செய்ய வேண்டிய பணியை நினைவுப்படுத்துகிறது. செய்தித்தாள்கள் பல தொடர்புகளை நமக்கு நல்குகிறது. பயனுள்ள கட்டுரைகள், தகவல் தரும் விளம்பரங்கள், நகைச்சுவைத் துணுக்குகள் போன்றவை செய்தித் தாள்களில் காணப்படுகின்றது. இவ்வாறு நம்மைச்

சுற்றிலும் உள்ள தகவல் தொடர்புக் கருவிகள் பல்வேறு தகவல்களை நமக்குத் தருவதை அறியமுடிகிறது.

## 2.5 மற்றவர்களைப் பற்றி அறிய விரும்பியது

பன்னெடுங்காலமாக மனிதன் பிறரைப் பற்றி அறிய ஆவலாக இருந்துள்ளான். தன்னுடைய பெருமைகளையும், வீர தீரச் செயல்களையும் இன்ப துன்பங்களையும் பிறருடன் பகிர்ந்து கொண்டுள்ளான். இச்செய்தியை திருக்குறள்,

> **"ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்**
> **தீதுண்டோ மன்னு முயிர்க்கு"**[5]

என மற்றொருவருடன் பழகும்போது, தன்னை மற்றொருவருடன் ஒப்பிட்டுப் பார்த்தான். அதனால் பிறருடைய குறைகளையும், நிறைகளையும் அவனால் அறிந்துக் கொள்ள முடிந்ததை இக்குறள் எடுத்துக்காட்டுகிறது.

## 2.6 மொழி தோன்றும் முன்பு உடலசைவு

ஆதிமனிதன் மொழித்தோன்றும் முன்பு உடலசைவுகள், ஒலிகள், சீழ்க்கை ஒலி, கூவியழைத்தல், புகையெழுப்பல், பறையறைதல், மணியடித்தல், தீயம்புகளை வானத்தில் எறிதல் போன்றவற்றின் வழியாகத் தன்னைச் சுற்றியுள்ள வட்டார மக்களுக்குத் தேவையான செய்திகளை அனுப்பினான். பண்டையகால மனிதன் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களின் வழியாகச் செய்திகளையும் கருத்துக்களையும் தெரிவித்துள்ளான். ஒவ்வொரு அசைவிற்கும் பொருள் இருக்கிறது என்பதை உணர, கருத்தை புரிந்துகொள்வதே தகவல் தொடர்பு ஆகும்.

### 2.6.1 ஒலிகள்

உடலசைவதன் காரணமாகப் பொருள் வேறுபாட்டைக் கொடுத்த போது பண்டைய மனிதன் ஒலிகளைப் பயன்படுத்தினான்.

இயற்கையாகவே மனிதனிடம் ஒலி இருந்தது. இயற்கை மூலம் கேட்ட ஒலிகளைப் பயன்படுத்தக் கற்றுக் கொண்டான். (எ.கா) கிளியின் ஓசையைக் கேட்டு கிளி மாதிரி இசைத்தான். அடுத்தவர் கவனத்தை ஈர்க்கச் ‘‘சீழ்க்கை’’ ஒலியைப் பயன்படுத்தியிருக்கக் கூடும். சீழ்க்கையடிக்கும் செய்தி குறிஞ்சிப் பாட்டில் (வரி-661) காணப்படுகிறது.

### 2.6.2 வாய்மொழி

மனிதன் எப்படிப் பேசத்தொடங்கினான் என்பது இன்னும் புலப்படாத புதிராகவே உள்ளது. இயற்கை ஒலியின் பிரதிபலிப்பே மொழி என்று சிலர் கூறியுள்ளனர். இன்றும் பழங்குடி மக்களிடமும், வேளாண்குடி மக்களிடமும் நேருக்கு நேர் தகவல் தொடர்பு உள்ளது. அவர்கள் தமக்கு தெரிந்தவர்களிடமும், உறவினர், குடும்பத்தினரிடமும், செய்திகளை நேருக்கு நேர் பரிமாற்றம் செய்துக் கொள்கின்றனர். அவர்களிடம் கருத்துப் பரிமாற்றம் எளிதில் நடைபெறுகின்றனர்.

### 2.6.3 இசைக்கருவிகள்

இசைக்கருவிகளில் பறையும் ஒன்று. விழா, திருமணம், படையெடுப்புப் போன்றவற்றைப் பறையறைந்து அல்லது முரசு அறைந்து தெரிவிப்பர். இதை,

**‘‘நாவலந் தண்பொழில் நண்ணார் ஒற்றுநம்**
**காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா**
**வம்பணி யானை வேந்தர் ஒற்றே**
**தஞ்செவிப் படுக்குந் தகைமைய வற்றோ**
**அறைபறை யென்றே அழும்பில்வே ளுரைப்பர்’’**[6]

பகை மன்னவர்களுடைய ஒற்றர்கள் தம் காவல் மிக்க நகரமாகிய வஞ்சியின் முற்றத்திலே எப்போதும் இருப்பர். யானையை தன் படையாக உள்ள ஒற்றர்கள் செய்தியை அரசருடைய செவியின்கண் புகவிடுவர். முரசறைந்துச் செய்திகளை மக்களுக்குத் தெரிவித்ததைப்

பற்றித் தமிழ் இலக்கியத்தில் தகவல் தொடர்பியல் என்னும் நூலில் காணமுடிகிறது.

## 2.7 செய்தி அறிவிக்கும் முறை

முதுகுடிப் பிறந்தோனாகிய வள்ளுவன் யானை மீதேறி ஊரையும் மன்னனையும் வாழ்த்தி முரசறைந்து செய்திகளை அறிவித்தான் என மணிமேகலை கூறுகிறது.

**"ஒளிறுவாள் மறவருந் தேரும் மாவும்**
**களிறுஞ் சூழ்தரக் கண்முர சியம்பிப்**
**பசியும் பிணியும் பகையும் நீங்கி**
**வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி**
**அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென்"[7]**

கண்ணகி சிலைக்குக் கல் எடுக்கச் சென்றதை வள்ளுவன் பட்டத்து யானையின் மீதேறிப் பறை அறிவித்தான் என்று சிலம்புக் காட்டுகிறது.

### 2.7.1 கல்வெட்டுகள்

சங்க இலக்கியத்தில் நடுகல் பற்றிய செய்திக் காணப்படுகிறது. போரில் வீரமரணம் எய்தியவர்களுக்கு வைக்கப்படும் கல்லை நடுகல் என்பர். நடுகல்லில் வீரனின் பெயர், அவன் ஆற்றிய வீரச்செயல், பெருமை, மடிந்ததற்குக் காரணம் போன்ற மரணச் செய்திகள் எழுதப்பட்டிருக்கும். நடுகற்கள் மரணச்செய்திகளை அறிவிக்கும் நிறுவனமாக விளங்கின. நடுகல்லில் வீரனின் பெயரை எழுதி, மாமரத்தின் நிழலிலே நட்டு வழிபடுவர் என்பதை,

**"………… பெயர்மருங் கறியார்**
**கல்லெறிந் தெழுதிய நல்லரை மரா அத்த**
**கடவுள்"[8]**

என மலைபடுகடாம் (394-396) கூறுகிறது. நடுகல்லில் வீரரது பெயரையும், சிறப்புகளையும் பொறித்து வைத்துள்ளதை அகநானூறு கீழ்க்காணும் பாடல் மூலம் (67:8-11) சான்றளிக்கிறது.

**“நல்லமர்க் கடந்த நானுடைய மறவர்**
**பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்**
**வேலூன்று பலகை”**[9]

அரசன் ஒருவருக்கு ஓர் இடத்தை அல்லது ஓர் ஊரைப் பரிசாகக் கொடுத்ததை ஊராருக்குத் தெரிவிக்கக் கல்லில் செதுக்கி வைத்தான். கி.மு 49-இல் மரணம் அடைந்த ‘பாம்பே’ எனும் மன்னனின் இறப்புச் செய்தி. இத்தாலியில் உள்ள ஆசுடிரியா என்னும் இடத்தில் உள்ள அகலமான கற்பாறைகளில் குறிக்கப்பட்டுள்ளன. அசோகர் காலத்தில் அரசு கட்டளைகளும், அறச் செயல்களும், புத்த சமயக் கொள்கைகளும், தூண்களிலும் கற்பாறைகளிலும் செதுக்கி வைக்கப்பட்டன. இன்றும் தமிழ் நாட்டுக் கோயில் சுவர்களில் கல்வெட்டுக்களைக் காணலாம். குகைகளில் பல செய்திகளை எழுதி வைத்துள்ளதை காணமுடிகின்றது.

### 2.7.2 செப்பேடுகள்

தமிழர்கள் செய்திகளைச் செப்பேடுகளிலும் பொறித்து வைத்துள்ளனர் என்பதை கி.பி.10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சின்னமனூர்ச் செப்பேட்டில்,

**“மகாபாரதம் தமிழ்ப் படுத்தும்**
**மதுராபுரிச் சங்கம் வைத்தும்”**[10]

என்னும் வரிகள் மூலம் புலானகின்றது.

### 2.7.3 கூத்து–நாடகம்

சங்க காலத்தில் கூத்தும், நாடகமும், நாட்டியமும் சிறந்த இடத்தைப் பெற்றிருந்தன. வாடவன்னியின் வளம் பல தரூஉ நாடு பல கழிந்த பின்றை என்று வள்ளிக் கூத்து பற்றிப் பெரும்பாணாற்றுப் படை கூறுகிறது.

மலைவாழ் மக்கள் மிகுதியாக ஆடுவது குரவையாகும்.

**“நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரோடு**
**மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென**
**வான்றோய் மீமிசை யயருங் குரவை”**[11]

குரவையாட்டத்தைப் பற்றி மலைபடுகடாம் (302-322) பாடல் வழி தெளிவாகிறது. மழை உச்சியில் கள் குடித்த குரவர் சிறுப் பறைக்கு அப்பெண்கள் வேங்கை மரத்தடியில் குரவை ஆடுவர் என நற்றிணையும் (276) புறநானூறும் கூறுகின்றன. விழாக் காலங்களிலும் இக்கூத்து ஆடப்பட்டது. அரசன் அரண்மனையில் அமர்ந்திருக்க அங்கு கூத்து ஆடப்பட்டது. கூத்தில் சிறந்து விளங்கியவர் கூத்தர்கள் எனப்பட்டனர். சங்ககாலத்தில் கூத்து நடக்கும் இடம் கூத்தர் ஆடுகளம் எனப்பட்டது. சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் பலவகை நாடகங்களும், கூத்துகளும் இருந்துள்ளதையும் அடியார்க்கு நல்லார் உரையில் பண்டையகாலத்துக் கூத்துவகைகளையும் அறிய முடிகின்றன.

### 2.7.3.1 கூத்தின் வகைகளாவன

துணங்கைக் கூத்து

வென்றிக் கூத்து

விநோதக் கூத்து

போன்ற பல வகையான கூத்துகள் தமிழகத்தில் இருந்தன. கூத்தின் மூலமாகவும், நாடகத்தின் மூலமாகவும் மக்களுக்கு செய்திகள் சென்றடைந்தன. படிக்காத பாமர மக்களுக்கும் எளிதில் புரிந்து கொள்ளும் படியாக செய்திகள் எடுத்துக் கூறப்பட்டன.

### 2.7.4 காதல் கடிதங்கள்

மாதவி தாழைப் பூவின் வெள்ளிய இதழாகிய தோட்டியில் பிச்சினது வளவிய நாளரும்பை எழுத்தாணியாகக் கொண்டு,

செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்துக் கோவலனுக்குக் கடிதம் எழுதினாள் என்று சிலம்பினால் அறிய முடிகிறது.

**“மன்னுயி ரெல்லாம் மகிழ்துணை புணர்க்கும்**
**இன்னிள வேனில் இளவர சாளும்**
**அந்திப் போதகத்து அரும்படர்த் தோன்றிய**
**திங்கட் செல்வனும் செவ்விய னல்லன்**
**புணர்ந்த மாக்கள் பொழுதிடைப்படுப்பினும்**
**தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்**
**நறும்பூ வாளியின் நல்லூயிர் கோடல்**
**இறும்பூ தன்று இ∴தறிந் தீமின்”**[12]

இளவேனில் என்னும் அரசன் அரசாள்கிறான். அவன் ஆட்சியில் மக்கள் எல்லாம் தத்தம் துணையோடு இருக்கின்றன. அந்திப் பொழுது தோன்றும் வேளையில் ஆட்சி செய்யும் அரசனோ நல்லவனாக இல்லை. துணையோடு கூடியிருந்த மக்கள் சிறிது பொழுது பிரிந்தாலும் மலரம்பு தொடுத்து வருத்துகிறான். ஆகவே அருளல் வேண்டும் என்பது இப்பாடலின் பொருளாகும். மாதவி வரைந்த அக்கடிதத்தை வயந்தமாலை எடுத்துச் சென்று பிரிந்த கோவலனிடம் கொடுத்தாள்.

**“கண்மணி யானையாற்குக் காட்டுக வென்றே**
**மண்ணுடை முடங்கல் மாதவி யீத்ததும்”**[13]

என்னும் வரிகள் மாதவி கோவலனுக்கு எழுதிய இரண்டாவது கடிதமாகும். இக்கடிதத்தை மாதவி கோசிகனிடம் கொடுத்து அனுப்பினாள். இவ்வாறு கடிதத்தின் வாயிலாகவும் தகவல் சென்றடைந்ததை சிலம்பு எடுத்து இயம்புகின்றது.

### 2.7.5 அரசியல் கடிதம்

ஏமாங்கத நாட்டு அரசன் சச்சந்தனை அவனது அமைச்சன் கட்டியங்காரன் கொன்று அரசுக் கட்டில் ஏறினான். சச்சந்தனுடைய மைத்துனன் கோவிந்தன் கட்டியங்காரன் மேல் சினம் கொண்டான்.

இதைத் தெரிந்துக் கொண்ட கட்டியங்காரன், கோவிந்தனுக்கு ஒரு கடிதம் எழுதினான் அதில்,

**“விதையத்தார் வேந்தன் காண்க**
**கட்டியங் கார னோலை**
**புதையவிப் பொழிலைப் போர்த்தோர்**
**பொய்ப்பழி பரந்த தென்மேற்**
**கதையெனக் கருதல் செய்யான்**
**மெய்யெனத் தானுங் கொண்டான்**
**சிதையவென் னெஞ்சம் போழ்ந்து**
**தெளிப்பினும் தெளிநர் யாரோ”**[14]

அசனிவேகம் என்னும் யானை தான் சச்சந்தனைக் கொன்றது. பழி என்மேல் இல்லை என்று கோவிந்தனுக்கு கடிதம் எழுதினான். இக்கடிதத்தின் வாயிலாக தற்காலத்திலே அனுப்புநர், பெறுநர் அமைப்பு தோன்றியிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகின்றது.

### 2.7.6 சீட்டுக் கவி

சி.சுப்பிரமணி பாரதி 2.5.1914 எழுதிய இரண்டு சீட்டுக்கவிகள் பாரதியார் கவிதைகள் எனும் நூலில் இடம்பெற்றுள்ளது. சமீன்தாரின் சிறப்புகளும், புலவர்களின் சிறப்புகளும் இப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன. புலவர்களை ஆதரிக்க வேண்டியது சமீன்தாரின் கடமையொன்று அவர் கூறியுள்ளார்.

**“வியப்புமிகும் புத்திசையில் வியத்தகுமென்**
**கவிதையினை வேந்தனே!**
**நின் நயப்படுசந் நிதிதனிலே நான்பாட நீ கேட்டு**
**நன்கு போற்றி**
**ஜயப்பறைகள் சாற்றுவித்துச் சாலுவைகள்**
**பொற்பைகள் ஜதிபல்லக்கு**
**வயப்பரிவா ரங்கன் முதற் பரிசளித்துப்**
**பல்லூழி வாழ்க நீயே!”**[15]

இப்பாடல் ஓலைத்தூக்கு என்னும் தலைப்பின் கீழ் அமைந்துள்ளது.

### 2.7.7 மறுமலர்ச்சிக் காலம்

#### 2.7.7.1 அச்சு

கி.பி 1300 முதல் 1600 வரை ஐரோப்பாக் கண்டம் முழுவதும் அறிவு வளர்ச்சி பரவியது. அறிவு வளர்ச்சியின் காரணமாக நூல்களின் தேவை அதிகரித்தது. கைப்படிகள் மக்களின் தேவையை நிறைவுச் செய்ய முடியவில்லை. இந்தச் சிக்கலை அச்சிடும் முறைத் தீர்த்து வைத்தது. பல நூற்றாண்டுகளாக ஆசியாக் கண்டத்தில் அறியப்பட்டிருந்த அச்சுக்கலையை ஐரோப்பியர்கள் 1400 வரை அறியவில்லை. ஐரோப்பிய அச்சாளர்கள் முதலில் நூல்களை அச்சிடாமல், விளையாட்டுச் சீட்டுகளில் படங்களை அச்சுக் கட்டையாக தயாரித்தனர். பல அச்சுக்கட்டைகளைத் தயாரிப்பதற்கு நீண்டகாலம் ஆனது. ஒரு பக்கம் அச்சடித்து முடித்தபின் எழுத்துக்களைக் கலைத்து விட்டு அடுத்த பக்கத்தில் சேர்க்கலாம். இந்த நகரும் எழுத்து முறை கி.பி.1000-இல் ஆசியாக் கண்டத்தில் இருந்துள்ளது.

#### 2.7.7.2 ஜான் குட்டன் பெர்க்

ஜான் குட்டன் பெர்க் என்னும் ஜெர்மனியர் கி.பி.1399-இல் மெயின்கயில் பிறந்தார். இவர் ஸ்டராஸ்பர்க்கில் சில காலம் வாழ்ந்துள்ளார். இவர் வணிகராகவும், பொற்கொல்லராகவும் பணியாற்றியுள்ளார். இவர் கி.பி.1430-இல் திராட்சைச்சாறு பிழியப் பயன்படுத்திய கருவியிலிருந்து மர அச்சுப் பொறியை முதலில் கண்டுப் பிடித்தார். அவர் மரத்திற்குப் பதில் உலோகத்தையும், அச்சுப்படிமைக்குப் பதில் தனித்தனி எழுத்துக்களையும் உருவாக்கினார். ஐரோப்பாவில் முதன் முதலாக அச்சுக்கூடத்தை நிறுவினார். கையெழுத்துக்குப் பதிலாக அச்சுப்படிவத்தைப் பயன்படுத்தினார். மக்களின் பலர் அச்சுக் கலையை ஏற்றுக்

கொள்ளவில்லை. இது சைத்தானின் சூழ்ச்சி எனக் கூறினார். அச்சுக் கலையின் மேன்மையினை உலகிற்கு அறிய செய்ய அறிவியல் நூல்களை வெளியிட்டுள்ளனர். இதனால் மக்கள் விவிலியம் பற்றியும் சமயத்தைப் பற்றியும் நன்றாகத் தெரிந்துக் கொண்டு அதன் விளைவாகச் சிலர் கத்தோலிக்கச் சமயத்தின் நடைமுறைச் செயல்களைக் கேள்வி கேட்கத் தொடங்கினர்.

### 2.7.7.3 புதிய கண்டுபிடிப்புகள்

தொடர்பைப் புரட்சிகரமானதாக ஆக்கப் பல புதிய கண்டுபிடிப்புகள் கண்டுபிடிக்கப்பட்டன. கி.பி.1811-இல் பிரிடுகோயிங் என்பவர் அச்சு இயந்திரத்தை இயக்க நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். கோயிங்கின் அச்சு இயந்திரத்தைப் பயன்படுத்தி டைமஸ் ஆப் இலண்டன் மற்றும் பல செய்தித்தாள்கள் அதிக எண்ணிக்கையில் அச்சிடப்பட்டன. பிரிட்டனில் வெளிவந்த முதல் பத்திரிகை ஆக்ஸ்போர்டு கெசட் ஆகும். கி.பி.1702-இல் ‘டெய்லி கௌரசும்’ கி.பி.17-இல் ‘டெய்லி போட்டும்’ வெளிவந்தன. ‘டைம்ஸ்’ என்னும் நாளிதழ் கி.பி.1785-இல் தொடங்கப்பட்டது. இது உலகின் மிகச் சிறந்த நாளிதழ்களில் ஒன்றாக மதிக்கப்படுகிறது. அல்போனி நாட்டு முதல் நாளிதழான ‘தாரபோனி’ கி.பி.1913-இல் வெளிவந்தது.

கி.பி.1890-இல் தாமசு ஆல்வா எடிசனும், ஆய்வாளர்கள் பிறரும் திரைப்படம் உருவாக்குவதில் வெற்றி கண்டனர். தாமசு ஆல்வா எடிசன் ‘சினிட்டோஸ்கோப்பு’ என்னும் சலனப்படக் கருவியைக் கண்டுபிடித்தார். வில்லியம் பிரிசுகிரீன் என்பவர் ‘சினிமோட்டார் கிராபி’ என்னும் கருவியைக் கண்டுபிடித்தார். எட்வர்டு முப்பிரிட்சு என்பவர் சூப்ராக்சு கோப்பைக் கண்டுபிடித்தார். லூமியர் சகோதரர்கள் சினிமாட்டே

கிராபியைக் கண்டுபிடித்தனர். அதன் பின் திரைப்படம் மிகப்பெரிய பொழுது போக்குக் கருவியாகவும், விளம்பரச் சாதனமாகவும், செய்திகளை விளக்கிக் கூறும் தகவல் தொடர்புக் கருவியாகவும் மாறியது.

### 2.7.7.4 மின்னியல் காலத் தொடக்கம்

மனித இனம் தோன்றிய நாள் முதல் இன்றைய நாள் வரை அறிவியலாளர்கள் தொடர்புத்துறையில் புதுப்புதுக் கருவிகள் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கின்றனர். மனிதன் வசதியாக வாழ வேண்டும் என நினைத்து புதியவற்றைக் கண்டுப்பிடித்தான். மனித வாழ்வின் வேகம், எதையும் விரைவாகச் செய்ய வேண்டும் என்னும் உந்துதல் போன்றவை புதிய கண்டுபிடிப்புகளுக்குச் சில கராணங்களாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் அணு கண்டுபிடிக்கப்பட்டது. அதற்குப் பிறகு அறிவியலில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. தொடர்புக்குத் தொலைப்பேசியும், தந்தியும் பயன்பட்டன. மின்னியல் காலத்தில் தகவல் குறியீடுகள் விண்வெளி மூலமாக அனுப்பிப் பெறப்பட்டன.

### 2.7.7.5 வானொலி

மார்க்கோணி, மேக்சுவெல் போன்றோர் அத்துறையில் ஆய்வு நடத்தி, சமுதாயத்திற்கு பயனுள்ள சேவைகளைச் செய்துள்ளனர். விண்வெளியில் மின்காந்த அலைகள் ஒலிவேகத்தில் பயணம் செய்கின்றன என்று மேக்சுவெல் கூறினார். அதன்பின்னர் பலர் அத்துறையில் ஈடுபாடு காட்டினர். 1894-ஆம் ஆண்டு மார்க்கோணி என்பவர் மின்காந்த அலைகள் வழியாகச் சைகளை அனுப்பும் முறையைக் கண்டறிந்தார். அவர் கண்டுபிடிப்புக்கு கம்பில்லாத்தந்தி எனப் பெயரிட்டார். மார்க்கோணி வானொலி ஒலிபரப்பிற்கு வித்திட்டார்.

### 2.7.7.6 தொலைக்காட்சி

ஜான்லோகி பெயர்டு தொலைக்காட்சியைக் கண்டுபிடித்தார். செருமானியப் பொறியாளர்கள் காந்த நாடாவில் ஒலியைப் பதிவுச் செய்யும் கருவியைக் கண்டுபிடித்தனர். 1950-இல் காந்த நாடாவில் படத்தையும் ஒலியையும் பதிவு செய்யும் வீடியோ ரிக்கார்டர்கள் கண்டுபிடிக்கப்பட்டன. 1970-இல் வீடுகளில் பயன்படுத்தும் கேசட் வீடியோ டேப்ரிக் கார்டர்கள் நடைமுறைக்கு வந்தன.

### 2.7.7.7 செயற்கைக் கோள்

கிளார்க்கு என்னும் ஆங்கில எழுத்தாளர் செயற்கைக் கோள்களைத் தொடர்புக்குப் பயன்படுத்தலாம் என்னும் கருத்தை உலகிற்கு வழங்கினார். 1945-இல் செயற்கைகோள் ஆராய்ச்சி தொடங்கலாம் என சிந்தனை தோன்றியது. 1958-இல் முதல் செய்தி ஒலிபரப்பும் செயற்கைக்கோள் உருவானது.

செயற்கைக் கோள்கள் பூமியிலிருந்து 22,300 கல் உயரத்தில் வைக்கப்படுகின்றன. அவை பூமியின் வேகத்திற்கு இயைந்து சுற்றுகின்றன. அதனால் உலகின் எந்தப் பகுதியுடனும் தொடர்பு கொள்ள முடியும். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஐசனோவரின் கிறித்துமஸ் வாழ்த்துச் செய்தி செயற்கைக் கோளில் ஒலிபரப்பப்பட்ட முதல் செய்தியாகும்.

### 2.7.7.8 கணிப்பொறி

தமிழ்நாட்டில் ‘கோணூல்’ இருந்தது. கோணூல் கலையில் வல்லவர்கள் கோள்நூலார். காலக்கணிதர், கணியன் என அழைக்கப்பட்டனர். சீனர்களின் மணிச் சட்டத்திலிருந்து இன்றைய கணிப்பொறியின் வரலாறு தொடங்குகிறது. ‘கம்ப்யூட்டர்’ என்னும்

சொல்லுக்குக் ‘கணிக்க உதவும் கருவி’ என்பது பொருளாகும். விரைவான தகவல் தொடர்பிற்கு கணிப்பொறி மிகவும் பயன்படுகிறது.

### 2.7.8 பன்னாட்டுச் செய்தித் தொடர்பு அமைப்பு

உலக நாடுகளிடையே விரைவான தகவல் தொடர்புப் பரிமாற்றம் நடைபெற 1962-இல் பன்னாட்டுச் செய்தித் தொடர்பு அமைப்பு உருவாக்கப்பட்டது. அதில் 1,14,000 பங்குதாரர்கள் உள்ளனர். அதை நிர்வகிக்க பதினைந்து நிர்வாக இயக்குநர்கள் உள்ளனர். அது 1965-இல் ‘முதல் பறவை’ என்றும் செயற்கைக்கோளை வானில் அனுப்பியது. உலக தொடர்பிற்கு பயன்படக்கூடிய புதிய கோள்களை வானில் அனுப்பியுள்ளன. அது பன்னாட்டுத் தகவல் தொடர்பிற்கு உறுதுணையாக உள்ளது.

#### 2.7.8.1 தமிழ் இணையம்

தகவல் தொழில் நுட்பம் வானுயுற ஓங்கி வளர்ந்துள்ள இந்நாளில் உலககெங்கும் வாழும் தமிழர்களை இணைக்கும் பாலமாகத் தமிழ் இணையம் உருவாகிவிட்டது. எத்தனையோ தொழில் நுட்பச் சிக்கல்களைக் கடந்து இன்று தமிழின் பெருமை உலகறியப்பட்டு இருக்கிறது. இதற்கான முதல் முயற்சி கடல் கடந்து வாழும் தமிழர்களால் சிங்கப்பூரில் மேற்கொள்ளப்பட்டது. இதற்கான உருவமான தமிழ் இணைய நெறிமுறைக் குழு 1997-இல் சிங்கப்பூரில் கூடி தமிழில் தகவல் தொடர்பை இணையம் மூலம் நிகழ்த்தக் கலந்தாய்வு மேற்கொண்டது. இரண்டாவது கூட்டம் சென்னை நகரில் 1999-இல் நடைபெற்றது. மூன்றாவது கூட்டம் 2000–வது ஆண்டில் மீண்டும் சிங்கப்பூரில் கூடியது. இன்று ஏறத்தாழ எழுபதினாயிரம் தமிழ் இணையங்கள் உலக முழுவதும் தமிழில் தகவல் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டுள்ளன.

இன்று "தமிழ்" என்ற சொல்லை இணையத்தில் இடைவிட்ட நோக்கீடு மூலம் தேடினால் ஐந்து லட்சம் தகவல் களங்கள் நம்மை வியக்க வைக்கின்றன. தமிழ் கற்பிக்கும் இணைய முகவரிகள், தமிழிலக்கிய நூல்கள், தமிழாய்வுகள், தமிழகராதிகள், தமிழிசை, கர்நாடக இசை, நாட்டியம், செய்தித்தாள்கள், வார இதழ்கள், திரைப்படங்கள், தமிழ் நடிகர்கள், நடிகைகள், தமிழக நகரங்கள், கலைகள், தமிழர் வணிகம், கோயில்கள், பல்கலைக்கழகங்கள் என்று பலவாறாய் இணையத் தகவல் தளங்கள் பரந்துக் கிடக்கின்றன. தமிழக இணையப் பல்கலைக்கழகம் ஒன்றை நிறுவியுள்ளது. அறிவியல் வளர்ச்சிக்கு ஈடாக மொழி வளர்ச்சி அமைய வேண்டும் என்பதற்காக தமிழில் கலைச் சொல்லாக்கம் மேற்கொள்ளும் பணி தமிழகத்தில் கடந்த இருபது ஆண்டுகளாக நடந்தேறி வருகின்றன. மொழிப்பெயர்ப்புக்குக் கலைச் சொல்லாக்கம் அடிப்படையானத் தேவையாகும். இவையனைத்தும் இணையத்தளத்தில் ஏற்றப்பட்டுள்ளன.

எதிர்கால இளைஞர்களைத் தமிழார்வம் கொள்ளச் செய்ய இணையத்தினும் சிறந்த சாதனம் வேறில்லை! ஒலி மற்றும் ஒளிபரப்பும் செய்த பணியைப் போல் பல்லாயிரம் மடங்குப் பணியை இன்று தமிழ் இணையம் செய்து வருகிறது.

### 2.7.8.2 விளம்பரம் - ஒரு விளக்கம்

ஒரு செய்தியை அல்லது கருத்தைத் திட்டமிட்ட நபர்களின் நினைவில் நிறுத்துவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் ஊடகத்தின் வழியாகச் சொல்லப்படுவதே விளம்பரம் எனப்படுகிறது. ஒருவர் ரூ.1 லட்சம் நன்கொடை வழங்கினார் என்று வானொலியிலோ, தொலைக்காட்சியிலோ தெரிவிக்கப் பட்டால் அது செய்தியாகிறது. அதுபோல, ஒரு கடை வாசலில் 'அதிரடி விற்பனை', 'தள்ளுபடி

விற்பனை', 'யுகப்புரட்சி' என்றெல்லாம் எழுதி வைத்திருந்தால் அதுவும் பொது மக்களுக்கான ஒரு செய்தியாகவே கருதப்படும்.

இச்செய்தி ஊரின் பல இடங்களிலும் எழுதி வைக்கப் பட்டிருக்குமானால் அது விளம்பரமாகிறது. ஒரு பொருளின் உற்பத்தியும், விற்பனையும், விளம்பரத்தைச் சார்ந்தே உள்ளன. பொருளின் விற்பனைக் குறையாமல் பார்த்துக் கொள்வதற்கும், விற்பனை சரிந்தால் அதனை நிமிர்த்துவதற்கும் வெவ்வேறு வகையான விளம்பர உத்திகள் கையாளப்படுகின்றன.

தொலைக்காட்சியில் பல வணிகப் பொருள்களைப் பற்றி விளம்பரங்கள் தொடர்ந்து மூன்று மாதங்களுக்குக் காட்டப் பெறுகின்றன. சில விளம்பரங்கள் குறிப்பிட்ட சில காலங்களில் தொடர்ந்து வெளியாவதைக் கவனித்திருக்கலாம். கோடைகாலம் தொடங்கிவிட்டால் ரஸ்னா, ∴புரூட்டி போன்ற பல ரசபானங்களின் விளம்பரம் தொடங்கி விடுகின்றன. மக்கள் அன்றாடம் பயன்படுத்தும் சோப்பு, ஷாம்பு, பற்பசை, ஹார்லிக்ஸ் போன்ற நுகர்பொருட்களுக்கு நாள்தோறும் விளம்பரம் செய்யப்படுகின்றன.

### 2.7.8.3 விளம்பர வாயில்கள்

விளம்பரங்கள் மூன்று வகையான வாயில்களில் வழி நம்மை அடைகின்றன. அவையாவன

- ✓ படித்தல்
- ✓ பார்த்தல்
- ✓ கேட்டல்

விளம்பரங்கள் செய்யப்படும் ஊடகங்கள் பலவகைப்படும். அவையாவன

- ✓ அச்சுவழி
- ✓ வானொலி

- ✓ தொலைக்காட்சி
- ✓ திரைப்பட அரங்கு
- ✓ வெளிப்புற மூலங்கள்
- ✓ கண்காட்சிகள்
- ✓ நேரடி அஞ்சல்
- ✓ வணிக மூலங்கள் போன்றவை

அச்சுவழியிலான ஊடகங்களுள் பத்திரிக்கை விளம்பரங்கள், துண்டுப் பிரசுரங்கள், சிறுபுத்தக வடிவிலான விளம்பரங்கள் ஆகியன அடங்குகின்றன. வெளிப்புற விளம்பர ஊடகங்களும் சுவரணைகள், சுவரொட்டிகள், மின்கம்ப விளம்பர போர்டுகள், மின் விளம்பரப் பலகைகள், விளம்பரப் பட்டிகைகள், ஆகாயத்தில் பறந்து நிற்கும் பலூன்கள், சுவர் விளம்பரங்கள், விளம்பர ஊர்திகள் வழியாக விளம்பரம் செய்யப்படுகின்றன.

ஒரு பொருளை வாங்குவதால் ஏதோவொரு சலுகையைப் பெறுகிறோம் என்ற எண்ணத்தை ஏற்படுத்தும் முறையில் அமைந்த விளம்பரங்கள் 'வணிகமுறை விளம்பரங்கள்' எனப்படுகின்றன. விற்பனையாளர்களால் செய்யப்படும் பின்வரும் சலுகைகள் வியாபார நோக்கம் கருதிய விளம்பரங்களேயாகும். (எ.கா)

| | | |
|---|---|---|
| இலவசப் பொருள் | - | ஒரு மெத்தை வாங்கினால் இரண்டு தலையணைகள் இலவசம் |
| விலை குறைப்பு | - | ஆடை ரகங்களுக்கு 50% தள்ளுபடி |
| விழாக்கால சலுகைத் | - | தீபாவளி சமயத்தில் தங்க திட்டம் நகை வாங்கினால் செய்கூலி இல்லை |

இவற்றைப் போலவே ஒன்றுக்கு மேல் வாங்கினால் விலை குறைப்பு, மீண்டும் பயன்படுத்தக் கூடிய பெட் ஜார்கள், புதிர்ப்போட்டி, குழந்தைகள் ஓவியப்போட்டி, வெளிநாட்டுச் சுற்றுலா வாய்ப்பு, உறைகளைக் கொடுத்துப் பரிசுப்பொருள் வாங்குதல் போன்ற அறிவிப்புகளைச் செய்து விளம்பரங்கள் வெளியிடப்படுகின்றன.

### 2.7.8.4 தகவல் பாதுகாப்பு

சென்னை அண்ணாசாலையில் இருந்த ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் பதினான்கு மாடிக்கட்டிடம் மின்கோளாறு காரணமாகத் தீப்பிடித்து எரிந்ததை யாரும் மறந்திருக்க முடியாது. திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரியின் நூலகம் வெள்ளத்தில் மூழ்கியதால் எவ்வளவோ அரிய புத்தகங்கள் அழிந்து போயின. இயற்கையின் சீற்றத்தால் பல அரிய தகவல்களை இழந்து போக நேருகின்றன. அவற்றைப் புனரமைப்பு செய்ய அரும்பாடுபட வேண்டியுள்ளன.

இயற்கை சீற்றம் மட்டுமின்றி தகவல் திருட்டு இன்று பரவலாகிவிட்டது. ஒழிப்பட நாடாக்கள் திருட்டுப் படங்களுடன் விற்பனை ஆகின்றன. திரை அரங்கத்தில் படம் ஓடுவதற்குள் திருட்டுப் படநாடாக்கள் வெளியே பரவிவிடுகின்றன.

மேலாண்மைத் தகவல் அமைவில் உள்ள தகவல்களுள் எல்லோரும் பகிர்ந்து கொள்ளும் தகவல்களும் உண்டு. மிகவும் அந்தரங்கமான தகவல்களும் உண்டு. அந்தரங்க தகவல்களை யாரும் எளிதாக அணுகாத முறையில் காப்பாற்ற வேண்டும்.

மேல்நாடுகளில் கணிணிக் கிருமிகளால் ஏற்பட்டுள்ள இடையூறுகள் கொஞ்ச நஞ்சமல்ல. கணிணியின் ஆற்றல் மிகுதியாயிருந்தாலும் ஒரு சிறு பறவை பெரிய விமானத்தின்

இயக்கத்தையே பாதிப்படையச் செய்வது போல, சிறு கவனக்குறைவு கூட கணிணியின் செயற்பாட்டைக் குலைத்துவிடுகிறது.

நம் நாட்டில் மின்சாரத்தடை என்பது பழக்கமாகிவிட்டது ஒன்று. தகவல்கள் சரிபார்த்துக் கொண்டிருக்கும் போது மின்சாரம் நின்று போனால், அதுவரை செய்த அவ்வளவு பணியும் வீணாகிப்போகும். ஒழுங்கு நடவடிக்கைக்குள்ளான பணியாளர் நிறுவனத்தின் மீது காழ்ப்புக் கொண்டு பல அரிய தரவுகளையும், தகவல்களையும் சிதைத்துவிடக் கூடும். எனவே தகவலைப் பாதுகாப்பது தகவல் மேலாளரின் இன்றியமையாப் பணியாகும்.

குறுந்தகடுகளைப் பாதுகாப்பான இடத்தில் வைத்துப் பூட்டவேண்டும். முதன்மையான ஆவண நகல்களை வேறு இடத்தில் வைத்துக் காப்பாற்றுவது நல்லது. அலுவலக நேரத்தைத் தவிர்த்து மற்ற நேரங்களில் பணியாளர்கள் தரவு மையத்துக்கு வருவதைத் தவிர்க்கலாம்.

தொலைபேசியில் பேசும்போது அந்தரங்கத் தகவல்களை தவிர்க்க வேண்டும். நாம் பேசுவதை இன்னொரு மூன்றாம் நபர் கேட்டுக் கொண்டிருப்பார் என்ற உணர்வு இருக்க வேண்டும். இன்று ஒட்டுக் கேட்பது அதிகமாகிவிட்டது. அரிய தகவல்கள் போட்டியாளருக்குப் போய் சேர்ந்துவிடக் கூடும்.

அமெரிக்க உளவுத் துறையில் அதிகமாகப் பேசமாட்டார்களாம். பேச வேண்டியதை எழுதிக் காட்டுவார்களாம். கோப்புகளின் ‘‘பார்வைக்கு மட்டும்’’ என்று எழுதியிருக்குமாம். ஏனென்றால், பேசுவதை யாராவது ஒட்டுக்கேட்டுவிடலாம். அதைத் தவிர்க்கவே இந்த நடைமுறை. தகவல்களைக் காப்பது நிறுவனத்தைக் காப்பது ஆகும்.

இன்று போலி பொருட்கள் சந்தையில் நடமாடுவதற்கு காரணம் நிறுவனங்களின் தொழில்நுட்ப இரகசியம் காப்பாற்றப்படாததுதான். பிற நிறுவனங்களில் இருந்து முறையான வழியில் விண்ணப்பம் அனுப்பாமல் நேரடியாக விண்ணப்பம் அனுப்புவர்களைப் பணியில் அமர்த்தக் கூடாது.

ஒரு நிறுவனத்தின் உண்மையானச் சொத்து பணியாளர்கள் தான். அவர்களுக்குப் போதிய பயிற்சி அளித்து நம்பிக்கைக்குரியவர்களாக வைத்திருத்தல் வேண்டும். மறைமுக சோதனைகள் மூலம் அவர்களைப் பற்றிய பண்பை அறிந்து நம்பிக்கைக்கு உகந்தவர்களை தகவலகத்தில் இருத்திக் கொள்ளப்படுகின்றன.

## 2.8 தொடர்பியல் செயல்முறை

மனிதன் குழுவாகவும், ஒற்றுமையாகவும், ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ மொழி உதவிச் செய்கிறது. மனிதனின் அனைத்துச் செயல்களும் தொடர்பியலில் அடங்கியுள்ளன. மனிதனின் மனநலம் பாதித்தல் உறவுமுறிவு, இன்பம், துன்பம், வெற்றி, தோல்வி, போன்றவை தகவல் தொடர்பில் அடங்கியுள்ளன. தொடர்பியலில் செய்திகள் அல்லது மனநிலைகள் பகிர்ந்து கொள்ளப் பெறுகின்றன. தொடர்புச் செயல்முறை ஐந்துப் பிரிவுகளை உடையது.

மூலம் → அனுப்புநர் → செய்தி → பெறுநர் → எல்லை
இவ்வாறு செய்தியானது ‘அ’ விடமிருந்து ‘ஆ’விடம் சென்றடைகிறது.

தனிமனிதன் பேச்சு, உடலசைவுகள், செய்தித்தாள் போன்றவை செய்தி மூலம் ஆகும். கையசைத்தல், எழுத்து, ஒலியலைகள் போன்ற செய்திகளாகும். தனிமனிதன் அல்லது குழு சென்றடையும்

எல்லையாகும். இது தொடர்புச் செயல்முறைக்கு எளிதான விளக்கமாகும்.

திறமையாகத் தொடர்புக் கொள்வது தகவல் தொடர்புக் கருவிகளைப் பயன்படுத்துவதைப் பொறுத்தும் அமையும். ஒரு கருவியின் செயல்முறையை அறிந்தால் அதை கட்டுப்படுத்தவும் முடியும். ‘அ’ என்பவர் தான் அம்பாசிட்டர் கார் விலைக்கு வாங்கியதை ‘ஆ’ என்பவருக்குத் தெரிவிக்க விரும்புகிறார். ‘அ’ வின் மூளையில் அம்பாசிடர் காரோடு தொடர்புடைய பல செய்திகள் உள்ளன. அம்பாசிடர் கார் வாங்க கொடுத்தப் பணம் அப்பணத்தை பெற்ற முறை, அம்பாசிடர் காரின் மாடல், நிறம், பெட்ரோல் அல்லது டீசல், கார் வாங்கிய இடம் போன்றவற்றை ‘ஆ’ விற்குத் தெரிவிக்க மனத்தில் நினைத்துள்ளார்.

வாய், நாக்கு போன்றவற்றை நரம்புகளால் கட்டுப்படுத்தப்படுகின்றது. ‘அ’ பேசும் போது செய்தி உருவம் பெற்று ஒலி அலைகளாக மாறி, பேச்சுக் கருவிகளின் வழியாக வெளியே வந்து காற்றில் கலந்து ஒலி அலைகளாக மாறி ‘ஆ’ விடம் சென்றடைகிறது. ‘ஆ’ வின் மூளையில் உள்ள கேட்கும் நரம்புகள் அதை பெறுகிறது. ‘அ’ அனுப்பிய சமிக்கையை ‘ஆ’ செய்தியாகப் பெறுகிறார். இவ்வாறு செய்தியானது அ-விடமிருந்து ஆ-விடம் சென்றடைகின்றது.

பேசும்போது, பேசும் முன் நினைத்தல், பேசும் போது செய்திகள் பரிமாறப்படுதல், கேட்டல் என்னும் மூன்று செயல்கள் நடைபெறுகின்றன. இவை ஒவ்வொன்றும் தனித்தனியானவை.

ஒவ்வொன்றிற்கும் குறிப்பிட்ட பணி உண்டு. இருப்பினும் இம்மூன்றையும் தொடர்பியல் செயல்முறை என்பர்.

தனிமனிதனைப் பாதித்த செய்தியைப் பிறருடன் பகிர்ந்துக் கொள்வதற்காக மற்றவர்களிடம் பேசுதல் அல்லது பத்திரிகையில் எழுதுதல் போன்ற செயல் தொடர்பு எனப்படும்.

ஒருவர் செய்தியைப் பெற்று அதற்கு ஏற்றாற்போல் செயல்படத் தொடங்குவார். அதை ஒரு படத்தால் விளக்கலாம்.




இவற்றில் மீள் தொடர்பு இல்லாததால் இதை ஒருவழித் தொடர்பு எனக் கூறலாம்.

## 2.9 தொடர்பியல் கூறுகள்

விடுதியில் தங்கிப் படிக்கும் மாணவன் ஒருவன் தன் தந்தைக்குப் பணம் கேட்டுக் கடிதம் எழுதுகிறான். உறையில் முகவரி எழுதாமல் அஞ்சல் பெட்டியில் போட்டுவிடுகிறான். கடிதம் சேருமா, சேராதா? இங்கு மாணவன் தகவலாளன், தந்தை பெறுநர் ஆவார். கடிதம் கருவி அல்லது ஊடகம் ஆகும் செய்தித் தொடர்பில்,

செய்திகளை அனுப்புதல்

குறிப்படுத்துதல்

பெறுநர் குறிமீட்டல்

செய்தி அனுப்பும் கருவிகள்

தொடர்புக் கருவிகள் போன்றவை முதன்மை இடம் பெற்றுள்ளன.

செய்தித் தொடர்பில் தகவலாளியின் நோக்கம் தலையாய இடம் பெறுகிறது. அர்த்தங்களை உருவாக்கலும் பரிமாறிக் கொள்ளலும் செய்தித் தொடர்பு ஆகும். தகவலாளி மக்களோடு தொடர்புக் கொண்டு அர்த்தங்களை உருவாக்குகிறார். மக்களில் சிலர் செய்தியைத் தவறாகப் புரிந்துக் கொள்வதும் உண்டு.

தகவலாளிக்கும் பெறுநருக்கும் இடையே பொதுவான பண்பாட்டு அனுபவம் இருக்கும் போது, செய்திக்குப் பொருள் கிடைக்கும். பண்பாட்டு வேறுபாட்டால், ஒரே செய்தியைப் படிக்கும் வாசகர்களுக்கும் புரிந்து கொள்வதில் வேறுபாடு இருக்கும். செய்தித் தொடர்பு என்பது 'அ' என்பவன் 'ஆ' என்பவனுக்கு அனுப்பும் ஏதோ ஒன்று அல்ல. அது சமூக அமைப்பியல் கூறு ஆகும்.




## 2.10 தகவல் தொடர்புக் கருவிகள்

தகவல் தொடர்பில் தகவலாளரையும் பெறுநரையும் தொடர்பு படுத்தும் கருவிகள் தகவல் தொடர்புக் கருவிகள் எனப்படும். தகவலாளர் தன் தேவைக்கேற்ப கருவிகளைத் தேர்வுச் செய்தல் வேண்டும். சில கருவிகள் குறிப்பிட்ட மக்களுக்கு மட்டுமே பயன்படும். எழுத்து வடிவில் உள்ள கருவிகள் படிக்கத் தெரிந்த மக்களுக்கு மட்டுமே பயன்படும். வானொலி, தொலைக்காட்சி போன்ற கருவிகள் சிலருக்கு மட்டுமே பயன்படும். பொதுத் தகவல்களை மக்களுக்குத் தெரிவிக்க வானொலியும் செய்தித்தாளும் நல்ல கருவிகள் பெறுபவரின்

திறமைக்கேற்ற கருவியைப் பயன்படுத்தாவிடில் பல தவறுகள் நேரிடலாம்.

சான்றாக கல்வியறிவற்ற மக்களுக்கு எழுத்துக் கருவிகளைப் பயன்படுத்தக் கூடாது. பெறுபவர் கவனமாகப் பார்ப்பதற்கும், கேட்பதற்கும் ஏற்ற வகையில் அக அமைப்புகள் இருக்கவேண்டும். ஒரு செய்தியைப் பரப்ப தகவலாளர் பல கருவிகளைப் பயன்படுத்தினால் செய்தி சரியாகத் தரப்படும் வாய்ப்புகள் அதிகமாகும். ஒரு செய்தி மிகுதியான மக்களிடம் சரியான மாற்றங்களை உண்டாக்க ஆறு கருவிகளையாவது பயன்படுத்த வேண்டும் என்று ஓர் ஆய்வு கூறுகிறது.

### 2.10.1 ஊடகமும் தடமும்

புகைவண்டியும் பேருந்தும் பூமியில், தரையில் ஓடுகின்றன. இங்கு தரை என்பது ஊடகம் ஆகும். ஊடகம் என்பது பரந்து விரிந்திருப்பதும் புலனாகும். புகைவண்டியும் பேருந்தும் தரையில் ஓடினாலும், புகைவண்டிக்குத் தண்டவாளமும் பேருந்துக்குச் சாலையும் தடங்களாக அமைகின்றன. இவை ஒன்றுக்கொன்று தொடர்பில் காணப்படுகின்றன. அகத்தொடர்பில் தகவலாளரும் பெறுநரும் ஒருவராகவே இருப்பதால் ஊடகமும் இல்லை தடமும் இல்லை. நேர்த்தொடர்பில் காற்று ஊடகமாகவும் உடலசைவு வாய்வழியாக எழுப்பும் ஒலி தடமாகவும் உள்ளன. பத்திரிகைகளில் தான் ஊடகமாகவும், எழுத்துக்கள், ஓவியம், நிழற்படங்கள், படத்துணுக்குகள், கேலிச் சித்திரங்கள், கருத்துப்படங்கள் போன்றவை தடங்களாகவும் இருப்பதை அறியமுடிகின்றன. மின்சாதனங்களான தொலைக்காட்சி, வானொலி போன்றவற்றில் மின்காந்த அலைகளே தடமாக அமைகின்றன.

### 2.10.2 தட நம்பகம்

செய்தியைப் பெறுநர் தடத்தின் மீது கொண்டுள்ள நம்பிக்கை தடநம்பகம் எனப்படும். மக்களது நம்பிக்கை கீழ்க்காணும் காரணிகளைப் பொறுத்ததாகும்.

மக்களின் பழக்க வழக்கங்கள்

பொருளாதாரம்

சுற்றுப்புறச்சூழல்

சமுதாய அமைப்பு

கல்வியறிவு

மக்கள் பொதுவாகக் காதால் கேட்டதை விடக் கண்ணால் கண்டதையே மிகுதியாக நம்புகின்றனர். சிலர் பத்திரிக்கையை நம்பும் அளவுக்கு வானொலி, தொலைக்காட்சியை நம்புவது இல்லை. எழுத்தால் எழுதப்பெறும் பத்திரிக்கையை நம்புகின்றனர். ஐயம் தோன்றினால் அதை எடுத்து சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளலாம். கற்றவர்கள் பத்திரிக்கைகளையும் கல்லாதவர்கள் வானொலி தொலைக்காட்சியையும் நம்புகின்றனர்.

### 2.10.3 தொடர்பு வகைகள்

ஆறறிவுள்ள மனிதன்

- ❖ மெய்
- ❖ வாய்
- ❖ கண்
- ❖ மூக்கு
- ❖ செவி
- ❖ மனம்

என்னும் ஆறின் வழியாக தொடர்பு கொள்கின்றன.

### 2.10.4 தொடர்பு வழிகள்

தகவலாளிக்கும் பெறுநருக்கும் இடையில் காணப்படும் இணைப்பு பாலம் தொடர்பு வழிகள் எனப்படும். ‘சேனல்’ என்னும் சொல் தொலைபேசித் தொடர்பிலிருந்து கடன் வாங்கப்பட்ட சொல்லாகும். தொலைபேசி, வானொலி, இதழ்கள், நூல்கள், பத்திரிகைகள், கடிதங்கள் போன்றவைச் செய்தியை அனுப்புநருக்கும் பெறுநருக்கும் இடையே தொடர்பை உண்டாக்குகின்றன. இருவர் பேசும் போது ஒருவர் அனுப்பிய செய்தி அடுத்தவரிடம் ஒலியலையாக செல்கிறது. ஒலி அலையைக் காற்று சுமந்து செல்கிறது.

### 2.10.5 வழி முறைகளின் தன்மைகள்

வழிமுறைகள் நிலையானது, நிலையற்றது என இரண்டாகப் பிரிக்கலாம். புத்தகங்கள், செய்தித்தாள்கள், இதழ்கள், திரைப்படங்கள், போன்றவை நிலையானவை. தொலைக்காட்சி, வானொலி போன்றவற்றில் மிகுதியானக் கால அண்மையும், பத்திரிகைகளில் கணிசமான கால அண்மையும் இருப்பதைக் காணலாம். புத்தகங்கள் நிலையான உணர்வை மிகுதியாகத் தருகின்றன. திரைப்படம், பத்திரிக்கைகள், நாளிதழ்கள், வானொலி, தொலைக்காட்சி போன்றவை மிகக் குறைந்த நிலையான உணர்வைத் தருகின்றன.

### 2.10.6 தொடர்பு வழிகளைத் தேர்ந்தெடுத்தல்

சிறப்பான தொடர்புக்குச் சரியான வழியைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்த வேண்டும். வழிகளைச் சரியாகத் தேர்ந்தெடுக்காவிட்டால் சிறப்பான செய்திகள் கூட சேரவேண்டியவர்களிடம் சென்று சேராது. பல தொடர்புக்கருவிகள் உள்ளன. அந்தக்கருவிகளில் எதைத் தேர்ந்தெடுப்பது என்பது தொடர்பின் நோக்கம், பெறுநரின் வரவேற்பு போன்றவற்றைப் பொறுத்தது ஆகும்.

பொதுக் கூட்டங்கள், கண்காட்சி, கல்விப்பணிகள் ஆகியவற்றைப் பற்றிய அறிவிப்புச் செய்திகள் செய்தி வடிவத்தில் இருக்கும். அச்செய்திகளை வானொலி, செய்தித்தாள், தொலைக்காட்சி போன்ற சாதனங்களில் வழியாகப் பரப்பலாம். தனிமனிதன் அல்லது சிறு குழுவிற்குப் பரிந்துரை செய்யப்படும் செய்திகளின் செயல்பாட்டை அடிப்படையாகக் கொண்டவை. நிறுவனங்கள், அமைப்புகள் போன்றவற்றிற்கு கருத்துக்களை வழங்க உரிய கருவியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

### 2.10.16 தொடர்பின் பண்புகள்

> **"இங்கு தகவலாளரும் பெறுநரும் மாறுவர்.**
>
> **தொடர்புக் கருவிகள் நிலையாக இருக்கும்.**
>
> **இங்கு அதிகாரத் தன்மை அதிகமாக இருக்கும்.**
>
> **உடனே செயலாற்ற முடியாது.**
>
> **இங்குச் செய்திகள் ஒரு பக்கமாகவே செல்லும், எதிர்பக்கமிருந்து பதில் வர நாள்கள் ஆகின்றன.**
>
> **செய்திகள் எல்லோருக்கும் தெரிவிக்கப்படும்.**
>
> **தகவலாளருக்கும் பெறுநருக்கும் அறிமுகம் இல்லை. இங்கு அறிமுகம் இல்லாத முன்பின் பார்த்திராத பேச்சாளர் பெறுநருக்குச் செய்திகளை வழங்குகிறார். இவர்கள் அறிமுகம் ஆகும் போது இருவழித்தொடர்பு ஏற்படுகிறது.**
>
> **தகவலாளி செய்தியைத் தேர்ந்தெடுத்தால், அதற்கு ஒருவழித் தொடர்பு உகந்ததாகும்."[16]**

### 2.10.17 தொழில் நுட்பத் தொடர்பு

அனுப்புநர் பெறுநர் நேருக்கு நேர் சந்திக்காமல் தொடர்பு கொள்வது மறைமுகத் தொடர்பு எனப்படும். ஒருவர் கடிதத்தின் வழியாகத் தொடர்புக் கொள்ளும் போது தனிமைப்படுத்தப்படுகிறார். எழுதத் தொடங்கும் போது தாள், மை, எழுதுகோல் போன்றவற்றைப் பயன்படுத்துகிறார். அதனால் தொழில்நுட்பத் தொடர்பு ஏற்படுகிறது. பத்திரிக்கை, கம்பியில்லாத் தந்தி, வானொலி, திரைப்படம், தொலைக்காட்சி ஆகியவற்றின் கண்டுபிடிப்புகளால் தொடர்பு மிகவும் தொழில்நுட்பம் வாய்ந்ததாக மாறிவிட்டன.

### 2.10.18 தொடர்பியலின் நோக்கம்

பேச்சும் நடத்தையும், கேட்கும் நடத்தையும் வேறுபட்டவை. ஒவ்வொரு நடத்தைக்கும் ஒரு நோக்கம் அல்லது குறிக்கோள் உண்டு. அவை ஒரு குறிப்பிட்ட இலக்கை நோக்கிச் செல்லும். அது அடுத்தவர் நடத்தையில் செல்வாக்கு பெற்று அவர்களுடைய நடத்தையை மாற்றும். தகவலாளியிடம் செல்வாக்குச் சக்தியும், பெறுநரிடம் ஏற்றுக்கொள்ளும் சக்தியும் இருக்கவேண்டும். அதாவது சேமித்தல், ஒன்றுபடுத்தல், முழு இணைப்பு, ஈடுபாடு முதலியவை இருக்கவேண்டும். படிப்பது கேட்பது செய்தியைப் பெறுவது போன்ற தொடர்புகள் ஒருவருடைய அறிவைப் பெருக்கும்.

தொடர்பினை அகத்தொடர்பு, புறத்தொடர்பு என இருவகைப்படுத்துவர். சிலர் நேர் தொடர்பு எதிர்மறைத் தொடர்பு என இருவகையாகப் பிரிக்கின்றனர். இதை நேர்முகத் தொடர்பு, மறைமுகத் தொடர்பு எனவும் பிரிப்பர். எல்லோருக்கும் எளிதில் பொருள் விளங்குவதற்காகத் தொடர்பினைக் கீழ்க்காணுமாறு பயன்படுத்தலாம்.




### 2.10.18.1 நேர்த் தொடர்பு

நேர்த் தொடர்பை அகத்தொடர்பு, புறத்தொடர்பு என இரண்டாகவும் பிரிக்கலாம்.

### 2.10.18.2 அகத்தொடர்பு

ஒருவன் தனக்குத் தானே பேசிக் கொள்வது, தனக்குள்ளேயே தொடர்பு கொள்வது அகத்தொடர்பு எனப்படும். மனித செயலுக்கு அடிப்படைக் காரணமாக விளங்குவது அகத்தொடர்பு ஆகும். அகத்தொடர்பின் உந்துதலே புறத்தொடர்பை மேற்க்கொள்ளத் தூண்டுகிறது. பொருள் கிடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது. செலவு அழுங்கியது போன்றன இதனுள் அடங்கும். 'தன் நெஞ்சே தன்னைச் சுடும்' என்ற பழமொழி அகத்தொடர்பைச் சுட்டுகிறது. ஒரு செயலைச் செய்துவிட்டு அதற்காக வருந்துதல், இப்படிச் செய்யலாம், அப்படிச் செய்யலாம் எனத் திட்டமிடுதல் ஆகியவை அகத்தொடர்பைக் குறிக்கின்றது. அடியவர்கள் இறைவனிடம் முறையிடும் வேண்டுதல்களும் அகத்தொடர்பின் பாற்படும்.

**"கூற்றாயின வாறு விலக்ககிலீர்**
**கொடுமை பல செய்தன நானறியேன்**
**ஏற்றா யடிக்கே இரவும் பகலும்**

**பிரியாது வணங்குவேன் எப்பொழுதும்**
**தோற்றாதென் வயிற்றின் அகம்படியே**
**குடரோடு துடக்கி முடக்கியிட**
**ஆற்றென அடியேன் அதி கைக்கெடில**
**வீரட்டானத்துறை அம்மானே"**[17]

திருநாவுக்கரசு சுவாமிகள் சூலைநோய் தீரும் பொருட்டுச் சிவனை நோக்கி பாடிய இப்பாடல் அகத் தொடர்பையே உணர்த்துகிறது.

### 2.10.18.3 புறத்தொடர்பு

நேரிடைத் தொடர்பு

குழுத் தொடர்பு

மக்கள் தொடர்பு

என மூன்று வகைப்படும். ஒருவர் மற்றவர்களுடன் அல்லது குழுவுடன் அல்லது மக்களுடன் தொடர்பு கொள்வதைப் புறத்தொடர்பு எனலாம்.

### 2.10.18.3.1 நேரிடைத் தொடர்பு

ஒரு சமுதாயம் நடைபெற அடிப்படையாக விளங்குவது தகவல் தொடர்பு. பழங்குடியினரிடமும், வேளாண் குடியினரிடமும் தகவல் தொடர்பு நேருக்கு நேர் இருந்துள்ளன. அவர்கள் தமக்குத் தெரிந்தவர்கள், உறவினர்கள், குடும்பத்தினர்கள் என்று செய்திகளை நேருக்கு நேர் பரிமாறிக் கொண்டனர். தொடர்பியலின் மிகவும் சிறப்பானது நேரிடைத் தொடர்பாகும்.

ஒருவருடைய வாழ்க்கையில் மிகுதியாக நடைபெறுவது நேரிடைத் தொடர்பாகும். வீட்டில் தாய் தந்தையர், மனைவி, குழந்தைகளுடன் பேசல், செய்தித்தாள் போடுபவனுடன் பேசுதல், பால்காரனுடன் பேசுதல், பேருந்தில் நடத்துநரிடம் பேசுதல், அலுவலகத்தில் ஒவ்வொருவருடன் தனித் தனியாகப் பேசுதல் என எங்குப் பார்த்தாலும் நேரிடைத் தொடர்பே மிகுதியாகக் காணப்படுகின்றன.

### 2.10.18.3.2 குழுத் தொடர்பு

பாரூச் ஸ்பினோயா என்னும் டச்சு தத்துவஞானி முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு மனிதர்களைச் 'சமூக மிருகங்கள்' என்றார். அவரது கூற்று சரியென்றே தற்கால உளவியலும் கூறுகிறது. சமுதாயத்தில் வாழும் ஒருவருடைய கண்ணோட்டம், மனநிலை, நடத்தை, பழக்க வழக்கங்கள் முதலியவற்றில் மற்றவர்களின் தாக்கம் இருப்பதைக் காணமுடிகின்றது. மக்கள் தொடர்புச் செய்தியைப் பெறும் முறையில் கூட்டங்களின் ஆதிக்கம் இருக்கும். இக்கூட்டங்களின் ஆதிக்கம் மக்கள் நடத்தையிலும் பிரதிபலிக்கும். பிறர் ஆதிக்கம் அதிகமாக உள்ள மக்களின் மனநிலையில் உள்ள விருப்பு வெறுப்புகளை மாற்றுவது கடினம்.

### 2.10.18.3.3 மக்கள் தொடர்பு

வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம், பத்திரிக்கைகள் போன்றவை மக்கள் தகவல் தொடர்புக் கருவிகளாகக் கருதப்படுகின்றன. இவை மின்சாரக் கருவிகள். தொழிற் புரட்சியினால் தோன்றிய இயந்திரங்கள் மனித ஆற்றலைப் பெருக்கின. செய்திகளைப் பரந்துபட்ட மக்களுக்கு வழங்குவது என்பது மற்ற பொருளாதார வழிமுறைகளையும் கிடைக்கக்கூடிய முதலீடுகளையும், பயிற்சிமிக்க ஆட்களையும் சார்ந்துள்ளன.

தகவல் தொடர்புத் துறையில் கண்டுபிடிக்கப்படும் புதிய கருவிகள் உலகில் உள்ள மக்களுக்குச் சேவை செய்கின்றன. ஒரே சமயத்தில் இலட்சக்கணக்கான மக்களுக்கு செய்திகளையும், கருத்துக்களையும் பொழுது போக்கு கூறுகளையும், ஏதேனும் ஒரு ஊடகத்தின் வழியாக வழங்குவது மக்கள் தொடர்பியல் எனப்படும்.

### 2.10.18.3.4 மிகைப்படுத்துதல்

உண்மைச் செய்தியில் மேலும் சில செய்திகளைச் சேர்த்து அச்செய்திக்கு வலுவூட்டிக் கேட்பவர்களுக்கு ஆர்வமூட்டி, திடுக்கிடவைத்தல் மிகைப்படுத்துதல் எனப்படும். சில சமயங்களில் சாதாரண சிறிய செய்திகளும் மிகைப்படுத்தப்பட்டு பெரிய கலவரங்கள் நடைபெற வழிவகுக்கும்.

## 2.11 தகவல் தொடர்பு வடிவங்கள்

தகவல் தொடர்பு வடிவங்களைக் கீழ்க்காணுமாறு அறிஞர்கள் வகைப்படுத்தியுள்ளனர்.

வாய்மொழித் தொடர்பு

எழுத்து அல்லது அச்சுத்தொடர்

வாய்மொழியற்ற தொடர்பு

விளக்கப்படங்கள்

புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள்

மரபுவழித் தொடர்பு

### 2.11.1 வாய்மொழித் தொடர்பு

வாய்மொழியாகச் செய்தி பரவுவதை, கூறுதல், வருணித்தல், விளக்குதல், எடுத்துக்காட்டுத்தரல் என நான்கு வகைப்படுத்தலாம்.

### 2.11.2 கூறுதல்

செய்தியைப் பரப்ப இம்முறை சிறந்தது ஆகும். வரலாற்றுச் செய்திகள், கதை நிகழ்ச்சிகள் கூறுவதற்கு இம்முறை ஏற்றது. கேட்போர்க்குச் சேவை தோன்றுபடி கவர்ச்சியாகவும் தெளிவாகவும், முறையாகவும் சொற்களில் எடுத்துக் கூற இம்முறை சிறந்தாகக் கருதப்படுகிறது.

### 2.11.3 விளக்குதல்

புதிய கருத்துக்களைத் தெளிவாகப் புரிய வைப்பதற்கும் விளங்காத ஒன்றினை விளக்குவதற்கும் விளக்குதல் முறை பயன்படும். சிலவற்றை செய்துக் காட்டுவதன் மூலம் விளக்கலாம். விளக்குநருக்குப் பொருளைப் பற்றிய அறிவும் அவற்றின் பண்புகளும் அறிந்திருக்க வேண்டும். கேட்பவரின் முன்னறிவைத் தெரிந்து கொண்டு அவர்களது அனுபவத்திற்கு ஏற்பச் சலிப்புத் தோன்றாதபடி தேவையான அளவு விளக்க வேண்டும்.

#### 2.11.3.1 எடுத்துக்காட்டுகள்

விளங்காதவற்றை விளக்குவதற்கு எடுத்துக்காட்டுகள் பயன்படும். சமயக்கருத்துக்களை விளக்குவதற்குச் சமயச் சொற்பொழிவாளர்கள் பல எடுத்துக்காட்டுகளைத் தருவர். தெரிந்ததைக் கொண்டு தெரியாததை விளக்குவதற்கு இம்முறை பயன்படுகிறது.

### 2.11.4 அறிவியல் வளர்ச்சி

நம்முன்னோர்களும் தமிழ்ப்புலவர்களும் மொழி நிலையானது. சட்ட திட்டங்களுக்குட்பட்டது எனக் கூறினர். இன்றைய அறிவியல் பல்வேறு வகையில் துணைபுரிகின்றன. பைந்தமிழில் ஒன்றாக அறிவியல் தமிழ் உள்ளது. ஒரு கல்லூரியில் அறிவியல் தமிழ்பாடமாக வைக்கப்பட்டுள்ளது. எனவே அறிவியல் வளர்ச்சிக்கேற்ப மொழியும் வளர வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. இன்று தண்ணீர் இத்தனை டிகிரி சூடாக உள்ளது என்று கூறுகின்றனர். மொழிக்காக அறிவியல் கருத்துக்களை மாற்றமுடியாது. பிறநாட்டு இலக்கியங்களும், அறிவியல் நூல்களும் தமிழில் மொழி பெயர்க்கப்படுகின்றன.




இங்குப் பொருள் சொற்கள் மற்றும் எண்ணங்களை விட முதலிடம் பெறுகின்றன.

### 2.11.5 மொழியும் தொடர்பியலும்

"நான் சொல்ல வந்தது என்னவென்றால்………" என்று ஒருவர் பேசத் தொடங்கினால் அவரிடம் தெளிவு இல்லை என்பது பொருளாகும். அவர்களால் தெளிவாகத் தெரிவித்த செய்திகளைச் சரியான முறையில் தொடர்பு கொள்ளவும், தாங்கள் சொல்ல வந்தக் கருத்தை முறையாக முழுமையாகச் சொல்லவும் முடியாது. தகவல் தொடர்பிற்கு மொழி கருவியாகவும், வழியாகவும் பயன்படுகிறது. மொழியைப் பயன்படுத்திக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்கிறோம். இடத்திற்கு ஏற்றாற் போலும், பேசும் பொருளுக்கு ஏற்றாற்போலும் சொற்களின் பொருள் மாறுபடும்.

மொழி மனிதர்களின் முதலாளியாகவும் செயல்படுகிறது. மக்களுக்கு கட்டளையிட்டுச் செயல்படத் தூண்டுகிறது. பேச்சுமொழி மனிதனுக்குரியது. மொழி வாழையடி வாழையாக வழிவழியாக பேசப்பட்டு வருகிறது. மொழியிலுள்ள சொற்களை பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கலாம். மொழி மனிதனுக்குச் சிந்தனையாற்றலை அளிக்கிறது.

பேசமுடியாத மனநோயாளிகள் 'செஸ்' விளையாடுவதை காணலாம். பல சமயங்களில் தொடர்பு கொள்ள வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் இருக்கும் போது தொடர்பு ஏற்படுவது உண்டு. எண்ணங்களையும், செயல்களையும், கருத்துக்களையும் உருவாக்குகின்றன. மனம், உடலியற் கூறுகளில் அதிக நாட்டம் செலுத்துகிறது. களவு, காதல், உடலுறவு, போன்றவற்றைக் குறிக்க வெவ்வேறு சொற்களைப் பயன்படுத்த வேண்டும், இல்லை என்றால் சொல்லின் பொருளே மாறிவிடும்.

### 2.11.6 எழுத்து அல்லது அச்சு தொடர்பு

அசோகர் மற்றும் புத்தர் தம் சமயக் கருத்துக்களைப் பாறைகளிலும், தூண்களிலும், செதுக்கி மக்களுக்கு அறிவித்தனர். சங்ககாலத்தில் பனைவோலைகளில் எழுத்தாணிக் கொண்டு எழுதினர். இந்திய அரசர்கள் செப்பேடுகள் மூலம் பல செய்திகளைத் தெரிவித்துள்ளனர். மனிதன் பேசக் கற்றுக் கொண்டு பல ஆண்டுகள் கழித்து எழுதக் கற்றுக்கொண்டான். பெரியவர்கள் தாங்களாகவே எண்ணிப்பார்த்து எழுத்துக்களைக் கண்டுப்பிடித்தனர். முதலில் சித்திர எழுத்துக்கள் தோன்றின. மெசபடோமியா நாட்டில் எழுத்துக்கள் எழுதுவதற்கு களிமண்ணைப் பயன்படுத்தினர். அதை ஆப்பு வடிவ எழுத்து என அழைத்தனர். பண்டைய கிரேக்கர்கள் இடமிருந்து வலமாக எழுதி, வரி முடிந்தவுடன் வலமிருந்து இடமாக எழுதினர்.

அச்சு கலையின் வளர்ச்சியினால் படங்கள், கருத்துப்படங்கள், கேலிச்சித்திரங்கள் போன்றவை நூல்களிலும், பத்திரிகைகளிலும் இடம் பெற்றன. அச்சுக் கலை வளர்ச்சியினால் விரைவாகச் செய்திகளை அனுப்ப முடிந்தன. ஒரு குழுவைச் சேர்ந்த அனைவரும் ஒரே வகையான மொழியைப் பயன்படுத்தினர். அச்சுக் கலை வளர்ச்சியினால் மொழிப்பெயர்ப்பு நூல்கள் பல்வேறு துறை நூல்கள், கல்வி வளர்ச்சி,

தகவல் தொடர்பு, கொள்கைக்களை பரப்ப கூட்டறிக்கைகள், சமய நூல்கள், நூலகங்கள் ஆகியவை தோன்றின. அச்சு வளர்ச்சியினால் அச்சகங்களும் பல புத்தக விற்பனை நிலையங்களும் உருவாகின. இன்று பலவகை நூல்கள், பத்திரிக்கைகள், துண்டறிக்கைகள், சுவரொட்டி விளம்பரங்கள் முதலியவை மக்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் பலவகைச் செய்திகளை வழங்கிக் கொண்டுள்ளன.

### 2.11.7 வாய்மொழியற்ற தொடர்பு

ஆதிகாலத்து மனிதன் அசைவுகள், குறியீடுகள் மூலம் தொடர்பு கொண்டான். அவனுடைய ஒவ்வொரு அசைவிற்கும், குறியீட்டிற்கும் பொருள் இருந்தது. இன்றும் அந்த பொருள் பெற்ற குறியீடுகள், அசைவுகள், தகவல்கள் தொடர்பின் முக்கிய பங்கு வகிக்கின்றன. நேருக்கு நேர்த் தொடர்பான நேரடித்தொடர்புக்கு வாய்மொழிச் சொற்கள் மிகவும் பயன்பட்டன. அதன் பின் தொடர்பிற்க்கு எழுத்துக்கள் பயன்பட்டன. அறிவியல் வளர்ச்சியின் காரணமாக தொடர்பின் நோக்கமும், வழிகளும், கருவிகளும், பெருகிவிட்டன. இக்காலத்தில் ஆளை நேரில் பார்க்காமலும், ஆள் அண்மையில் இல்லாவிட்டாலும் தொடர்பு ஏற்படுவதை காணமுடிகிறது.

#### 2.11.7.1 விளக்கப்படங்கள்

தொடர்பில் மிகுதியான தொடர்புகள் பங்கேற்கும் போது பெறும் செய்தி துல்லியமாக இருக்கும். அதிகமான உணர்வுச் செயல்கள் செய்தியை வேகமாகவும், தெளிவாகவும், புரிந்துகொள்ள வாய்ப்பு அளிக்கின்றன.

#### 2.11.7.2 காணல் கருவிகள்

கண்ணால் பார்க்கக் கூடிய அனைத்தும் காணல் கருவிகள் எனப்படும்.

ஓவியம்

வண்ண ஓவியம்

படங்கள்

கேலிச்சித்திரங்கள்

விளக்கப்படங்கள்

அட்டவணைப் படங்கள்

அசையா நிழற்படங்கள்

அசையும் நிழற்படங்கள்

வரைபடங்கள்

வரிவடிவம்

மாதிரி உருவங்கள்

மணல் தட்டு

அட்டைகள்

தீக்குச்சி வடிவங்கள்

போன்றவை காணல் கருவிகள் ஆகும்.[18]

தனிமனிதனோ, கூட்டமோ, பார்க்கக்கூடிய கருவி, காட்சிக்கருவிகள் எனப்படும். இவை செய்தியை வெளிப்படுத்த உதவுகின்றன. படம், வரைபடம், நிழல் படம், மாதிரி, முப்பரிமான கருவிகள் போன்றவற்றைச் சான்றாக கூறலாம்.

### 2.11.7.3 காணல் கேட்டல் கருவிகள்

பேசும் திரைப்படம், தொலைக்காட்சி, கணிப்பொறி, ஒலி ஒளி நாடாக்கள் போன்றவை காணல் கேட்டல் கருவிகளாகும்.

### 2.11.7.3.1 செயல்படும் வகை

கண்ணால் பார்த்தால் வழுவான நம்பகத் தன்மை தருகின்றது.

பெறுநரின் கருத்தைக் கவருகிறது.

கற்கும் கருத்துக்களைத் தெளிவுபடுத்துகிறது.

மொழி வேறுபாடுகளை அகற்றுகிறது.

வாய்மொழிச் செய்திக்கு வழுவூட்டுகிறது.

செயல்படத் தூண்டுகிறது.

அடிப்படைக் கருத்தின் சிறப்பை மிகுவிக்கிறது.

மிகுதியானத் தகவல்களைத் தருகிறது.

மனதில் எளிதில் பதிகிறது.

கவனச்சிதறலைக் குறைக்கிறது.

செய்தியில் ஈடுபாட்டை மிகுவிக்கிறது.

அறிந்து கொண்டவற்றை மக்களுக்கு எளிதில் நினைவூட்டுகிறது.

இதழுக்கு அழகு தருகிறது.

பழங்காலத்தில் ஓவியம் வழியாக மக்கள் செய்திகளைப் புலப்படுத்தினர். இன்று படிமத்தைப் பயன்படுத்தி, உலகம் முழுவதும் உள்ள மக்கள் கருத்துக்களைப் பரப்புகின்றனர். ஓவியம், வரைபடம் போன்றவை தொடர்புக் கருவிகளாகும். புள்ளி விவரங்களை அட்டவணைகள் எளிதாக விளக்கிவிடும். புள்ளி விவரங்களை விளக்குவதற்கு எழுத்துக்களை விட அட்டவணையே சிறந்தது ஆகும்.

படம் சொற்களுக்காகப் பயன்படுத்தும் ஒரு சாதனமாகும். படம் சிக்கனமானது. சொற்கள் விளக்கத்தை விளக்கிவிடும். பஞ்சமும், வறட்சியும் தாண்டவமாடும் இடத்தில் குழந்தைகள் பட்டினியால் வாடுகின்றனர் என்பதை எவ்வளவு விளக்கமாக எழுதினாலும் பலரின் மனதைத் தொட்டு இரக்கத்தை எழுப்பாது. அப்பணியை சிறிய படம் செய்துவிடும். மலை, ஏரி போன்றவற்றை நேரில் பார்க்க வாய்பில்லாதவர்களுக்குப் படங்கள் வழியாகவும், விளக்கப் படங்கள் வழியாகவும் விளக்கிக் கூறலாம். தூரத்தில் உள்ள பொருள்களையும், மக்களின் வாழ்க்கையும் அறிய உதவும் படங்கள், செய்தியைக் குறைந்த நேரத்தில் எளிமையாகவும் முழுமையாகவும் தெரிவித்துவிடுகின்றன.

### 2.11.7.3.2 புதிய அறிவியல் படைப்புகள்

இன்று இயந்திரங்களை இயக்க இயந்திர மனிதர்கள் வந்துவிட்டனர். கணிப்பொறி தகவல் தொடர்பிற்குப் பயன்படுகிறது.

வீட்டில் ஓய்வாக இருக்கும் போது ‘வீடியோ’ திரையில் படங்களைப் போட்டுக் காணலாம். வானொலி, தொலைக்காட்சிகளில் மிகுதியாக அலைவரிசைகள் இருப்பதால் தொடர்பு அதிகமாகிவிட்டன. அறிவியலில் புதிய படைப்புகளான மின்னியல் கருவிகளே அனைத்துச் செய்திகளையும் வழங்கிடும் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

## 2.12 மரபுவழித் தொடர்பு

### 2.12.1 தன்மைகள்

நாட்டுபுற இலக்கியம் என்பது எழுத்தறிவில்லாத நாட்டுப்புற மக்களிடையே தொன்று தொட்டு வாழையடி வாழையாக வழங்கிவரும் இலக்கியமாகும். நாட்டுப்புறக் கலைகள், நம்பிக்கைகள், இலக்கியங்கள் போன்றவற்றை அறிவிக்கும் இயல் நாட்டுப்புற இயல் எனப்படும். நாட்டுப்புற இலக்கியங்கள் வாய்மொழியாகப் பரவுவதால் மரபுவழிப்பட்டது.

‘நாட்டுப்புறவியல்’ என்பதற்குப் பலர் இலக்கணம் கூறியுள்ளனர். நாட்டுப்புறவியல் என்னும் சொல் நாட்டுப் புறமக்களின் வழக்கங்கள், நம்பிக்கைகள், மரபுகள், நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், மந்திர தந்திரங்கள், பழமொழி, விடுகதை ஆகியவற்றைக் குறிப்பதோடு, தனிமனிதர்களின் முயற்சி கூட்டு முயற்சியாகப் பரிணமிப்பதோடு மாற்று வடிவங்கள் மீண்டும் மீண்டும் வருதலாகிய பண்புகளையும் கொண்டது.

### 2.12.2 தகவல் தொடர்பு அமைச்சகம்

தகவல் தொடர்பு அமைச்சகம் பல்வேறு தகவல் தொடர்புக் கருவிகளின் வழியாக அரசின் கொள்கைகளையும், திட்டங்களையும் நாட்டு மக்கள் எல்லோர்க்கும் தெரியப்படுத்துகிறது. மக்களின் எண்ணங்களையும் பிரதிபலிப்புகளையும் அரசுக்கு எடுத்துக் கூறுகிறது. நம் நாட்டு விளம்பரங்கள் வெளிநாடுகளின் தகவல் தொடர்புக் கருவிகளிலும் இடம் பெறுகின்றன.

தகவல் தொடர்பு மையங்கள் விளம்பர மையங்களாகும். அரசு, பொதுவுடைமை ஆக்கப்பட்ட வங்கிகள் போன்றவை மக்களுக்குச் செய்யும் சேவைகளை மக்களுக்குத் தெரிவிக்கின்றன. மேலும் தகவல் தொடர்புக் கருவிகளின் பணிகளை அறியமுடிகின்றன.

### 2.12.2.1 அறிவித்தல்

தான் கண்ட உண்மைகளை மற்றவர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும் என்னும் அடிப்படை ஆசை மனிதனிடம் உள்ளது. எனவே முதலில் உடலசைவுகளால் தன்னுடைய கருத்தைப் பிறருக்குத் தெரிவித்த மனிதன், பேச்சுமொழி, எழுத்து மொழிகளைக் கண்டுபிடித்தான். பண்டையக்கால மனிதர்கள் தம்முடைய குகைகளில் மனிதர்கள் விலங்குகளை வேட்டையாடுதல் போன்ற சித்திரங்களை வரைந்தனர். இக்கால மனிதன் கணிப்பொறி, மின்சாரம் ஆகியவற்றின் செயல்களை விரும்புகிறான். மின்னணுக் கருவிகள் வழியாக மற்றவர்களுக்குச் செய்திகளை அறிவிக்கின்றான். கடல் வழியாக செய்திகளைக் கொண்டு செல்லப்பட்டபோது உலகம் பெரியதாக தோன்றியது. வானொலி, தொலைபேசி, தொலைக்காட்சி, தொடர்புக்கோள்கள் வழியாகச் செய்திகள் அறிவிக்கப்படுகின்றன.

சமுதாயத்தில் வாழும் மக்களுக்குப் பல குறைகள் ஏற்படலாம். மக்களின் குறைகளை அரசுக்கு அறிவிப்பது தகவல் தொடர்புக்கருவிகள். அரசு மேற்க்கொள்ளும் செயல்முறைகளையும் மக்களுக்கு அறிவிப்பவை அவையே. ஆளப்படுவோர்க்கு இடையே அறிவிப்புப் பரிமாற்றம், கருத்துப்பரிமாற்றம் நடைபெற உதவுகின்றன.

### 2.12.2.2 அறிவுறுத்தல்

ஆறறிவு படைத்த மனிதன் சிறப்பு, அவனது சிந்தனை ஆற்றல் நிறைந்தது. சிந்திக்கும் ஆற்றலே மனிதனை மக்களிடமிருந்துப் பிரித்துக் காட்டுகிறது. தகவல் தொடர்புக் கருவிகள் ஒரு செய்தியுடன்

அதற்குத் தேவையான விவரங்களையும் வழங்கி மக்களைச் சிந்திக்கத் தூண்ட வேண்டும். மத்திய அரசு பஞ்சாயத்து ராஜ்யத்து திட்டத்தை அறிவித்துள்ளது. பஞ்சாயத்து ராஜியத்தினால் ஏற்படும் நன்மை தீமைகளை மக்கள் புரிந்து கொள்ளுமாறு அறிவுறுத்துவது தகவல் தொடர்பு கருவிகளின் பணியாகும்.

### 2.12.2.3 பொழுது போக்கு

தகவல் தொடர்புக்கருவிகள் பொழுதுபோக்கு கருவிகளாகப் பயன்படுகின்றன. வீட்டில் இருந்து கொண்டே பயனுள்ள முறையில் பொழுதுபோக்க அவை உதவுகின்றன. வீட்டில் இருக்கும் பெண்களுக்கு மிகச் சிறந்த பொழுதுபோக்கு கருவிகளாக இவை பயன்படுகின்றன. மனித ஓய்வு இன்பத்தை தேடுகிறது. இவை மனிதனுக்குத் தேவையான இன்பத்தையும் மகிழ்ச்சியையும் எளிதில் தருகின்றன.

திரைப்படம், நடிப்புக்கலை, இசைக்கலை, பேச்சுக்கலை, நடனக்கலை, எழுத்துக்கலை ஆகியவற்றை கோர்வையாக்கித் தருவதால் குழந்தை முதல் கிழவன் வரை அனைவரும் அதை விரும்புகின்றனர். திரைபடங்கள் மனிதனை விட்டுப் பிரிக்க முடியாத ஒட்டுறவைப் பெற்றுவிட்டன.

**“செவிக்கு உணவு இல்லாத போழ்து**
**சிறிது வயிற்றுக்கு ஈயப்படும்.”**[19]

என்னும் குறளில் செவிக்கு உணவாகிய கேள்வி இல்லாத பொழுது, வயிற்றுக்கு சிறிது உணவு இடப்படும் என்பது பரிமேலகழர் உரையாகும். இன்று வயிற்றுக்கு உணவு இல்லாவிட்டாலும் படம் பார்த்து, அந்தக் களிப்பில் பசியை மறக்கலாம் என்னும் மனநிலை மக்களிடம் பரவியுள்ளன. அதில் கலைகளின் கதம்பத்தைக் காணலாம். கண்ணுக்கு விருந்தளிக்கும் நடனம், காதுக்கு விருந்தளிக்கும் இசை, உணர்வுக்கு விருந்தளிக்கும் இலக்கியம், அறிவுக்கு விருந்தளிக்கும் கருத்து போன்றவை உள்ளன.

## 2.13 தொகுப்புரை

தொடர்பியல் என்னும் சொல்லிற்குப் பொதுமையாக்குதல் என்பது பொருள். அதாவது, பெறுநருடைய மனதில் அனுப்புநரின் கருத்து அல்லது கருத்துப் படிவத்தை உருவாக்குகிறது. அனுப்புநருக்கும் பெறுநருக்கும் இடையே நிகழும் செய்தி பரிமாற்றச் செயல் முறையே தொடர்பியல் எனப்படும்.

பன்னெடுங்காலமாக மனிதன் பிறரைப் பற்றி அறிய ஆவலாக இருந்து இருக்கிறான். தன்னுடைய பெருமைகளையும், வீர தீரச் செயல்களையும், இன்ப துன்பங்களையும் பிறருடன் பகிர்ந்து கொள்ள விழைந்தான். மற்றொருவருடன் பழகும்போது, தன்னை மற்றொருவருடன் ஒப்பிட்டுப் பார்த்தான். அதனால் பிறருடைய குறை, நிறை அவனால் அறிந்து கொள்ள முடிந்தன.

உடலசைவதன் காரணமாக பொருள் வேறுபாட்டைக் கொடுத்த போது பண்டைய மனிதன் ஒலிகளைப் பயன்படுத்தினான். இயற்கையாகவே மனிதனிடம் ஒலி இருந்தது. இயற்கையில் கேட்ட ஒலிகளையும் பயன்படுத்தக் கற்றுக் கொண்டான்.

மனிதன் எப்படிப் பேசத்தொடங்கினான் என்பது இன்னும் புலப்படாத புதிராகவே உள்ளது.

சங்க இலக்கியத்தில் நடுகல் பற்றிய செய்தி காணப்படுகிறது. போரில் வீரமரணம் எய்தியவர்களுக்கு வைக்கப்படும் கல்லை நடுகல் என்பர். நடுகல்லில் வீரனின் பெயர், அவன் ஆற்றிய வீரச்செயல், பெருமை, மடிந்ததற்குக் காரணம் போன்ற மரணச் செய்தி எழுதப்பட்டிருக்கும் நடுகற்கள் மரணச்செய்திகளை அறிவிக்கும் நிறுவனமாக விளங்கின.

பல வகையான கூத்துகள் தமிழகத்தில் இருந்தன. கூத்து மற்றும் நாடகம் மூலமாக மக்களுக்குச் செய்திகள் சென்றடைந்தன.

சங்க இலக்கியத்தில் காதல் கடிதங்களை எழுதியதாக சிலம்பும் அரசியல் கடிதங்கள் குறித்து சிந்தாமணியும் கூறுகின்றது.

தொடர்பை புரட்சிகரமாக்கப் பல புதிய கண்டுபிடிப்புகள் கண்டுபிடிக்கப்பட்டன. கி.பி.1811-இல் பிரிடுகோயிங் என்பவர் அச்சு இயந்திரத்தை இயக்க நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். கோயிங்கின் அச்சு இயந்திரத்தைப் பயன்படுத்தி டைம்ஸ் ஆப் இலண்டன் மற்றும் பல செய்தித்தாள்கள் அதிக எண்ணிக்கையில் அச்சிடப்பட்டன.

உலக நாடுகளிடையே விரைவான தகவல் தொடர்பு பரிமாற்றம் நடைபெற 1962-இல் பன்னாட்டுச் செய்தித் தொடர்பு அமைப்பு உருவாக்கப்பட்டது.

தகவல் தொழில் நுட்பம் வானூயர ஓங்கி வளர்ந்துள்ள இந்நாளில் உலகெங்கும் வாழும் தமிழர்களை இணைக்கும் பாலமாக தமிழ் இணையம் உருவாகிவிட்டது.

தனிமனிதன் பேச்சு, உடலசைவுகள், செய்தித்தாள் போன்றவை செய்தி மூலம் ஆகும். கையசைத்தல், எழுத்து, ஒலியலை போன்றவை செய்திகளாகும். தனிமனிதன் அல்லது குழு சென்றடையும் எல்லையாகும். இது தொடர்புச் செயல்முறையாகும்.

தகவல் தொடர்பில் தகவலாளரையும் பெறுநரையும் தொடர்பு படுத்தும் கருவிகள் தகவல் தொடர்பு கருவிகள் எனப்படும்.

அனுப்புநர் பெறுநர் நேருக்கு நேர் சந்திக்காமல் தொடர்பு கொள்வது மறைமுகத் தொடர்பு எனப்படும்.

ஒருவன் தனக்குத் தானே பேசிக் கொள்வதும் தனக்குள்ளேயே தொடர்பு கொள்வதும் அகத் தொடர்பு எனப்படும்.

ஒருவருடைய வாழ்க்கையில் நடைபெறுவது நேரிடைத் தொடர்பு ஆகும்.

வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம், பத்திரிக்கைகள் போன்றவை மக்கள் தொடர்புக் கருவிகாளாகக் கருதப்படுகின்றன.

தகவல் தொடர்பு வடிவங்களை வாய்மொழித் தொடர்பு எழுத்து அல்லது அச்சுத் தொடர்பு, வாய்மொழியற்ற தொடர்பு விளக்கப்படங்கள், புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள், மரபு வழித் தொடர்பு எனப் பிரிக்கப்படுகின்றன.

## குறிப்புகள்

1. தகவல் தொடர்பியல் - ப.1
2. மேலது - ப.2
3. மக்கள் தகவல் தொடர்பியல் - ப.4
4. மேலது - ப.4
5. குறள் 190 – ப.54
6. சிலம்பு (173-177) - ப.225
7. மணிமேகலை விழா (68-72) - ப.46
8. மலைபடுகடாம் (394-396) - ப.372
9. அகநானூறு (67: 8-11) - ப.195
10. தகவல் தொடர்பியல் - ப.26
11. மேலது – ப.27
12. மேலது - ப.29
13. மேலது - ப.29
14. தகவல் தொடர்பியல் - ப.30
15. பாரதியார் கவிதைகள் - ப.99
16. தகவல் தொடர்பியல் - ப.143
17. திருநாவுக். தேவாரம் - ப.40
18. தகவல் தொடர்பியல் - ப.269
19. மேலது - ப.44

# 3. தொகை நூல்களில் தொடர்பு திறன்

**3.0** தொகை நூல்களில் தலைவன் தலைவியிடையே உள்ள காதல் குறித்த தகவல்களைத் தலைவன் மற்றும் தலைவி இருவரும் நேரடியாகப் பகிர்ந்து கொள்ளும் பொருட்டு காதல் துன்பம் ஏற்படும் காலங்களில் ஆறுதல் கூறும் வகையில் குழுத் தொடர்பாக தோழி, செவிலி, நற்றாய், பாங்கன் வாயிலாக தன் துன்ப நிலையைக் கூறும் பொருட்டு தொடர்பு ஏற்படுகிறது. தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் காலங்களில் தலைவி மிகவும் வருந்துகின்றாள். அப்போது தோழி மிகவும் உறுதுணையாக இருக்கின்றாள். தோழி தலைவி இடத்தில் தலைவனைப் பற்றிக் கூறி ஆறுதல் அடையச் செய்வாள். பின் தலைவன் இடத்தில் தலைவியின் நிலையைப் பற்றிக் கூறி தலைவனை விரைவில் மணம் செய்து கொள்ளுமாறு கூறுகின்றாள். தலைவி அன்னம், நாரை முதலிய அஃறிணை பொருட்களின் மூலம் தலைவனுக்குத் தூது விடுகின்றாள். பின் பாணனையும், தோழியையும் தூதுவிடுகின்றாள். தலைவி எதற்காக, யாரை எல்லாம் தொடர்பாளராக அனுப்புகிறாள் என்பதைப் பற்றி இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## 3.1 நேருக்கு நேர் தகவல் தொடர்பு

| தகவலாளர்கள் | நற்றிணை | அகநானூறு | குறுந்தொகை | கலித்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| தலைவி-தோழி | 142 | 13 | 209 | 43 | 134 |
| தலைவன்-தோழி | 89 | 81 | 91 | 25 | 134 |
| தலைவன்-தலைவி | 19 | 15 | 9 | 36 | 61 |
| தலைவன்-தேர்ப்பாகன் | 10 | 20 | 3 | - | 12 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இடைச்சுரத்தோர் கூறியது | 2 | - | 3 | - | 4 |
| தலைவன்-பாங்கன் | 5 | 3 | 18 | 1 | 3 |
| பாணன்-தோழி | - | 1 | - | - | - |
| தோழி வேலனை இகழ்ந்து கூறியது | 1 | - | - | - | - |
| தோழி-உழவர் | 1 | - | - | - | - |
| செவிலி-தோழி | 1 | 8 | 4 | - | 28 |
| தலைவி-கண்டோர் | - | - | 2 | - | 3 |
| செவிலி-தெய்வத்திடம் | - | - | 1 | - | - |
| காதற்பரத்தை-பாங்காயினர் | - | - | 3 | - | - |
| கூனி-குரளனிடம் | - | - | - | 1 | - |
| வாயில்கட்க்குத்-தலைவி | - | - | 1 | - | 2 |
| தலைவன்-சான்றோர் | - | - | - | 1 | - |
| தலைவி-பாணன் | - | - | 2 | - | 17 |
| தலைவி-தெய்வத்திடம் | - | - | 1 | - | - |
| தலைவன்-முல்லை | - | - | 1 | - | 1 |
| செவிலி-நற்றாய் | - | - | 2 | - | 11 |
| பரத்தை-பாங்காயினர் | - | - | 2 | - | 4 |
| அந்தணர்-செவிலி | - | - | - | - | 1 |
| செவிலி-அயலார் | - | - | - | - | 8 |
| பரத்தை-தோழி | - | 2 | - | - | 2 |
| நற்றாய்-காக்கை | - | - | - | - | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பரத்தை-தலைவன் | 3 | - | - | - | 3 |
| தலைவி-அயலார் | - | - | - | - | 3 |
| தலைவன்-உழையர் | - | - | - | - | 3 |
| செவிலி-முக்கோற்பவர் | - | - | - | 1 | - |
| தலைவி-மாலைப்பொழுது | - | - | - | - | 1 |
| செவிலி-ஏவலர் | - | - | - | - | 1 |
| நற்றாய்-தோழி | - | 1 | - | - | 2 |
| தலைவி-அந்தணர் | - | - | - | - | 1 |
| ஆய்ச்சியர்-தென்னங்குரவர் | - | - | - | 1 | - |
| பரத்தை-தலைவி | - | 4 | - | 2 | - |
| சான்றோர்-அரசன் | - | - | - | 2 | - |
| சுற்றத்தார்-தலைவிடம் கூறியது | - | - | - | 1 | - |
| தலைவன்-ஏவலர் | - | 2 | - | - | - |
| செவிலி-வயலைக்கொடி | - | 1 | - | - | - |
| செவிலி-பெண்மான் | - | 1 | - | - | - |

### 3.1.1 நேருக்கு நேர் தகவல் தொடர்பு

தகவல் தொடர்பு சாதனங்களின் இடையீடு இல்லாமல் ஒருவருக்கொருவர் நேரடியாக உரையாடுவதை நேருக்கு நேர் தகவல் தொடர்பு என்பர். தொகை நூல்களில் தலைவன் தலைவியிடையே உள்ள காதல் குறித்த தகவல்களைத் தலைவன் மற்றும் தலைவி இருவரும் நேரடியாகப் பகிர்ந்து கொள்ளும் பொருட்டு காதலில் துன்பம் ஏற்படும் காலங்களில் ஆறுதல் கூறும் வகையில் தோழி, செவிலி,

நற்றாய், பாங்கன் வாயிலாக தன் துன்ப நிலையை கூறும் நிலையில் நேருக்கு நேர் தகவல் தொடர்பு ஏற்படுகிறது.

தலைவி மற்றும் தோழி தகவல் பரிமாறிக்கொள்ளும் பாடல்கள் குறுந்தொகையில் தான் மிகுதியானப் பாடல்கள் காணப்படுகின்றது. அதற்கு அடுத்தாற் போல் நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை மற்றும் அகநானூறு பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் தோழி இடத்தில் நேருக்குநேர் தகவல் பரிமாறும் பாடல்கள் ஐங்குறுநூற்றில் மிகுதியாகவும் குறுந்தொகையில் அதற்கு அடுத்தும் அமைந்துள்ளன. அகநானூறு, நற்றிணை, கலித்தொகை என்ற வரிசையில் அடுத்தடுத்து காணப்படுகின்றன. உண்மையான கதாபாத்திரங்களாக வலம் வரும் தலைவன் தலைவி இருவரும் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமானப் பாடல்களும், அடுத்ததாக கலித்தொகை, நற்றிணை, அகநானூறு, குறுந்தொகை என்ற வரிசையில் பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் தேர்ப்பாகன் இடத்தில் நேருக்கு நேர் உரையாடுவதாக அகநானூற்றில் அதிகமான பாடல்களும் ஐங்குறுநூறு, நற்றிணை மற்றும் குறுந்தொகை என்ற வரிசையில் பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவன் தலைவி உடன்போக்கு செல்கின்றார்கள். அவர்களைக் கண்ட இடைச்சுரத்தோர் கூறுவதாக ஐங்குறுநூறு மற்றும் கலித்தொகை ஆகிய இருநூல்களிலும் சமமான நான்கு பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் மற்றும் பாங்கன் உரையாடுவதாக குறுந்தொகையில் அதிகப்பாடல்களும் நற்றிணையில் அதற்கு அடுத்தாகவும் அகநானூற்றில் குறைவான எண்ணிக்கையில் பாடல்கள் காணப்படுகின்றன. பாணன், தோழி உரையாடுவதாக நற்றிணையில்

ஆறு பாடல்களும் அகநானூற்றில் ஒரு பாடலும் உள்ளன. தோழி வேலனை இகழ்ந்துக் கூறுவதாக கலித்தொகையில் ஆறு பாடல்களும் நற்றிணையில் ஒரு பாடல் அமைந்துள்ளன. தோழி உழவர் இடத்தில் உரையாடுவதாக ஒரு பாடல் உள்ளது. செவிலி தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமானப் பாடல்களும் அகநானூறு மற்றும் கலித்தொகை நூல்களில் குறைவான பாடல்கள் அமைந்துள்ளன. தலைவியை கண்டோர் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்றுப் பாடல்களும், கலித்தொகையில் இரண்டுப் பாடல்களும் அமைந்துள்ளன. தூதுவர், தோழி இடத்தில் உரையடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்றுப் பாடல்கள், செவிலி தெய்வத்திடம் கூறுவதாக குறுந்தொகையில் ஒரு பாடல், காதற்பரத்தை பாங்கயினர் இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் இரண்டு பாடல்கள் குறுந்தொகையில் ஒரு பாடல் அமைந்துள்ளன.

தலைவன் சான்றோர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடலும் தலைவி பாணன் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும் குறுந்தொகையில் குறைவான பாடல்களாக இரண்டு பாடல்களும் தலைவி தெய்வத்திடம் கூறுவதாக குறுந்தொகையில் மட்டும் ஒரு பாடல் காணப்படுகின்றது. தலைவன் முல்லைக் கொடி இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் குறுந்தொகையில் ஒரு பாடல் உள்ளது. செவிலி நற்றாய் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும் குறைவான பாடல்களாக குறுந்தொகையில் காணப்படுகின்றன.

பரத்தை பாங்காயினர் இடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் நான்கு பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் பாணன் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்கள் கலித்தொகையில் ஒரு பாடல் அந்தணர் செவிலி இடத்தில் தகவல் கூறும்பாடல்கள் ஐங்குறுநூற்றில் மூன்றும் கலித்தொகையில் ஒரு பாடல் இருக்கின்றன. செவிலி தலைவியின் நலன்களைப் பற்றி அயலார் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் பரத்தை தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூறு மற்றும் அகநானூற்றில் பாடல்கள் காணப்படுகின்றன.

நற்றாய் காக்கை இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் பரத்தை தலைவன் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் அதிகமான பாடல்களும் ஐங்குறுநூற்றில் குறைவான பாடல்களும் காணப்படுகின்றன. தலைவி அயலார் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் தலைவன் உழையர் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் உள்ளன. செவிலி முக்கோற்பவர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், தலைவி மாலைப்பொழுதை நோக்கிக் கூறுவதாக ஒரு பாடல், தலைவனைப் பார்த்த இடைச்சுரத்தோர் கூறுவதாக ஐங்குறுநூற்றில் நான்கு பாடல்களுமாக அமைந்துள்ளன.

செவிலி ஏவலர் இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் நற்றாய் தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் இரண்டு பாடல்கள் அகநானூற்றில் ஒரு பாடல் அமைந்துள்ளன. தலைவி அந்தணர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில்

மட்டும் ஒரு பாடல் உள்ளது. ஆய்ச்சியர் தென்னங்குரவர் உரையாடுவதாக கலித்தொகை மற்றும் ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் காணப்படுகிறது.

பரத்தை தலைவி இடத்தில் உரையாடுவதாக அகநானூற்றில் நான்கு பாடல்கள், கலித்தொகையில் இரண்டு பாடல்கள் அமைந்துள்ளன. சான்றோர் அரசன் இடத்தில் உரையாடுவதாக குறுந்தொகையில் இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. சுற்றத்தார் கூறியதாக கலித்தொகையில் ஒரு பாடல் உள்ளது. தலைவன் ஏவலர் இடத்தில் கூறுவதாக அகநானூற்றில் இரண்டு பாடல்கள் உள்ளன. செவிலி வயலைக்கொடியை நோக்கிக் கூறுவதாக அகநானூற்றில் ஒரு பாடலும் செவிலி பெண்மானை நோக்கிக் கூறுவதாக ஒரு பாடலும் அமைந்துள்ளன. இந்த அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள கதைமாந்தர்கள் எவ்வாறு எல்லாம் உரையாடுகிறார்கள் என்பதைப் பற்றி ‘‘தொகை நூல்களில் தொடர்புத் திறன்’’ வாயிலாக அறியமுடிகிறது.

### 3.1.2 தலைவி தோழிக்கிடையே நேருக்கு நேர் தகவல் தொடர்பு

தலைவி, தோழிக்கிடையே நேருக்கு நேர் தொடர்பு தலைவியின் களவுக்காலத்தில் தலைவனைச் சந்தித்துப் பின் தகவலை தலைவியிடத்துக் கூறும் பொழுதும் கற்புக் காலத்தில் தலைவன் பொருள் காரணமாக பிரிந்த காலத்தும் தலைவி ஆற்றுப்படுத்தும் காலத்தும் ஏற்படுகிறது. களவின் காரணமாக தலைவி தலைவனை சில இடையீட்டின் காரணமாகப் பார்க்க இயலாது போய்விடுகிறது. தலைவி வருத்தத்துடன் காணப்படுகிறாள். அப்போது தோழி தலைவியிடத்தில் நேருக்கு நேராக தன் கருத்தைக் கூறி ஆறுதல் அடையச் செய்கின்றாள்.

**"குளிரும் பருவத்தை யாயினும் தென்றல்**

**வளியெறியின் மெய்யிற்(கு) இனிதாம் - ஒளியிழாய்!**

**ஊடியிருப்பினும் ஊரன் நறுமேனி**

**கூடல் இனிதாம் எனக்கு."**[1]

என்ற பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை ஐம்பதில் ஒளிவீசும் அணிகலன்களை அணிந்துள்ள தோழியே! குளிர்காலத்தை தரும் இந்த மழைக்காலத்தில் வரும் தென்றல் காற்று நமக்கு இன்பத்தைத் தரும். தலைவனைக் காணாமல் இருந்தால் அவன் செய்த பிழைகள் தெரியும். அவனைக் கண்டு விட்டால் அந்தப் பிழைகள் வெளிப்படாது எனத் தலைவி தோழி இடத்தில் தன் மனக்கருத்தை நேருக்கு நேர் வெளிப்படுத்துகிறாள்.

**"காணுங்கால் காணேன் தவறாய் காணாக்கால்**

**காணேன் தவறல் லவை"**[2]

என்னும் குறள் மேலே சொன்ன கருத்துக்களுக்கு இணையாக ஒட்டி வருகின்றது. தலைவனைக் காணாமல் தலைவி இருந்தாள். அவன் செய்த பிழைகள் தெரியும். தலைவனைக் கண்டுவிட்டால் அவன் செய்த பிழைகள் தெரியாது என்று வெளிப்படுத்துகிறார் வள்ளுவர்.

### 3.1.3 தோழியின் தகவல் பரிமாறும் திறன்

தோழி தலைவியிடம் தகவல் பரிமாறும் பொழுது பல்வேறு பொருட்களையும் கால நிலையையும் எடுத்துக் கூறி தலைவியின் கோபத்தையும், மனதையும் தேற்றுவதாக தொகை நூல்கள் பகர்கின்றன.

### 3.1.4 தகவலில் பல்லியை தொடர்புபடுத்தல்

**“உள்ளார் கொல்லோ – தோழி! கள்வர்**

**பொன்புனை பகழி செப்பம் கொண்மார்**

**உகிர்நுதி புரட்டும் ஓசை போல,**

**செங்காற் பல்லி தன்துணை பயிரும்**

**அங்காற் கள்ளிலும் காடு இறந்தோரே”**[3]

என்னும் குறுந்தொகைப் பாடலில், பொருள் ஈட்டுவதற்காகப் பிரிகின்றான் தலைவன். தலைவன் பிரிவினால் தலைவி மிகவும் வருந்தினாள். அதைக் கண்ட தோழி நம் தலைவர் கள்ளிச் செடிகள் மிகுந்த காட்டினைக் கடந்துச் சென்றார். அவ்வாறு அங்குச் செல்லும் வழியில் ஆண்பல்லி தனக்குத் துணையாகிய பெண் பல்லியை அழைக்கும். அந்த ஒலியைத் தலைவர் இடைச்சுரத்தில் கேட்டு நம் தலைவர் விரைந்து நம்மைக் காண வருவார். நீ வருந்தாதே எனத் தோழி தலைவிக்கு தன் தகவலை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

தலைவன் பொருள் ஈட்டுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்தான். அதனால் வருந்தினாள் தலைவி. தோழி, தலைவி இடத்தில் நான் சொல்வதை கேட்பாயாக அவ்வுலக இன்பத்திற்குத் தேவையான அருளைத் தேடியும் இவ்வுலகத்திற்குப் பயன்படும் வகையில் பொருளைத் தேடி பிரிந்து சென்றார். அன்பைத் துறந்து பொருளை ஈட்டச் சென்றுவிட்டதால் நம் தலைவர் அறிவுடையவராக இருக்க முடியாது. மனைவி என்ற ஒரு பாசம் தலைவன் இடத்தில் இல்லை. தலைவி உன் அன்பைக் கருதாமல் பொருளே சிறந்தது எனக் கருதி சென்றுவிட்டான் என்று தலைவனைப் பற்றி தோழி தலைவி இடத்தில் அவனின் செயலை எடுத்துக் கூறுவதை அறியமுடிகிறது.

### 3.1.5 தொடர்பில் மானையும், மேகத்தையும் தொடர்புபடுத்துதல்

தலைவன் பொருள் ஈட்டுவதற்காகப் பிரிந்து சென்றான். தலைவன் குறித்துச் சென்ற கார்பருவம் வந்தது. ஆனால் தலைவன் வரவில்லை. தலைவி மிகவும் வருந்தினாள். அதற்குத் தோழி தான் இன்புறுவதற்கு துணையான ஆண்மான் தன் பெண்மானுடன் தேங்கியுள்ள நீரைக் குடித்து துள்ளி விளையாடும். இத்தகைய கார்காலத்தில் ஈண்டு வராமல் சென்ற இடத்திலேயே தங்கி இருக்கிறார். தலைவியை விட்டு தலைவன் சென்றதனால் மேகம் துன்பம் விளைவிப்பது போல் இடிக்கின்றது. சிறிது நேரத்தில் மழையைத் தரும் மேகம் குளிரப் போகின்றது. எனவே நீ அதனை நினைத்துக் கவலை கொள்ளாதே. இந்த மேகத்தைப் பார்த்து தலைவன் விரைந்து வருவார் எனத் தோழி தலைவி இடத்தில் ஆறுதலாக தகவலைப் பரிமாறுகிறாள்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை ஐம்பதில், ''தலைவியே! நாற்புறமும் மேகங்கள் சூழ்ந்து இருக்கின்றன. மழை மிக வேகமாக வருகின்றது. முல்லைப் பூக்கள் பூத்துச் சிரிக்கின்றன. ஆகவே கார்காலம் வந்துவிட்டது எனத் தலைவன் விரைந்து வந்து விடுவார்''[4] எனத் தோழி தலைவி கவலைப்படாமல் இருப்பதற்காக ஆறுதல் கூறுகின்றாள்.

### 3.1.6 தகவலுக்கு முல்லைப் பூவைப் பயன்படுத்துதல்

குறுந்தொகையில் உள்ள ''தலைவன் பொருள் ஈட்டுவதற்காக தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். இதனை அறிந்த தோழி தலைவி இடத்தில் கூறினாள். அதற்குத் தலைவி தலைவன் சென்று இருந்ததை என்னிடம் வந்து கூறுகின்றாயே, அவன் போகாமல் தடுக்க வேண்டாமா? என்று கேட்டாள். தலைவன் இல்லாமல் இந்த வாடைக்காற்று வேகமாக வீசுகின்றது. இது எனக்கு மிகவும் துன்பம்

தருகின்றது என்று கூறினாள். அதற்குத் தோழி இந்த முன் பனிக்காலத்தில் பிரிந்து சென்ற தலைவர் மிக விரைவாக வந்துவிடுவார். நீ கவலையடைய வேண்டாம் எனத் தோழி தலைவி இடத்தில் தன் கருத்தை கூறி ஆறுதல் அடையச் செய்தாள். செல்வத்தை விரும்பி எம் தலைவர் பிரிந்து சென்றார். இளமையின் அருமையைச் சிறிது எண்ணிப் பார்க்காமல் சென்றார். சொல்லி விட்டுச் சென்ற பருவமும் வந்தன. தலைவன் வரவில்லை என்று தலைவி தோழி இடத்தில் வருந்தினாள். அதற்கு அவள் தலைவியின் நலனைக் கருத்தில் கொண்டு கார் காலத்தில் பெய்த மழையால் முல்லை பூ பூத்து சிரிக்கின்றது. எனவே சென்ற தலைவர் இதையும் அறிந்து விரைந்து வந்துவிடுவார் எனத் தோழி தலைவியிடம் மொழிகிறாள்.

நற்றிணையில், தலைவி வெளியே வராமல் வருந்திக் காணப்பட்டாள். அப்போது தோழி தலைவியைப் பார்க்கச் சென்றாள். அப்போது தலைவி தலைவனைப் பார்க்க முடியாமல் வருந்தினாள். வருந்திய தலைவி இடத்தில் தோழி நீ வருந்தாதே. பௌர்ணமி நிலவு விரிந்தால் அன்று தலைவன் வருவேன் என்று கூறினான். காவல் காரணமாக இரவுக்குறி தடைப்பட்டு நின்றது. நீ படும் துயரம் தலைவன் இடத்தில் போய் சென்றடையும். அதனால் தலைவன் விரைந்து வருவார் நீ கவலைப்படாதே என்று கூறினாள். வருந்திய தலைவியின் நிலைக் கண்ட தோழி தலைவியின் துயர் போக்கும் நோக்குடன் தலைவிக்கு அறிவுறுத்தினாள்.

பதினெண் கீழ்கணக்கு நூல்களின் ஒன்றான ஐந்திணை எழுபதில் உள்ள பாடலில், ‘‘சிறிய பொழுது கொண்ட மாலை நேரத்தில் வெண்காந்தள் செடிகள் அரும்புவிட்டு காணப்படுகின்றன. வானத்தில் கரிய நிறத்தில் இருக்கும் மேகக் கூட்டங்கள் இடி

இடிக்கின்றன. இந்த மாலைப் பொழுது என்னைக் கொள்ளும்படி வந்துள்ளது"[5] எனத் தலைவனின் பிரிவை தாங்கிக் கொள்ள முடியாமல் இருந்த தலைவி கார்பருவத்தைப் பார்த்து தோழி இடத்தில் நேராக வருந்திக் கூறியது போல, தலைவன் பொருள் தேடுவதற்காகப் பிரிவதை அறிந்த தலைவி ஆற்ற முடியாமல் மேனி வேறுபட்டாள். அதனை அறிந்த தோழி நீ மெல்லியல்பு உடையவள். வினைவயிற் செல்லும் தலைவன் தான் செல்லும் கடுமையான வழி எண்ணி உன்னை விட்டுச் செல்கின்றான். அங்கே செல்வதனால் தலைவன் வருந்தவில்லை. நீயும் வருந்தாமல் இரு என நற்றிணைத் தோழி தலைவியிடம் உரைப்பதாக அமைந்துள்ளன.

தலைவன் தலைவியின் காதலை பலர் பழிச்சொல் தூற்றினர். அதனைப் பொறுக்க முடியாமல் வருந்தினாள் தலைவி. அதற்குத் தோழி நம் ஊர் எல்லா வளமும் உடையது. நீர்த்துறையும் இனிமையுடையது. நம்முடைய காதலரின் தேரொலியைக் கேட்பது மட்டும் தான் அரிதாகின்றது. அது மட்டுமே நம் ஊர்க்குப் பழியுடையதாக இருக்கின்றது. தலைவன் நம்மை வந்து சேர்ந்துவிட்டால் அச்சோலையும் மிக நல்லதாய் அமையும் எனக் கூறி ஆறுதல் படுத்துகிறாள். இதைப் போல,

> **"பூம் பொறி உழவைப் பேழ் வாய் ஏற்றை**
> **தேம் கமழ் சிலம்பின் களிற்றொடு பொரினே!**
> **துறுகல் மீமிசை, உறுகண் அஞ்சாக்**
> **குறக் குறுமாக்கள் புகற்சியின் எறிந்த**
> **தொண்டகச் சிறு பறைப் பாணி அயலது**
> **பைந் தாட் செந்தினைப் படு கிளி ஓப்பும்**
> **..................................................."[6]**

என்னும் நற்றிணைப் பாடலில், தலைவன் கொடிய காட்டுவழியில் இரவு நேரத்தில் தலைவியைக் காண வருகின்றான். தலைவன் வரும் இரவு கருதியும், விலங்குகளால் நேரும் துன்பம் பற்றியும் தலைவி வருந்துகின்றாள். அதனால் மணம் புரிந்து கொண்டால் தலைவன் வரும் வழி பற்றி வருத்தம் தீரும் எனக் கருத்தில் கொண்டாள். அவன் வரும் வழியைப் பற்றி எண்ணிருப்பவர் யாருமில்லை எனத் தோழி தலைவி இடத்தில் கூறுகிறாள்.

> **“கொடுவில் எயினர்தம் கொல்படையால் வீழ்ந்த**
> **தடிறிண மாற்றிய பேஎய் - நடுகல்**
> **விரிநிழல் கண்படுக்கும் வெங்கானம் என்பர்**
> **பொருள்புரிந்தார் போய சுரம்”[7]**

ஐந்திணை ஐம்பதில் உள்ள பாடலில், தலைவி தோழியிடம் தலைவன் சென்றது மிகவும் கொடிய பாலை நிலம் பிரிவாற்றிருப்பது என்னுடைய கடமை. ஆனால், அவர் சென்ற பாலை நிலத்தை நினைத்து என் மனம் வேதனை அடைகிறது என்று தலைவி தோழியிடம் இயம்பினாள்.

ஐங்குறுநூறு பாடலில், அன்னையே! நீ வாழ்க. நான் சொல்வதைக் கேட்பாயாக! நம் தலைவர் நாட்டில் உள்ள உதிர்ந்த தழைகளால் மூடப்பட்ட கிணறுகளின் அடியில் தண்ணீர் கிடக்கும். விலங்குகளால் உண்ணப்பட்டு எஞ்சிய கலங்கிய நீர் நம்முடைய வீட்டின் புறத்தே உள்ள தோட்டத்தில் கிடைக்கும். அந்த நீர் இனிய தேனோடு கலந்து ஆவின் பாலைவிட மிக்க இனிமையுடையது. அது போல மிகவும் அன்புடையவன் வரவில்லை என்றாலும், நீரினைப் போல மிகவும் அன்புடையவன் தலைவன். அவன் மனது ஆவின் பாலைப்

போல புனிதமானது எனத் தோழி தலைவியிடம் அன்பை புரிய வைத்தாள். தலைவன் தலைவியை வரைந்து கொள்ளாமல் களவின் பொருட்டு காலம் தாழ்த்தினான். அதனால் தலைவி உடல் மெலிவுற்றாள். அவளிடம் தோழி தலைவன் உன்மேல் மிகவும் அன்பு கொண்டவன். நீ ஏன் கவலைப்படுகின்றாய் எனக் கேட்டாள். உன்னுடைய தலைவன் எவ்வாறானவன் என்றாள். சிறிய தினையை மேய ஆண்பன்றி மலையில் தங்கும் அதுபோல உன் தலைவன் உன்மேல் அதிக விருப்பத்தை உடையவன் இல்லை. அதற்கு தோழி உன் துயர் தீரும்படி உன் தலைவன் உன்னை விரைந்து மணம் செய்து கொள்ள வருவான். வருந்தாதே நீ எனத் தலைவியின் துயர் தீரும்படி தகவலை எடுத்துரைக்கிறாள்.

தலைவன் ஒரு மாட்டை அடக்கிக் கொண்டிருந்தான். தோழி அதை தலைவிக்கு காட்டினாள். பின் குரவைக் கூத்து ஆடினாள். தலைவனைப் பற்றி பாடுவோம் எனக் கூறினாள். தலைவி வருந்தியதையும் அலர், அச்சம் உண்டானதையும் பாடலாகப் பாடினாள். மேலும் தலைவி இடத்தில் உன்னை அவனுக்குத் திருமணம் செய்ய முடிவு செய்துள்ளனர் என்று கலித்தொகையில் உள்ள தோழி தன் தகவலை வெளிப்படுத்தி தலைவியை மகிழச் செய்தாள்.

தலைவன் தலைவியின் களவு வெளிப்பட்டது. அதை நினைத்து தலைவி அஞ்சினாள். தோழி உன்னை உனக்கு உரிய தலைவனுக்கே கொடுக்கப் போவதாக சூழ்ந்தனர் என்ற இனிய தகவலைத் தோழி தலைவி இடத்தில் கூறி அவளின் அச்சத்தைப் போக்கினாள்.

பொருள் தேடுவதற்காக தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். அதனால் தலைவி பெரிதும் வருந்தினாள். தோழி தலைவி

இடத்தில் தலைவன் சொல்லிவிட்டுச் சென்ற கார்காலம் வந்துவிட்டது. நீ வருந்தாதே. இந்தக் குளிரால் தலைவனுக்கு உன் ஞாபகம் வந்து விரைந்து திரும்பி வந்துவிடுவார் எனத் தலைவியை ஆறுதல் படுத்துகிறாள்.

தலைவன் பகற்பொழுதில் தலைவியைக் காண வந்தான். பின் அவனது பிரிவை அறிந்த தலைவி பெரிதும் வருந்தினாள். அதனை அறிந்த தோழி தலைவி இடத்தில் நீ கவலைப்படாதே என்று கூறினாள். அதுமட்டுமல்லாமல், இரவு நேரத்தில் தலைவன் உன்னைக் காண வருவார் என்று ஆறுதல் மொழிகளை அகநானூற்றில் உள்ள தோழி கூறுகின்றாள்.

தலைவன் பிரிவை ஆற்றமுடியாமல் தலைவி பெரிதும் வருந்தினாள். அதனால் தலைவியின் உடல் மெலிவதை கண்ட ஊரார் அலர் தூற்றினர். அதனால் உள்ளம் வேதனையுற்ற அகநானூற்றின் தலைவி தோழி இடத்தில் வருந்தியவை.

**“கண்டது மன்றும் ஒருநாள் அலர்மன்றும்**

**திங்களைப் பாம்புகொண் டற்று”**[8]

என்னும் குறளில் அம்பல் அலர், நம் தலைவரைக் கண்டது என்னவோ ஒரு நாள் தான். ஆனால் ஊரார் தூற்றும் அலர் சந்திரனைப் பாம்பு விழுங்கிய செய்தி போல, ஊர் முழுவதும் பரவிவிட்டது எனத் தலைவி தோழியிடம் தலைவனை ஒப்புமைப்படுத்துகிறாள். அதுபோல, தலைவன் பொருள் காரணமாகப் பிரிந்தான். குறித்தப் பருவத்தில் வரததால் தலைவி வருந்தினாள். தோழி தலைவி இடத்தில் தலைவன் விரைந்து வருவார். உன் அன்பை பிரிந்து தலைவன் ஒரு நாள் இருக்க மாட்டான். விரைவில் வந்து வரைந்து கொள்வான் என்பதை

அகநானூற்றில் உள்ள தலைவிக்கு தோழி ஆறுதல் கூறுவதாக அமைந்துள்ளது.

### 3.1.7 தலைவன் தோழிக்கிடையே தகவல் தொடர்பு

தலைவன் தலைவியை வரைந்து கொள்ளாமல் காலம் தாழ்த்திய போதும் தலைவியின் விருப்பத்தை தலைவன் இடத்தில் கூறுவதுமாக போன்ற பல தகவல்களையும் தோழி தன் கருத்தை வெளிப்படுத்துகிறாள்.

**"எல்லாவாயினும் இருவர் தேஎத்தும்**

**புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப"**[9]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தோழி, தலைவன் தலைவி இருவருக்கும் வாயிலாக அமைபவள். தலைவனுக்கு விரைந்து ஆறுதல் கூறுவாள். தலைவனுக்கு சிறந்த ஊடகமாக விளங்குவது தோழியே ஆவாள்.

தலைவன் களவின் காரணமாக நெடுங்காலம் நீடித்துப் பின் தலைவியை மணம் புரிந்து கொண்டான். திருமணத்திற்கு பிறகு ஒரு நாள் தோழியோடு உரையாடினான். நான் களவினை நீடித்தபொழுது யாது செய்து வாழ்ந்தீர் என வினவினான். அதற்கு அவள் களவு கற்பாக மாறி மகவீன்று மனையறத்தில் இருக்க வேண்டும் என விரும்பினேன் என்று சொல்லி இயம்பினாள். தலைவன் தோழியிடம் தன் விருப்பத்தை நிறைவேற்றித் தருமாறு பணிவுடன் வேண்டிக்கொண்டான். தோழியே! செங்கோள் வேந்தன் குட்டுவன் துறைமுகமான தொண்டிப் போன்ற இன்றைய நிலையைக் கண்ட பின்னும் நீ அருள் செய்ய வேண்டும். இல்லையென்றால் என் தலைவியின் கூந்தலைப் பாராட்டிக் கொண்டும் நிறைவு பெற்றும் உயிர் வாழ்வேன் என்று ஐங்குறுநூற்றில்

உள்ள தலைவன் தோழி இடத்தில் தன் மனதில் உள்ள விருப்பத்தைக் கூறிப் பாரத்தை குறைத்தான்.

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே களவு நீடித்துக் கொண்டே இருந்தது. தலைவியின் வேறுபாடுகள் அறிந்த தாய் வீட்டில் வைத்து காவல் செய்தாள். தலைவன் பகற்நேரத்தில் தலைவியின் வீட்டின் அருகே வந்து நின்றான். அப்பொழுது தோழி தலைவன் இடத்தில் நாரையின் நல்லக் கூட்டத்தைப் போல, மகளிர் தம் நனைத்த கூந்தலை உலர்வதற்கு இடமான தலைவனே! இத்துறைக்குப் பலகாலும் வந்துச் செல்கின்றீர். அங்கே செல்லாதீர் விரைவில் தலைவியை நீ மணம் புரிந்து கொள்ள வேண்டும். இனி களவின் பொருட்டு காலம் தாழ்த்தாமல் தலைவியை மணம் புரிந்து கொள் என்று ஐங்குறுநூற்றில் உள்ள தோழி தலைவியின் நிலையைப் புரிய வைக்கிறாள்.

“பெரிய நாட்டையுடைய தலைவனே தினைக்கதிர்கள் வளைந்து கிடப்பதால் அதை காவல் செய்கின்ற வாழ்க்கையை கைவிட்டோம். பொருள் செல்வத்தால் மிகுந்து காணப்படும் இவ்விடமே எங்கள் இல்லம்.”[10] எனவே, களவினை நீடித்துக் கொண்டே இருக்காமல் தலைவியை விரைந்து மணம் புரிந்து கொள்ள வேண்டும் எனத் தோழி தலைவன் இடத்தில் எடுத்துரைக்கின்றாள். கார்காலத் தொடக்கத்தில் வருவதாகச் சொல்லி சென்றான் தலைவன். அதே பருவத்தில் போர் கடமை முடிந்து திரும்பிய பொழுது தோழி மகிழ்ந்தாள். பின் தலைவன் இடத்தில் வெல்கின்ற போரினை உடைய வலிய சிங்கம் போன்ற தலைவா! நீ மீண்டும் வந்ததால் தலைவி மிகவும் மகிழ்ந்தாள். அவ்வாறு மகிழ்ந்து குவளை மலர் போன்ற தம் அழகை மீண்டும்

பெற்றாள் என ஐங்குறுநூற்றில் தோழி அவனுக்கு தெளிவுப்படுத்துகிறாள்.

**“தோழி உள்ளுறுத்த வாயில் புகுப்பினும்**
**ஆவவயின் நிகழும் என்மனார் புலவர்”**[11]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவன் பிரிந்து செல்ல நினைத்த போது தோழியுள்ளிட்ட வாயில்களைத் தலைவன் தூதாகப் போகவிட்ட காலத்தில் அவன் செய்யும் வினைக்கண் அச்சம் நிகழும் எனத் தோழி தலைவன் இடத்தில் கூறி ஐயமுற வைக்கிறாள்.

**“எம் அணங்கினவே – மகிழ்ந! முன்றில்**
**நனை முதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்**
**வேலன் புனைந்த வெறிஅயர் களம்தொறும்**
**நேர் இறை முன்கை பற்றி**
**சூரர மகளிரோடு உள்ள சூளே”**[12]

என்னும் குறுந்தொகைப் பாடலில், தலைவனும் தலைவியும் மணல் மேட்டில்தான் விளையாடினார்கள் மரத்தின் மலர்கள் உதிர்ந்து கிடக்கும் மணற்மேட்டின் மீது வேலனால் அழகுபெற வெறியாட்டு நிகழ்த்திய இடம். அவ்விடத்தில் தலைவியை நீ விரைந்து மணம் முடிப்பேன் என சூளுரைத்தாய். ஆனால் தலைவியை இன்றும் மணம் புரியவில்லையே, அத்தெய்வங்களால் தலைவனும் ஏதம் உண்டாகும் என அஞ்சினான். நீ களவு நீட்டித்தலை விரும்பாமல் தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ள வேண்டும் என அவள் தலைவன் இடத்தில் புரிய வைக்கிறாள்.

“வேடர்கள் தேனடைகளைக் கவர்ந்து சென்றனர். கீழே நழுவி விழுந்த தேனடைகளைக் கன்றுகள் தன் காலால் மிதிக்கும். மலை நாட்டின் தலைவனே! தலைமகளை விரைந்து மணம் செய்து கொள்வாய்.”[13] காலம் தாழ்த்தினாய் என்றால் எம் தலைவி துன்பத்தால்

இறந்து விடுவாள். எனவே, தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்ளவேண்டும் என பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை எழுபது என்னும் பாடலில் உள்ள தோழி தலைவனிடம் கூறுவதாக அமைந்துள்ளன.

களவொழுக்கத்தை விரும்பிய தலைவன் தலைவியைக் காண்பதற்காக பகற்பொழுதிலும் இரவுப் பொழுதிலும் வந்தான். இதனை, அறிந்த தோழி தலைவன் இடத்தில் தலைவி உன்னை விரும்புகிறாள். பகற்குறியையும் இரவுக் குறியையும் மறுத்து விரைவில் தலைவியை மணம் புரிந்து கொள்ளவேண்டும் என்பதை குறுந்தொகையில் உள்ள தலைவனிடம் தோழி தலைவியின் நிலையை விளக்குகிறாள்.

இல்வாழ்க்கையில் தலைவனுக்குத் தலைவி ஆற்றும் இரண்டு நன்மைகளில் நீ விரும்புவதைச் செய்துத் தருவாள். நடை முதிர்ந்து மெலிந்த நிலையிலும் உம்மை மறவாமல் சேவை செய்வாள். உன் நிழலிலே வாழ்வாளாக எனத் தோழி குறித்தாள். அளிப்பதற்கு உன் அருளையே எதிர் நோக்கி வாழ்பவள் என்றும் வேறு எதனையும் வேண்டாதவள் என்றும் தோழி உணர்த்தினாள். நீ தலைவியை மறக்காமல் போற்றி வாழ வேண்டும் என்று குறுந்தொகையில் உள்ள தோழி தலைவன் இடத்தில் கூறுவதாக அமைந்துள்ளன.

**“தோழியின் முடியும் இடனுமாருண்டே”** [14]

தொல்காப்பிய நூற்பாவில், தோழியானவள் தலைவனுக்கு குறியிடம் கூறும் இடங்களும் உண்டு.

வினையின் காரணமாக தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கின்றான். குறித்துச் சென்ற பருவத்தில் நீ வரவேண்டும். அவள் நிலை என்ன ஆகுமோ, நான் தலைவியை ஆற்றுப் படுத்துகின்றேன்

எனத் தோழி கூறி விரைவில் வர வேண்டும். நற்றிணையில் உள்ள தோழி தலைவனிடம் செலவினைத் தவிர்க்குமாறு வேண்டினாள். தலைவன் தலைவியை மணம் புரிந்து கொள்ளாது களவிலே காலம் தாழ்த்தினான். இதை அறிந்த தோழி தலைவன் இடத்தில் நீ விரைந்து தலைவியை திருமணம் முடிக்க வேண்டும். தலைவி உன் மேல் கொண்ட அன்பினால் உன்னை விட்டு ஒரு போதும் பிரிந்து இருப்பது இயலாது. இவ்வூர் அலர் மொழி தூற்றுகின்றன. அவள் வரும் வழியைத் தடுத்தும், வருந்தவும் செய்கின்றன. தோழி தலைவன் இடத்தில் தலைவியைப் பற்றிக் கூறி வருத்தப்படுகின்றாள்.

**"பரத்தை மறுத்தல் வேண்டியும் கிழத்தி**
**மடத்தகு கிழமை உடமையானும்**
**அன்பில்லை கொடியை என்றாலும் உரியவள்"**[15]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தோழி தலைவனை நீ அன்பில்லாதவன் என்று கடிந்து கூறும் அளவுக்கு உரிமையுடையவள். அவனுடைய பரத்தையர் தொடர்பைக் கண்டிக்கும் போதும் தலைவியின் அறியாப் பருவத்தைச் சுட்டிக் காட்டுகிறாள். தலைவன் இடத்தில் தலைவியை ஏமாற்றக் கூடாது எனவும் விரைவில் களவினை நீடிக்காமல் மணம் புரிய வேண்டும் எனவும் கட்டளை இடுகின்றாள்.

ஆடவர் வண்டு போல்வர். அவர் வரும் பொழுதும், எதிரே தொழும் பொழுதும், போகும் பொழுது, பின்னே தொழுவதன்று பெண்டீர். அவர் செயல் தகாததென தலைவி புலம்பி நீங்குவாள். இந்நிலையில் தோழி பரத்தையின் பிரிந்து வந்த தலைமகனோடு உறழ்ந்து கூற, அவன் யாரையும் அறியவில்லை என்றான். உடனே நற்றிணையில் உள்ள தோழி பரத்தையர் பலர் உன்னைப் பற்றி இகழ்ந்ததை நான் அறிவேன் என்று கூறினாள்.

“பெரிய மலைகளையுடைய நாட்டின் தலைவனே! முற்றிய கதிர்களைக் காவல் செய்வதற்காகச் செய்யும் இடமான வாழ்க்கையை நாங்கள் கைவிட்டோம். தூய்மையான அருவிகள் பூக்களைத் தழுவிக் கொண்டுச் செல்லும் காட்டைக் கைவிட்டோம். பொருட் செல்வத்தால் மிகுந்த பாக்கம் எம் இல்லம் ஆகும்.”[16] எனவே எம்மைக் காண வேண்டும் என்றாள் அங்கு வரவேண்டும். வரும்பொழுது தலைவியைத் திருமணம் செய்யும் பொருட்டு வரவேண்டும் என பதினெண்கீழ்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை ஐம்பது என்னும் நூலில் உள்ள தோழி தலைவன் இடத்தில் தகவலை பரிமாறுகிறாள்.

களவின்பமே பெரிதும் விரும்பினான் தலைவன் தலைவியை மணந்துக் கொள்ள கருத்து இல்லாமல் நாளும் இரவு நேரத்தில் வந்தான். அதனை அறிந்த தோழி இரவு நேரத்தில் வரும் வழியில் அச்சத்தை எடுத்துக் கூறினாள். இனி, நீ பகற்குறிக்கண் வருகவெனக் கூறினாள். அதற்கும் பல இன்னல்கள் வரும் எனக் எடுத்துக்கூறி தலைவியை விரைவில் மணந்துக் கொள்ளுமாறு அகநானூற்றில் உள்ள தோழி தலைவனிடத்தில் விளக்கியுரைக்கின்றாள்.

“குறவர்களின் புதல்வர்கள் தினையை உழுவர். இரவில் நெருப்பை மூட்டி குளிர்காய்வர். இத்தகைய இயல்புக்கொண்ட மலைநாட்டினையுடைய தலைவன் தலைமகளின் உடலில் உள்ள பசலை நிறமானது கெடும்படி இரவு நேரத்தில் அருள் புரிவான்.”[17] பகற்குறி இடையீடு பட்டதை அறிந்த தோழி தலைவனை இரவு நேரத்தில் வரும்படி கூறினாள் என்று திணைமொழி ஐம்பது எனும் நூல் குறிப்பிடுகிறது.

**“புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்,**
**சொலத்தகு கிளவி தோழிக்குரிய”**[18]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவன் தலைவியை சந்திப்பதற்காக தோழியின் உதவியை நாடுவான். பொழுது நீடிக்கும் காலங்களில் தோழி தலைவனின் நிலையை அறிவாள். களவின் காரணமாகவும் அந்த இடத்தில் கூற்று நிகழும்.

திருமணத்திற்குத் தேவையானப் பொருள் தேடுவதற்காக தலைவன் தலைவியை விட்டுப் பிரிய நினைத்தான். அவ்வாறு பிரியக் கருதிய தலைவனை தோழி, தலைவியின் ஆற்றாமையை எடுத்துக்கூறினாள். பொருள் ஈட்டும் முயற்சியை விலக்கி விரைவில் தலைவியை திருமணம் புரிந்து கொள்ளுமாறு கலித்தொகை என்னும் பாடலில் உள்ள தோழி தலைவனிடத்தில் எடுத்துரைக்கின்றாள்.

தலைவன் வரைவிடை வைத்துத் தலைவியை விட்டுப் பிரிந்தான். தலைவி அதை ஆற்ற முடியாமல் வருந்தினாள். அதனைப்பார்த்த தோழி தலைவனை நெருங்கி தலைவியைத் திருமணம் செய்து கொள்ளுமாறுக் கூறினாள். அதுக்கேட்ட தலைவன் வரைவு முயற்சியோடு வந்துள்ளான். பின் என் உறவினர் எல்லாம் இத்திருமணத்திற்கு உடன்பட்டனர் என்று கலித்தொகையிலுள்ள தலைவன் தோழியிடத்தில் தெளிவுப்படுத்துக்கிறான்.

தலைவன் வாழ்க்கையை முறையாக நடத்துவதற்குத் தேவையானப் பொருள் வேண்டும் என்று பொருளைத் தேடுவதற்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்ல நினைக்கின்றான். தோழி தலைவனிடத்தில் தலைவியின் இயல்புகளையும், இளமையில் பிரிந்து போனால் வாழ்கின்ற காலம் வீணாகிவிடும் என்ற கருத்தையும்

கலித்தொகையில் உள்ள தோழி தலைவனிடத்தில் அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளது.

### 3.1.8 தலைவன் தலைவிக்கிடையேத் தகவல் தொடர்பு

களவுக் காரணமாக தலைவன் தலைவியை சந்திக்க வருகின்றான். திருமணத்திற்குத் தேவையானப் பொருள் ஈட்டும் பொருட்டு தலைவியை விட்டுப்பிரியும் நேரத்திலும் இருவரும் உரையாடுகின்றனர்.

**“அலமரல் ஆயமோடு அமர்துணை தழிஇ**
**நலம் மிகு புதுப்புனல் ஆட கண்டோர்**
**ஒருவரும் இருவரும் அல்லர்;**
**பலரே தெய்ய; எம் மறையாதிமோ”**[19]

என்னும் ஐங்குறுநூறுப் பாடலில், தலைவன் பரத்தையர் மனையிலிருந்து தன் இல்லம் மீண்டான். அவன் தலைவி இடத்தில் பரத்தையருடன் நீராடியதை மறுத்தான். நீ பரத்தையரோடு புதுப்புனலில் ஆடித் திளைத்ததைக் கண்டோர், ஒருவரோ இருவரோ அல்லர். மிகப்பலர். நீ என்னிடம் பொய் கூறாதே உண்மையை ஒப்புக்கொள் என்று வாயில் மறுக்கிறாள்.

**“தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்**
**மெய்மையாக அவர் வயின் உணர்த்தும்**
**தலைத்தாள் கழறு அறம் தம் எதிர்ப்பொழுது இன்றே,**
**மலிதலும் ஊடலும் அவைஅலங் கடையே”**[20]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவி தலைவன் மகிழ்ச்சியும் ஊடலும் உள்ள சமயத்திலேயே கடிந்துப் பேசுவாள். தலைவியால் தாம் துன்பம் அடைவதாக பரத்தையர் கூறினாலும், அவர்களிடம்

நடந்தவற்றை தலைவி அறிந்தால் தலைவனிடத்தில் கடிந்துப் பேசுவாள்.

திருமணம் நிகழ்ந்த மிக அண்மைக் காலத்திலேயே தலைவனுக்குப் பரத்தையர் உறவுத் தோன்றியதனை அறிந்தாள் தலைவி. தலைவனிடத்தில் தலைவா! நீ எம்மை மணந்துக் கொண்ட கணவன் என்றால், எனக்கு அருள் செய்யவில்லை. தண்ணிய துறையை உடைய உன் ஊரில் வாழும் ஒல்லிய வளையல்களைப் பூண்ட பரத்தையர் மகளிர் உன்னுடைய துணையா. நீ என்னை விட்டு மெல்ல மெல்ல விலகிச்செல்கின்றாய் என ஐங்குறுநூற்றில் உள்ள தலைவனிடத்தில் தலைவி தன் நிலைக் குறித்து உரையாடுகின்றாள்.

“தலைவன் முன்னிலைப்படுத்துதல் போன்றவைக் கூறிய பின்னர் இயற்கைப் புணர்ச்சி எய்தான். நனையமுரத்தலைக் கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்தில் உண்டானது மகிழ்ச்சி.”[21] அந்த நேரத்தில் சிலப்பதிகாரத்தில் உள்ள தலைவிப்பட்ட மகிழ்ச்சியை புறத்தோன்றல் முறுவல் போலத் தலைவன் அறிந்தான் என்பதைக் காட்டுகிறது.

போர்க்கடமையை முடித்துச் சென்றான் தலைவன். தன் தலைவியிடம் வண்டுகள் பூந்தாதினை உண்டு மகிழ்ந்தன. பின் தேரைகள் ஆரவரித்தன. முல்லை பூ மலர்ந்து இன்பம் மூட்டியன. இதைக் கண்ட ஐங்குறுநூற்றில் உள்ள தலைவன் கார்காலத்தில் இனித் துன்பம் நீங்கி இன்புறுவாயாக எனத் தலைவன் தலைவியிடத்தில் கூறுவதாக அமைந்துள்ளன.

**“தலைவன் மாற்றம் தலைவன் தேற்றம்**

**தெளிவாம் என்பர் தெளிந்திசி னோரே”**[22]

நம்பியகப் பொருள் என்னும் நூற்பாவில், தலைவன் சொல்லை ஏற்று தலைவி நம்பினாள். பின் தெளிந்தாள் என்று புலவர் கூறுகின்றார்.

தலைவன் பொருள் ஈட்டுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லக் கருதினான். தலைவி தலைவனிடம் என்னை அழைத்துச்செல்க என்று கூறினாள். அதற்குத் தலைவன் உடன்படவில்லை. உடனே கலித்தொகையில் உள்ள தலைவி தலைவனிடத்தில் நீ என்னை விட்டு பிரிந்தால் இறந்து விடுவேன் என்று தன் அன்பை இவ்வாறு வெளிப்படுக்கின்றாள்.

**"தண்ணம் துறைவன் தணந்தமை நம்மினும்**
**முன்னம் உணா்ந்த வளை"**[23]

என்னும் குறளில், குளிா்ந்த அழகிய நீா் நாட்டுத் தலைவன் பிரிந்து செல்லும் குறிப்பை, நாம் உணரும் முன்பே வளையல் கழன்று விட்டனவே! எனத் தலைவனைப் பற்றி தலைவி கூறினாள்.

வினையின் காரணமாகச் செல்லும் தலைவன் வழியில் தலைவியைக் காண்கின்றான். தலைவியை வழிமறித்து தலைவன் நகைச்சுவைப்படப் பேசினான். இருவரும் உரையாடிய பின்னா் தலைவனுடன் தலைவிக் கூடுவதற்கு உடன்பட்டாள் என்று கலித்தொகை மூலம் அறியப்படுகிறது.

**"அவன் குறிப்பு அறிதல் வேண்டியும், கிழவி,**
**அகன்மலி ஊடல் அகற்சிக் கண்ணும்,**
**வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே"**[24]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவனின் குறிப்பை அறிந்தும், தலைவித் தன்னுடைய ஊடலை நீக்கும் நிலையிலும் உள்ளாள்.

அன்பின் காரணமாகவும் புலப்படுத்தும் சொற்களைக் கூறவும் செய்வாள். இவ்வாறு ஒருவருக்கொருவர் தகவலைப் பரிமாறினர்.

தலைவிக் கருதிய வண்ணமே தலைவியை தலைவன் இரவு நேரத்தில் அழைத்துக்கொண்டுச் செல்கின்றான். விடிந்த பின் சுரமும் இடையூறும் கடந்துப் போகும்போது தலைவியை நோக்கித் தலைவன் நெறி எங்கும் பொழில்களும் ஊர்களும் உள்ளன. ஆதலால் விளையாடிசெல்வோம். நீ வருந்தாதே என்று நற்றிணையில் உள்ள தலைவன் தலைவி போகும் வழி கடினம் தெரியாமல் அழைத்துக்கொண்டுச் சென்றான்.

**“மடமான் நோக்கி வடிவம் கண்ட**

**இடமும் சிறந்த வழி எய்துவது ஐயம்”**[25]

என்னும் நம்பியகப்பொருள் நூற்பாவில், தலைமகளின் அழகைக் கண்டும், அவளின் வடிவத்தைக் கண்டும் தலைவன் வருணித்தான். தலைவன் தலைவியைக் காணும் பொழுது ஐயம் எழுந்தது என்று தலைவன் தலைவியிடத்தில் உரையாடினான்.

தலைவன் களவின் பொருட்டு இரவு நேரத்தில் தலைவியைக் காண வருகின்றான். தலைவன் வருவதை நினைத்து தலைவி கவலையுற்று இனி வரவேண்டாம் எனக் கூறினாள். அதற்குத் தலைவன் நான் இரவில் வரும்பொழுது இருள் எம் உடல் மேல்பட்டு பரவிப்போகும். இம்மலையின் கண் உள்ள வழியும் எனக்கு ஒரு காவலாக அமையும் என நற்றிணையில் உள்ள தலைவன் தலைவியைத் தேற்றினான்.

தலைவன் பொருள் ஈட்டப் பிரிந்துச் செல்லக் கருதிய தலைவி வருந்தினாள். அவள் வருத்தத்தை அறிந்த தலைவன், நீ மெல்லிய

அடியை உடையவள், காடுகள் கொடியது. ஆகையால் உடன் அழைத்துச் செல்வதைத் தவிர்த்தோம். கார் காலத்தில் உன்னைப்பிரிவது இயலாது. அப்போது உன்னைப் பிரிதலைத் தவிர்ப்பேன் என்று நற்றிணையில் உள்ள தலைவன் கார்காலத்தின் குளிரைக் காட்டித் தலைவியை ஆற்றுப்படுத்தினான்.

களவொழுக்கத்தில் இடையூறு மிகுந்துக் காணப்பட்டது. தலைவியின் உற்றார் உறவினர் அறியா வண்ணம் அவளை உடன்போக்கு அழைத்துச் சென்றுவிட்டான். தலைவியும் தலையில் பூச்சூடி தலைவனுடன் இணைந்து கானகத்தை நோக்கிச் சென்றுவிட்டாள். அப்போது அகநானூற்றில் உள்ள தலைவன் தலைவியின் நடையைப் பார்த்துப் பாராட்டிக் கொண்டே அழைத்துச்சென்றான்.

**"கொல்யானை வென்மருப்பும் கொல்வர் புலியதலும்**
**நல்யானை நின்ஐயர் கூட்டுண்டு – செல்வர்தாம்**
**ஓரம்பி னான்எய்து போக்குவர்யான் போகாமல்**
**ஈரம்பி னால்எய்தாய் இன்று"**[26]

என்னும் திணைமாலை நூற்றைம்பது பாடலில், கொல்கின்ற யானையின் மருப்பையும் கொல்தலில் புலித் தோல்களையும் உன் அண்ணன்மார் வரியாக வசூல் செய்துக் கொண்டுச் செல்கின்றனர். இத்தினைப் புனத்தின்கண் எதிர்வரும் வரை அரம்பினால் தாக்கி ஒழிப்பர். ஆனால் நீயோ யான் இவ்விடத்தை விட்டு நீங்காமல் இருக்கும்படி உன் இரண்டு கண்களாகிய அம்பினால் தாக்கினாய் என்று தன் ஆற்றாமையை தலைவியிடத்தில் எடுத்துக் கூறினான்.

தலைவன் பரத்தையர் சேரிக்குச்சென்றுப் பின் அவரோடு தங்கினான். பின் வைகறைப்பொழுதில் தன் இல்லம் திரும்பினான்.

இவ்வளவு நேரம் எங்குச் சென்றாய் என்று அவனுடன் ஊடல் கொண்ட அகநானூற்றின் தலைவி தன் மனநிலையைத் தலைவனிடத்தில் வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

**“தவறுஇலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்**
**அகநலின் ஆங்கு ஒன்று உடைத்து”**[27]

என்னும் குறளில், தவறு இல்லாத போதும் ஊடலுக்கு உள்ளாகி அம்மகளிரது மெல்லியத் தோளைப் பிரிந்து இருப்பதிலும் ஓர் இன்பம் உண்டு என்பதைச் சுட்டுகிறது.

பொருள் ஈட்டுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்தான். தான் மேற்கொண்ட வினையை முடித்து மீண்டும் வந்தான். வேறு நாட்டின் பொருள் ஈட்டுவதற்காகச் சென்றால் நீ என்னை நினைத்தது உண்டா என்று அகநானூற்றில் உள்ள தலைவி தலைவன் மேல் வைத்திருக்கும் அன்பின் காரணமாக வினவுகிறாள்.

இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவன் தலைவியின் கூந்தல் இயற்கை மணம் உடையது எனக் கூறுகிறான். தலைவியின் நடையை மயிலின் நடை என்றுப் பாராட்டுகிறான். இளவேனிற் பருவத்தில் வண்டுகள் மலர்களில் உள்ளத் தேனை நாடிச்செல்கின்றன. அதுபோல், என் பிறவிகள் தொடர்வதால் முற்பிறப்பில் பயின்றது இப்பிறப்பிற்கு உரியதாகத் தொடர்ந்தது என்று தலைவன் குறிப்பிட்டான். பூவில் மணம் இருப்பது போல் தலைவியின் கூந்தல் மணம் வீசுகின்றது என்பதை குறுந்தொகையில் தலைவன் தலைவியின் நலத்தைப் பாராட்டுவதை அறியமுடிகின்றது.

அணிலின் பற்களைப் போல் கூரிய வளைந்த முட்களைக் கொண்ட காட்டில் மலர்களில் தாதுக்கள் மிகுதியாக காணப்படுகின்றன. அதில் சுழி முல்லையுடையக் கடற்கரை பகுதி தலைவனே, இப்பிறப்பு மட்டும் இன்றி எப்பிறப்பு எடுத்தாலும் நீதான் என் கணவன் என்று தன் அன்பை வெளிப்படுத்தினாள் தலைவி. குறுந்தொகை என்னும் நூலில் இம்மை மறுமைப் பற்றிய சிந்தனைக் கூறப்பட்டுள்ளது. சங்க கால மக்களிடையே மறுபிறப்புப் பற்றிய சிந்தனையும் வினைப்பயன் பற்றிய சிந்தனையும் மேலோங்கி இருப்பதைப்பற்றி அறியலாம்.

குழந்தை தாயைப் பலகால் பார்த்து, அதன் குரலைக் கேட்டு மகிழ்ந்து வளர்ந்தது. அதுபோல, தலைவியும் தன் மனையின் கண் தாயைப் பார்த்தும் அவள் சொல் கேட்டும் வளர்ந்தாள். அறியாப் பருவத்தில் தாயோடு வாழ்ந்த தலைவி தலைவனோடு கூடினாள். பின் தலைவனிடம் விரைந்து எம் மனைக்கு வரவேண்டும். நான் விரைவில் உம்மனைக்குச் செல்வோம். அதைவிட இனியது எவையும் இல்லை என்பதை குறுந்தொகையில் உள்ள தலைவி தலைவனிடம் தன் கருத்தைக் எடுத்துக் கூறுகிறாள்.

### 3.1.9 தலைவனுக்கும் தேர்பாகனுக்கும் இடையேத் தகவல் தொடர்பு

தலைவன் வினையின் காரணமாக தலைவியை விட்டுப்பிரிந்து செல்கின்றான். வினை முடிந்ததும் தேர்ப்பாகனிடத்தில் தேரை விரைந்து செலுத்துக என்றும் தலைவித் தன்னை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பாள். ஆகவே நாம் விரைந்துச் செல்ல வேண்டும் எனக் கூறினான்.

**"நூல் நவின்ற பாக! தேர் நொவ்விதாச் சென்றீக**
**தேன் நவின்ற கானத்(து) எழில்நோக்கித் - தான்நவின்ற**
**கற்புத்தாள் வீழ்த்துக் கவுன்மிசைக் கையூன்றி**
**நிற்பாள் நிலையுணர்கம் யாம்"**[28]

என்னும் ஐந்திணை ஐம்பது பாடலில், கலை நூல் கற்றுள்ளத் தேர்பாகனே! வண்டுகள் காட்டின் அழகை இசைபாடும். அதுபோல தலைவியானவள் தன் கற்பைக் காப்பாற்றி இருப்பாள். தன் கண்ணத்தில் கையை வைத்து வழி மேல் விழி வைத்து காத்திருப்பாள். தேரை விரைவாகச் செலுத்தும் என்று தலைவன் தேர்பாகனிடத்தில் தலைவியின் அன்பை வெளிப்படுத்துகிறான்.

வினை முடித்து மீளும் தலைவன் பாகன் இடத்தில் பாகனே! தேரில் பூட்டிய குதிரைகளும் விரைகின்றன. அழகிய நெற்றியை உடைய எம் காதலி இழந்திருந்த என் நலனை மீட்டுத்தருவதற்காகக் காத்திருப்பாள். தலைவியைக் காண்பதற்காகத் தேரை வேகமாக செலுத்துக என ஐங்குறுநூற்றில் உள்ள தலைவன் தேர்பாகனை விரைவுப்படுத்துவதாக அமைந்துள்ளன.

தலைவன் சில வினையின் காரணமாகத் தலைவியை விட்டுப்பிரிந்து சென்று விடுகின்றான். அவன் குறித்துச் சென்று கார்ப்பருவம் வந்தது. தலைவியின் மீது மிகவும் அன்பு கொண்டிருந்தான். தலைவியைப் பார்க்கும் மகிழ்ச்சியில் தேர்பாகனிடத்தில் தேரை விரைந்துச் செலுத்துமாறு தலைவன் கூறுவதாக அமைந்த அகநானூற்று பாடல்.

போரினை மேற்கொள்ளச் சென்ற தலைவன் போரினை முடித்து வெற்றி கொண்டான். பின் வாகைச் சூடினான். அம்மகிழ்ச்சியின் காரணமாகத் தலைவியைக் காண விரும்பினான். அதனால் தலைவியைக் காணும் மகிழ்ச்சியில் தேரை விரைவாகச் செலுத்தும்படி அகநானூற்றில் உள்ள தலைவன் கூறினான்.

வினை முடித்து மீள்கின்ற தலைவன் பாகனை நோக்கினான். மழைப்பெய்ததால் உண்டான தவளையின் ஒலியால் தேரின்மணிக்குரலை தலைவி அறியவில்லை. உடனே நான் வருவதைத் தெரிவிப்பீர் என்று ஏவலர் இடத்தில் ஏவினேன். அவர்கள் சென்று அறிவிக்கவே, அவள் நீராடித் தன்னைப் புனைந்துக் கொள்ளும் பொழுதில் நான் செல்வேன். அப்பொழுது என்னை அனைத்து மகிழ்ந்த நிலை முன்னே நிகழ்ந்தது. அது மறக்க முடியவில்லை. நான் தலைவியை சென்றுப் பார்ப்பதற்காக நீ விரைந்து தேரைச் செலுத்துக என்று நற்றிணைத் தலைவன் பாகனிடத்தில் கூறினான்.

பொருள் ஈட்டுவதற்காகச் சென்ற தலைவன் அவ்வினையை முடித்தான். பின் தேர்பாகனை நோக்கி, பாகா! நம் வீரர்கள் பின் வருவாராக. நீ விரைந்து வேகமாகத் தேரைச் செலுத்துக. கானக்கோழி இரையைப் பெற்று பெடையை நோக்குவதை நீ பார்ப்பாயாக எனக் கூறினான். இவ்வண்ணமே என் தலைவி என்னைப் பார்த்துக் கொண்டிருப்பாள். எனவே விரைந்து தேரைச் செலுத்துக என நற்றிணைத் தலைவன் பாகனிடம் விலங்குகளின் நிலையில் தன் உணர்வை வெளிப்படுத்துகிறான்.

வினைமுற்றி மீண்ட தலைவன் தேர்பாகன் செய்த உதவியைப் பாராட்டிக் கூறுகின்றான். நெடுவழியில் தேரை நடத்தி, இல்லம் திரும்பினால் தலைவியைக் காண காலம் தாழ்த்தும் என உணர்ந்த பாகன், தன் அறிவுத் திறமையால் மேட்டு நிலத்தில் வழியாகவும், கரம்பு நிலங்கள் வழியாகவும் தேரைச் செலுத்திப் புதுவழி உண்டாக்கி தலைவன் விரைந்து தன் இல்லத்தை அடைந்தான். அந்த வழி அவனுக்கு மட்டுமில்லாமல் பிறர்க்கு பயன்படும் வகையில் இருந்தது என்று தன் அறிவின் ஆக்கத்திறனைக் குறுந்தொகை காட்டுகிறது.

பாகனே நான் சொல்வதைக் கேட்பாயாக, நாம் செல்லும் வினையை விரைவில் முடித்து மீண்டும் வருவோம். குன்றிலிருந்து விழும் அருவியைப் போல வெண்பொன் தகடுகளால் பதிக்கப்பட்ட வெள்ளித்தேரை விரைந்துச் செலுத்துவோம் என குறுந்தொகைத் தலைவன் தலைவியை விரைந்துப் பார்க்க வேண்டும் என்னும் நோக்குடன் பாகனை ஆயத்தப்படுத்துகிறான்.

### 3.1.10 இடைச்சுரத்தோர் கூறியது

தலைவன் பொருள் தேடி பாலைநிலம் வழியாகச் செல்கின்றான். செல்லும் வழியில் பாலைநிலத்தின் வெம்மைத் தெரியாமல் இருப்பதற்கு தலைவியின் நினைவுகள் வருவதாக இடைச்சுரத்தோர்க்கு இரங்கிச் சொல்லினான்.

புள்ளிகளையும் வரிகளையும் கொண்ட தன் நீண்ட கை வெந்துவிடும் என்ற அச்சம் தோன்றும். சிறிய கண்களையுடைய யானை மிகக் கவனமாகச் செல்லும். அத்தகைய வழித்தடத்தில் தலைவன் செல்கின்றான். அவ்வாறு அந்த வழித்தடத்தில் தலைவன் செல்லும் போது தலைவியின் நினைவுகள் வந்தன. தலைவியின் நினைவுகளே

அந்த வழியைக் கடக்க முடிந்தது என்று ஐங்குறுநூற்றின் தலைவன் வழியில் கண்ட இடைச் சுரத்தோரிடம் கூறினான்.

**"பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி**
**வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்**
**ஊரது சார்பும் செல்லும் தேயமும்,**
**ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்,**
**புணர்ந்தோர் பாங்கின் புணர்ந்த நெஞ்சமொடு**
**அழிந் தெதிர் கூறிவிடுப்பின்,ஆங்குஅத்**
**தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்,**
**......................................................"**[29]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவன் செல்லும் காலம் பற்றியும், பாலை நிலத்தின் வழி பற்றியும் இடைச்சுரத்தோர் கூறுவதாக அமைந்துள்ளது.

தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்றுவிடுகின்றனர். செல்லும் வழி அச்சம் தரக்கூடியது. ஏனென்றால் வணிகர்கள் கூட்டமாகச் செல்வார்கள். அவர்கள் செல்லும் வழியில் ஆறலைக் கள்வர்கள் வணிகர்களைக் கொன்று அவர் பொருள்களைக் கவருவர். அவர்கள் வேலைத் தாங்கிச் செல்கிறார்கள். நீங்கள் செல்லும் நேரம் இருள் சூழ்ந்து விடும். ஆதலால், தலைவியுடன் எங்கள் ஊரில் இரவிலே தங்கிச் செல்க என்று இடைச்சுரத்தோர் குறுந்தொகையில் உள்ள தலைவனையும், தலைவியையும் பார்த்து அடைக்கலப்படுத்துகின்றனர்.

**"அஞ்சுடர் நீள் வான் முகத்(து) ஆயிழையும் மாறிலா**

**வெஞ்சுடர் நீள் வேலானும் போதரக்கண்(டு) – அஞ்சி**

**ஒருசுடரும் இன்றி உலகு பாழ் ஆக**

**இருசுடரும் போந்தனஎன் றார்"[30]**

திணைமாலை நூற்றைம்பது என்னும் பாடலில், தலைவனும் தலைவியும் ஒளிமிக்க முகத்தோடு ஆராய்ந்து எடுத்து அணிகலன்களை அணிந்தவர்கள். இவர்கள் இச்சுரத்தில் செல்வதைப் பார்த்து அஞ்சி சந்திரன், சூரியன் ஆகிய இருசுடர்களில் ஒளி சுடர் இல்லாமல் பாழாகும்படி அவ்விரண்டு சுடரும் செல்கின்றது. சுரத்தின் வழியாகப் போகின்றது. தலைவன் தலைவி செல்வதைப் பார்த்துச் சந்திரன், சூரியனாக இடைச்சுரத்தோர் உவமைப்படுத்துவதை அறியமுடிகிறது.

தலைவனும் தலைவியும் உடன்போக்கில் சென்றனர். சுரத்திடை வழியாகச் செல்லக் கண்டோர் இக்கொடிய சுரத்தில் மென்மைப் பண்புடைய இவளைக் கொண்டு செல்லும் இந்த இளைஞன் உள்ளம் இடியைக் காட்டிலும் கொடியது தலைவன் தலைவியைக் கண்ட இடைச் சுரத்தோர் நற்றிணையில் கவலைப்பட்டுக் கூறுவதாக அமைந்துள்ளன.

**"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து,**

**அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை,**

**பொன் செய் கொல்லனின், இனிய தெளிர்ப்ப,**

**பெய் மணி ஆர்க்கும் இழை கிளர் நெடுந்தேர்,**

**வன் பரல் முரம்பின், நேமி அதிர,**

**சென்றுசின் வாழியோ, பனிக் கடு நாளே**

**இடைச் சுரத்து எழிலி உறைத்தென, மார்பின்**

**…………………………………………………"[31]**

என்னும் நற்றிணைப் பாடலில், வினைமுடித்து மீள்கின்ற தலைவனை இடையில் பார்த்த ஒருவர் முன்பு போகும்போது பாலை வழியே தேர்ச்சக்கரம் அதிர முன்பனிக் காலத்தில் சென்றான். இப்பொழுது கார்ப்பருவம் வந்தது எனக் குளிர்ந்த உள்ளத்தோடு மீள்கின்றான் என இடைச்சுரத்தோர் கூறி மகிழ்வதாக அமைகிறது.

### 3.1.11 தலைவன் பாங்கன் இடையே நேருக்கு நேர்த் தொடர்பு

பாங்கன் என்பவன் தலைவனின் சிறந்த நண்பன் ஆவான். தலைவன் தலைவியை விரும்புவான். ஆனால் பாங்கன் அவளை மறந்துவிடு என்று கூறுவான். அவள் உன்னைக் காணாமல் கவலையுறுகிறாள் என்று கூறுவதில் இருந்து எவ்வாறெல்லாம் தலைவன், பாங்கன் இருவருக்கிடையே தகவல் பரிமாறப்படுகின்றது என்பதைப் பற்றி ஆராயப்படுகிறது.

**"பெருங்கடல் வெண்சங்கு காரணமாய்ப் பேண(து)**
**இருங்கடல் மூழ்குவார் தங்கை - இருங்கடலுள்**
**முத்தன்ன வெண்முறுவல் கண்டுருகி நைவார்க்கே**
**ஓத்தனம் யாமே உளம்"**[32]

என்னும் திணைமாலை நூற்றைம்பது பாடலில், பெருங்கடலுள் வெண்சங்கை பெறுதலைக் நோக்கமாகக் கொண்டுள்ளது. அதுபோல தன் உயிரை பணயமாக வைக்கும் பரதவரின் தங்கை எம் தலைவி. கடலில் கிடைக்கும் முத்துபோல் உள்ள அவளின் பற்கள் என்னை அவளிடத்தில் செல்ல வைத்து தளர்ந்து வருகின்ற அலையைப் போன்று நாமும் மனம் தளர்ந்துப் போயுள்ளோம் என்று தலைவன் பாங்கனிடம் கூறினான்.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவன் வேறுபாடுக் கண்ட பாங்கன் ஐயுற்றான். இவ்வேறுபாடு எதனால் ஏற்பட்டது என வினவினான். தலைவியின் கண்களால் கட்டுண்டான் தலைவன். அதனால் ஏற்படும் தடுமாற்றம் யாவரும் அறிந்ததே. தலைவியின் கண்கள் இன்பத்தையும், துன்பத்தையும் ஒருங்கே தருவன. மலர் போன்ற கண்கள், அம்புகள் போல் நோய் செய்வது கொடுமையுடையது என்றான். தலைவி வாயால் பாடியும், தோள்களால் வீசியும், அவள் கண்களும் என் துன்பத்திற்குக் காரணம் என்று குறுந்தொகைத் தலைவன் தன்னைப் பற்றிய தகவலைப் பாங்கன் இடத்தில் பரிமாறினான்.

**"பண்ணாது பண்மேல்தே பாடும் கழிக்கானல்**
**எண்ணாது கண்டார்க்கே ஏரனங்கால் - எண்ணாது**
**சாவார்சான் றாண்மை சலித்திலா மற்றிவளைக்**
**காவார் கயிறுரி இவிட்டார்"**[33]

என்னும் திணைமாலை நூற்றைம்பது பாடலில், அருள்மிக்கத் தலைவியின் பெற்றோர் இவளை இல்லத்தில் வைத்துப் பாதுகாக்காமல் செய்தனர். கடற்கரைச் சோலைக்கண் கயிற்றை அவிழ்த்துவிட்டது போல் இருக்கின்றனர். தலைமகளின் அழகை கண்டு சென்ற பாங்கன் இயற்கையழகு மிக்க இச்சோலையின்கண் நின் தலைவி காணப்படுவது பலருடைய உள்ளத்தைக் துன்புறுத்தாமல் போகமாட்டாள் என்று தலைவனிடத்தே கூறினான்.

பெரிய மலையிடத்திலிருந்து தூய வெண்மை நிறத்தையுடைய அருவிகள் விழும். அந்த அருவிகள் பாறைகளின் வெடிப்புகளில் ஓடுகின்றது. பல மலர்களையும், பெரிய தோளையுடைய சிறுமியின்

நீரோடு ஒரு தன்மை விளங்கும். என்னுடைய வலிமைத் தலைவியால் குன்றியது. தலைவியின் தோளைத் தழுவிப் பெற்ற இன்பத்தை நினைத்து என்னுடைய மென்மை வன்மையை மாய்த்தது என்று குறுந்தொகைத் தலைவன் தகவலை பாங்கனிடம் பகிர்கின்றான்.

பாங்கன் கூட்டத்தில் தலைவியை பெறுவதற்கரிய காவலையுடையவன். அவள் இளையள். நீ அவளை மறந்துவிடு என்று பாங்கன் தலைவன் இடத்தில் கூறினான். எக்காலத்தும் அழியாத கொல்லிப்பாவைப் போல, என்னுள்ளத்தே தலைவி தங்கினாள். எவ்வாறாக அவளை நான் மறப்பேன் என்று நற்றிணைப் பாடலில் தலைவன் பாங்கனிடத்தில் தெரிவித்தான்.

தலைவன் தலைவியை நினைத்து வேறுபாடு அடைந்தான். இவ்வாறு வருந்தினால் நீ கொண்ட பெருமை உனக்கு இல்லை என எடுத்துரைத்தான். அந்த செய்தியைக் கேட்ட தலைவன் பாங்கனை நோக்கி பாங்கனே! உனக்கு ஒன்றும் தெரியாது. என் தலைவியின் முகம் மிகவும் அழகானது. மலர் போன்ற கண்கள் அழகு. என் தலைவியை பார்த்தால் இவ்வளவு கூறமாட்டாய் என அகநானூற்றுப் பாடலில் தலைவன் தன் தகவலை பாங்கனிடத்தில் கூறினான்.

இயற்கைப்புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன் தலைவியின் நினைவாகவே உறக்கமின்றி இருந்தான். அவன் இவ்வாறாக இருப்பதைப் பார்த்தப் பாங்கன் வினவினான். அதற்குத் தலைவன் தலைவியின் நினைவினை எண்ணி என்னால் உறங்க முடியவில்லை. தலைவியின் நினைவு அதிகமாக இருக்கின்றது என்ற தகவலை ஐங்குறுநூற்றில் தலைவன் புலம்பினான்.

ஊழ்வினையின் காரணமாக தலைவியைப் பார்த்துக் காதல் கொண்டான் தலைவன். பின் அவளைக் காணும் வாய்ப்பு பெறாது என வருந்தினான். உன்னைக் கவர்ந்தவள் எத்தன்மையானவள் என்று பாங்கன் கூறினான். அதற்குத் தலைவன் தெய்வ மகளிர்ப் போல் இருப்பாள் என்றும் என் நெஞ்சைக் கவர்ந்துக் கொண்டு மறைந்து விட்டாளே என ஐங்குறுநூறில் உள்ள தலைவன் பாங்கன் இடத்தில் எடுத்துரைக்கிறான்.

**"தலைவன் பாங்கனைச் சார்தலும் பாங்கன்"**[34]

என்னும் நம்பியகப்பொருள் நூற்பாவில், தலைவன் தன் மனக்கருத்துக்களைப் பாங்கனிடத்தில் கூறுதல். பாங்கன் தலைவனைப் பற்றிக் கேட்டறிதல். இவ்வாறாக ஒருவருக்கொருவர் தகவலைப் பரிமாறிக்கொள்கின்றனர்.

தலைவன் பனக்குருத்தால் வேயப்பட்டக் குதிரையை ஊர்ந்து தலைவியை அடைந்தான். இவை மடல் ஊர்தல் எனப்படும். தலைவன் மடல் ஊர்ந்தான் என்பதைப் பற்றியும் தலைவியை அடைந்த முறைப்பற்றியும் பாங்கனிடத்தில் கூறியது. கலித்தொகை பாடலில் உள்ள தலைவன் கருத்துக்களையும் மற்றும் மகிழ்ச்சியையும் நண்பனான பாங்கனிடத்தில் தான் வெளிப்படுத்துகின்றான்.

**"மொழிஎதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே"** [35]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், இங்கு தலைவன் கூறுவதை எதிர்த்துப் பாங்கன் மறுமொழிக் கூறுதல்.

### 3.1.12 பாணன் தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தலைவியிடம் தன் கருத்துக்களைக் கூறாமல் பாணனிடம் கூறி அனுப்புவான். பாணன் தலைவியிடத்தில் சென்று

தலைவியின் நலன்களையும் தலைவன் தலைவிமேல் வைத்துள்ள அன்பைப் பற்றியும் எடுத்துக் கூறுவான்.

> **“தாரா இரியும் தகைவயல் ஊரனை**
> **வாரான் எனினும் வருமென்று சேரி**
> **புலப்படும் சொல்லும்இப் பூங்கொடி அன்னான்**
> **கலப்பு அடும் கூடுங்கொல் மற்று”[36]**

என்னும் கைந்நிலை என்னும் பாடலில், அழகுமிக்க வயல்கள் சூழ்ந்துள்ள மருதநிலத்தில் தாரா என்னும் பறவைப் பறந்து செல்கிறது. சேரியில் வாழும் பரத்தையர் தலைவன் வராமல் இருந்தாலும் தலைவியின் கூட்டத்தைக் குலைக்கின்றது. இத்தகைய சொற்கள் நாள்தோறும் வெளிப்பட்டால் தலைவனை எம் தலைவி எவ்வாறு கூடுவாள்? எனத் தோழி பாணனை வாயில் மறுத்துக் கூறினாள்.

தலைவன் தலைவியை விட்டு பரத்தையர் சேரியில் தங்கியிருந்தான். தலைவி பிரிவை ஆற்றமுடியாமையால் பெரிதும் வருந்தினாள். இதை அறிந்த தோழி பாணனிடத்தில் பாணா! நான் சொல்வதைக் கேள். தலைவி மிகவும் தலைவனை எண்ணி வருந்துகின்றாள். அவள் வருத்தத்தை நாம் போக்க வேண்டும் என அகநானூற்றுப் பாடலில் உள்ள தோழி தலைவியின் நலன்களைப் பற்றிப் பாணனிடத்தில் கூறித் தலைவனிடத்தில் கூறும்படி அறிவுறுத்தினாள்.

### 3.1.13 தோழி வேலனை இகழ்ந்து கூறியது

தலைவியானவள் ஒரு நாட்டுத் தலைவனை விரும்புகின்றாள். இதனால் தலைவிக்கு நோய் வந்ததென்று தாய் வெறியாட்டு

நிகழ்த்துவாள். அதை ஏற்பதற்கு வேலன் வந்தான். அவனைக் கண்டு தோழி இகழ்ந்து கூறியது.

களவின் பொருட்டு தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்துச் சென்றான். இதனால் தலைவி பெரிதும் வருந்தினாள். இந்நோய் முருகனால் ஏற்பட்டது என்று எண்ணி அவள் தாய் வெறியாட்டு நிகழ்த்தினாள். அதனைப் பார்த்த தோழி அறத்தோடு நிற்கின்றாள். வெறியாட்டை விளக்கும் நோக்கில் தலைவன் மார்பினால் வந்த நோய் உன்னால் வந்த நோய் இல்லை எனத் தெரிந்திருந்தும் பழியேற்க வருகிறாய். நீ அறிவில்லாதவன் ஆனாய் என நற்றிணையில் உள்ள தோழி வேலனை இகழ்ந்துரைப்பதாய் உள்ளது.

### 3.1.14 தோழி உழவனிடம் கூறியது

தோழி தலைவிக்குச் சிறந்த தகவல் தொடர்பாளராக விளங்குகின்றாள். அவள் தலைவனிடத்தில் நன்மை தீமைகளை எடுத்துரைக்கின்றாள். அதுபோல் தோழி தலைவன் அறிய வேண்டும் என்பதற்காக உழவனிடத்தில் கூறுவது போல் அமைந்துள்ளது.

தலைவன் மறைந்துக் கொண்டு இருப்பதைத் தோழி அறிகின்றாள். தலைவியை வீட்டின் கண்ணே இற்செறித்து வைத்தது தலைவன் அறிய வேண்டும் என்னும் நோக்குடன் உழவனிடம் உழவனே நீ நாற்று நடுகையில் உழச்சென்ற வயலில் உள்ள கோரைப்புற்களையும், குவளை மலர்களையும் நீ அழித்து விடாமல் உழுவாய். அவற்றை என் தலைவியானவள் வளையல்களாகவும், உடைகளாகவும் கொள்வாள் என நற்றிணை என்னும் நூலில் உள்ள தோழி உழவனிடம் கூறுவது போல் தலைவன் கேட்குமாறு உரைக்கிறாள்.

### 3.1.15 செவிலி தோழிக்கிடையே தகவல் தொடர்பு

தலைவியின் தாயானவள் செவிலி. தலைவி உடன்போக்குச் சென்று விடுகின்றாள். தலைவியைக் காணாது செவிலி வருந்துகின்றாள். அவள் தோழியின் உதவியை நாடுகின்றாள். தோழியின் உதவியால் தலைவியைத் தேடுவதன் மூலம் தோழி செவிலி தகவல் எவ்வாறுப் பரிமாறுகின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

தலைவி தலைவன்மேல் கொண்ட அன்பின் காரணமாகப் பிரிந்தபோது உடல் மெலிவுற்றாள். அம்மெலிவு தெய்வத்தால் வந்தது என எண்ணி செவிலி வெறியாட்டு நிகழ்த்த எண்ணினாள். அதை அறிந்த தோழி தலைவியின் கற்பைக் காக்க எண்ணினாள் என்பதை ஐங்குறுநூறு பாடலின் வழி தோழி செவிலியிடம் உண்மையை வெளிப்படுத்தி தலைவியின் கற்பைக் காத்தாள்.

“பெதும்மை பருவத்து தலைவி தலைவன்மேல் கொண்ட அன்பினால் தலைவனைப் பிரிந்து மெலிவுற்றாள். அதைக் கண்ட செவிலி தலைவியின் நிலைக்கு வேலனோ என ஐயுற்றாள். கட்டுவிச்சியை அழைத்து கழங்கினும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்ய எண்ணினாள்”.[37] அதை அறிந்த தோழி தலைவியின் கற்பை காப்பாற்றும் நிலையில் செவிலிக்கு உண்மையைக் கூறி தலைவியைக் காத்தாள்.

அறத்தோடு நின்று தலைவன் திருமணத்திற்குத் தேவையானப் பொருளைத் தேடுவதற்காகப் பிரிந்து சென்றான். தோழி செவிலியிடத்தில் அன்னையே, நீ வாழ்க! நான் சொல்வதை விரும்பிக் கேட்பாயாக, உன் மகள் பூப்போன்ற மையுண்ட கண்களையுடையவள்.

அவளுடைய நோய்த் தீர்ப்பதற்கு மருந்தாக கொங்கனுடைய தேர் அடம்புக்கொடிகளை அறுத்து ஊர்ந்து வருகின்றது. இனித் தலைவி மகிழ்ந்து காணப்படுவாள். தலைவன் வரவினைக் காண்பாயாக! என ஐங்குறுநூற்றில் உள்ள தோழி செவிலியிடத்தில் தகவலைக் கூறினாள்.

தலைவி தலைவனுடன் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சியின் காரணமாக ஊர்மக்கள் பலர் அலர் தூற்றினர். இதை குறிப்பால் உணர்ந்த செவிலித்தாய் தலைவி மீது கோபம் கொண்டு காவலையும் ஏற்படுத்தினாள். அதனால் ஐயுற்றத் தோழி செவிலியிடத்தில் தலைவன் மிகவும் நல்லவன். ஆகையால் தலைவி அவனை விரும்பினாள். தலைவியை நீ கடிய வேண்டாம் என்று அகநானூற்றில் உள்ள தோழி செவிலியிடத்தில் கூறினாள்.

“வெறியாடும் பொருட்டு வரவழைத்த வேலேந்தியப் பூசாரியைப் போகவிடுக. பலியிடுவதற்காகக் கொண்டு வந்துள்ள கள்ளையும் ஆட்டினையும் விட்டுவிடுக. பூசைக்கு கொண்டு வந்துள்ள கள்ளைப் பருகக் கொடுத்து விடுக. பழி இல்லாத என் தலைவி ஊழ்வினையின் காரணமாகத் தன் காதலனால் அல்லல்படுகின்றாள். வேறு யாரையும் தலைவி மணம்புரிய மாட்டாள்”[38] என்று திணைமாலை நூற்றைம்பதில் உள்ள தோழி அறத்தோடு நின்று தலைவியின் காதலை செவிலியிடத்தில் வெளிப்படுத்துகிறாள்.

மாளிகை இல்லத்தில் வளமாக வாழ்ந்த தலைவி ஒரு நாள் பேணி வளர்த்த தாயை விட்டு உடன்போக்கில் சென்றுவிட்டாள். தன் தோழிகளையும் மறந்துவிட்டாள். தலைவனுடன் சுரத்திடை வழியாகச் சென்றுவிட்டாள். செய்தியை அறிந்த செவிலித்தாய் என் மகளின் சிறிய அடிகள் அச்சுரவழியில் கடக்க முடியுமோ! என அகநானூறு பாடலில்

உள்ள செவிலி மிகவும் வருந்தி தோழியிடத்தில் கூறினாள். அதற்குத் தோழி நீ கலங்காதே இன்று இல்லை என்றாலும், என்றாவது ஒரு நாள் தலைவி தலைவனுடன் செல்வாள் என்று தோழி புரிய வைத்தாள்.

தலைவி தலைவனுடன் சுனையில் உள்ள பூவைப் பறிக்க உதவுமாறு வேண்டினாள். நினைத்து செய்த செயல் இல்லை. ஊழ்வினையின் காரணமாக இச்செயல் அமைந்தது. எல்லோரும் ஊழ்வினையின் காரணமாகவே செயல்படுகின்றோம். செவிலி தலைவியின் வேறுபாடு அறிகிறாள். இ்.து எதனால் ஆயிற்று என வினவினாள். அப்போது தோழி அறத்தோடு நின்று தலைவி தினைப்புனம் காத்து சுனையிடைச் சென்ற வழி நடந்தது என்று கூறினாள். தலைவன் செய்த உதவிக்கு கைம்மாறு காண வருந்தியதால் உடல் மெலிந்தாள் என்றாள். இவ்வாறாக குறுந்தொகையில் உள்ள தோழி செவிலியிடம் அறத்தோடு நிற்பதாக அமைந்துள்ளது.

உயர்ந்த மலைகளையுடைய தலைவன் தலைவியை வரைந்து கொள்ளாமல் களவின் பொருட்டு நீடித்தான். தோழி தலைவனிடத்தில் வரைந்து கொள்ள வேண்டும் எனக் கூறினாள். மணம் முடிக்க இசைந்தான். இசைந்ததைத் தோழி செவிலியிடத்தில் கூறினாள். அவள் பெறுவதற்குரிய அமிழ்தமே உண்ணும் உணவாகப் பெரும் புகழையுடைய உலகத்தையே பெற்றுவிட்டவளாகத் தலைவி கருதுவாள் என்று குறுந்தொகையில் தோழி அறத்தோடு நின்று தலைவியைப் பற்றி மகிழ்ந்து தகவலை செவிலியிடத்தில் பரிமாறுகின்றாள்.

**"அடும்பிவர் எக்கர் அலவன் வழங்கும்**

**கொடுங்கழிச் சேர்ப்பன் அருளான் எனத்தெளிந்து**

**கள்ள மனத்தான் அயல்நெறிச் செல்லுங் கொல்**

**நல்வளை சோர நடந்து"**[39]

என்னும் ஐந்திணை எழுபது பாடலில், தோழி செவிலியைப் பார்த்து அடம்புக் கொடிகள் படர்ந்துள்ள மணல்மேடுகளில் நண்டுகள் நடமாடும். கடற்கரைத் தலைவன் வரைவு நீட்டித்தலால் அன்புடையன் ஆகான் என அறிந்ததால் பெருந்துன்பம் அடையும்படி கள்ளமனம் உடையவன். அவன் வேறொரு குலப்பெண்ணை மணந்து கொள்வானோ என்று வருத்தப்பட வேண்டாம். அவன் பொருள் தேடச் சென்றிருக்கின்றான். விரைவில் வந்துவிடுவான் நீங்கள் வருத்தப்பட வேண்டாம் என்று தோழியின் மனக்கருத்தை செவிலியிடம் எடுத்துக் கூறுகிறாள்.

தோழி தலைவியை மணம் முடிக்க அயலார் வருவதை அறிந்தாள். அவள் செவிலியிடம் அன்னையே! நான் கூறுவதைக் கேட்பாயாக, களவில் வந்தொழுகும் தலைவருடைய தேர் நிறுத்தப்படுவதற்கு உரியதாகுமோ? அவரும் வறிதே செல்வரோ கொலை வல்ல சிறுமையாளரிடம் அகப்பட்டுக் கொள்வாயோம் என்று தோழி செவிலியிடத்தில் ஐயப்படுகிறாள்.

அன்னையே! நான் சொல்வதைக் கேட்பாயாக, வளமிக்க மருத நிலத்தலைவன் நம் தலைவியை மிகவும் அன்பாகக் கூடியிருக்கின்றான். அவன் வீட்டின் அருகே தங்கியுள்ள சேவலானது கூவி துயில் எழுப்பியது. இருவரும் அன்பின் மிகுதியால் பொழுது புலர்வது வரைப் பிரியாது கூடி உறங்கின எனத் தலைவனின் அன்பின் ஆழத்தை

திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலின் வழி தோழி செவிலியிடத்தில் எடுத்துக்கூறுவது தெளிவாகின்றது.

### 3.1.16 தலைவி, தலைவன், இடைச்சுரத்தோர்க்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் பிரிந்துச் சென்ற பின் அவன் சென்ற பாலை வழியின் அச்சத்தை இடைச்சுரத்தோர் சொல்வதைக் கேட்டு வருந்திக்கூறியது.

**"உயர்கரைக் கான் யாற்று அவிர்மணல் அகன் துறை**
**வேனிற் பறிரி விரி மலர் குனிவஇத்**
**தோடலை தை இய மடவரல் மகனே!**
**கண்ணினும் கதவ நின் முலையே!**
**முலையினும் கதவ, நின் தடமென் தோளேன!"**[40]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவன் இடைச்சுரத்தின் வழியாகப் பொருள் தேடச் சென்றான். அவன் சென்ற வழியை நினைத்துக் கொண்டிருந்தாள் தலைவி. அப்பொழுது தலைவனைக் கண்ட இடைச்சுரத்தோர் தலைவன் சென்ற வழி மிகவும் வெம்மை தரக்கூடியன எனத் தலைவியைக் கண்டு கூறினர்.

உடன்போக்கில் எதிர்கொள்ளவிருக்கும் இடையூறுகளை நீக்குவதற்குத் துணையாகத் தலைவன் வில் ஏந்தி முன் சென்றான். கழைக்கூத்தர்கள் மூங்கில்மேல் கட்டிய கயிற்றின் மேல் ஏறிநின்று ஆடும்போது முரசு கொட்டுவார்கள். அந்த ஒலியை மேல் காற்று வீசும்போது எழுகிறது. அத்தகைய மூங்கில் செறிந்த பாலை நிலப்பரப்பில் கடந்து செல்ல நினைக்கிறார்கள். கையில் வில் ஏந்திய தலைவன் கால்களில் வீரக்கழல்கள் உள்ளன. வளையணிந்த கைகளையுடைய இம்மகளின் மெல்லிய அடிகளின் மேல் சிலம்புகள் உள்ளன. இந்த நல்லோர் யாவரோ? என்று குறுந்தொகை பாடலில்

உடன்போக்கில் செல்லும் தலைவன் தலைவியைப் பார்த்து கூறுகின்றனர் இடைச்சுரத்தோர்.

### 3.1.17 செவிலி தெய்வத்திடம் கூறியது

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்று விடுகிறாள். மகளின் பிரிவைத் தாங்கமுடியாமல் செவிலி தெய்வத்திடம் மென்மையான உடலையுடைய என் மகள் பாலை நிலத்தை எப்படி கடந்து சென்றாள். அவளின் நிலைப்பற்றி தெய்வத்திடம் கேட்டு அறிதல்.

> **“ஞாயிறு காணாத மான்றிழற் படிஇய**
> **மலைமுதல் சிறுநெறி மணல்மிகத் தாஅய்,**
> **தண்மழை தலைய வாகுக – நம்நீத்துச்**
> **சுடர்வாய் நெடுவேற் காளையொடு**
> **மடமா அரிவை போகிய சுரனே”**[41]

என்னும் குறுந்தொகை பாடலில், தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்டாள். ஒரு காளையை நம்பி நம்மை துறந்துவிட்டுச் சென்றாளே. அவள் சென்ற பாலை நிலம் மிகவும் கொடியதாக இருக்கும். சூரியன் வெப்பத்தால் மணல் மிகவும் வெப்பத்தை தரும். ஆகவே இறைவா! நீ மழையைப் பொழிவித்து குளிர்ச்சியைத் தருவாயாக என்று தெய்வத்திடம் தன் மகளுக்காக செவிலி வருந்தி வேண்டுவதை அறியமுடிகின்றது.

### 3.1.18 பரத்தை பாங்காயினர்க்கு கூறியது

பரத்தை தலைவியைப் பற்றி தவறான கருத்துக்களை பாங்காயினர் கேட்ப கூறுவாள். தலைவனைத் தலைவி இடத்தில் போக விடாமல் காப்பாள். பரத்தை தலைவியைப் பற்றி பாங்காயினர்

இடத்தில் எவ்வாறு புறங்கூறுகிறாள் என்பதை பற்றி இதன் மூலம் அறியலாம்.

நல்விருந்து கண்ட அளவில் இல்லத்தில் எதிர்கொண்டு நல்லோர் போல வண்டுகளின் வருகையை அறிந்து ஆம்பல்கள் தன் கதவைத் திறந்து விடும். தன்னுடைய காமத்தின் செவி அறிந்து துய்ப்பவன் தலைவன் என்பதையும் அவனுக்கு ஏற்ப அன்பாய் இருப்பது நானே என்று பரத்தை கூறினாள். பின் குறுந்தொகைப் பாடலில் உள்ள பரத்தை செவியறியாமல் அன்பு செய்வது தலைவி என்று இகழ்ந்து பாங்காயினர் கேட்ப தகவலாகக் கூறுகிறாள்.

### 3.1.19 குறளன்-கூனி தகவல் தொடர்பு

கூனியும் குறளனும் ஓர் குறைபாடு உடையவர்கள். கூனியும் குறளனும் ஒருவருக்கொருவர் கருத்துக்களைப் பறிமாறிக் கொள்பவர்கள். கூனியும் குறளனும் எவ்வாறு எல்லாம் உரையாடுகின்றனர் என்பதை கீழ்க்காணும் பாடல் மூலம் அறியலாம்.

**“என் தோற்றனை கொல்லோ?**
**நீருள் நிழல் போல் நுடங்கிய மென் மென்சாயல்**
**ஈங்கு உருச் சுருங்கி**
**இயலுவாய்!- நின்னோடு உசாவு வேன் நின்றீத்தை**
**அன்னையே! காண்தகை இல்லாக் குறள் நாழிப் போழ்தினான்**
**ஆண்டலைக்கு ஈன்ற பறழ் மகனே! நீ எம்மை**
**...........................................................”**[42]

என்னும் கலித்தொகைப் பாடலில், குறளன் கூனியைப் பார்த்து கரையில் நின்ற தொன்றில் நிழல் நீருள்ளே அடங்கியது போல, மெல்லிய உடலில் கூன் தோன்ற நடக்கின்றவளே. நான் உன்னோடு சில நாள் உசாவுவேன். அங்ஙனம் நான் உசாவுவதற்கு நீ நல்வினை செய்திருத்தல் வேண்டும் சற்று இவ்விடத்தில் நிற்பாயாக என்றும்

குறளன் கூறினான். அதற்கு கூனி நீ என்னை விரும்புகிறேன் என்று தடுத்தாய். உன்னைப் போல் குறளாய் இருப்பவள். என்னைத் தீண்ட முடியாது என்று கூனி தன் கருத்தை குறளனிடம் வெளிப்படுத்தி உரையாடுவதாய் அமைந்துள்ளது.

### 3.1.20 வாயில்களை நோக்கி தலைவி கூறுதல்

தலைவன் முன்பு தலைவி இடத்தில் அன்பாக இருந்த போது நடந்த நிகழ்வை இப்பொழுது தலைவன் இல்லாத காரணத்தினால் வாயில் இடத்தில் தன் தகவலைக் கூறுகின்றாள். மனதில் வைத்திருக்க முடியாததாலும் யாரிடமாவது பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தினாலும் வாயில்களுக்கு தன் தகவலை வெளிப்படுத்தினாள். தலைவி எவ்வாறு வாயில்களுக்கு தகவலைக் கூறுகின்றாள்.

பரத்தையின் காரணமாக பிரிந்து சென்று மீண்டும் தலைவியை மகிழ்வித்து அவளோடு கூடினான். பின் மீண்டும் பரத்தையரோடு உறவுக்கொண்டு தலைவியைப் விட்டுப் பிரிந்தபோது தலைவி என்னை விட்டுப் பிரிய மாட்டேன் என வாக்களித்து என்னுடன் கூடியிருந்து பின் பொய்த்து விட்டான் என்று குறுந்தொகையில் உள்ள மலர்களை ஒத்த கண்கள் அழுமாறுப் பிரிந்தான் என வாயில்களை நோக்கிப் புலம்புகிறாள் தலைவி.

தலைவன் தலைவியை விட்டுப் பரத்தமைக் கொண்டிருந்தான். ஞாழலும், மருத மலர்களும், நீர் நிலையில் பரவிக் கிடப்பது போல் தலைவன் பரத்தையோடு புனலாடினான். இங்கு தலைவியின் உடல் மெலிந்து அழகு குலைந்தன. தோள்கள் தனிமைத் துயரால் பொலிவு இழந்தன. தலைவன் தன்னைப் புறக்கணித்தமையால் தோள் நெகிழ்ந்தன எனக் குறுந்தொகை என்னும் நூலில் வாயில்களை நோக்கி தலைவி தகவலாக எடுத்துரைக்கிறாள்.

### 3.1.21 தலைவன், சான்றோர் தகவல் தொடர்பு

தலைவன் சான்றோர் இடத்தில் தலைவியை என்னிடத்தில் சேர்க்கவில்லையென்றால் எனக்கு மடல் ஏறுவதைத் தவிர வேறு வழியில்லை என்று சான்றோர் இடத்தில் கூறினான்.

**"தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு**

**மாலை உழக்கும் துயர்"**[43]

என்னும் குறளில், நான் மடல் ஏறுதலையும் மாலைக்காலத்தில் பிரிவால் வரும் துன்பத்தையும் வளையல் அணிந்த என் காதலி, எனக்குத் தந்துவிட்டாள் என்று சான்றோர் இடத்தில் அவன் புலம்புவதாக அமைந்துள்ளன.

மடல் ஏறுகின்ற தலைவன் சான்றோர்களை நோக்கி நற்குணங்களை அமைந்த நீவிர் வாழ்வீராக! பிறருடைய நோயை தன் நோய் போல் எண்ணுவீர். இதுவே உங்களுடைய கடமையாகும். என் தலைவியை என்னிடம் சேர்ப்பீராக என்று கலித்தொகையில் உள்ள தலைவன் சான்றோர் இடத்தில் பேசுவதாக அமைந்துள்ளது.

### 3.1.22 தலைவி பாணன்கிடையே தகவல் தொடர்பு

பரத்தையரோடு உறவு கொண்டு தலைவியைப் பிரிந்திருந்தான். பின் இல்லத்தின் ஞாபகம் வந்தது. இல்லத்திற்கு திருப்புவதற்காக பாணனை அனுப்பினான். தலைவி பாணன் இடத்தில் வாயில் மறுத்துக் கூறினாள்.

**"பரியுடை நல்மான் பொங்குஉளை அன்ன**

**அடைகரை வேழம் வெண்பூப் பகரும்,**

**தண்துறை ஊரன் பெண்டிர்,**

**துஞ்சு ஊர் யாமத்தும், துயில் அறியலரே"**[44]

என்ற ஐங்குறுநூறு பாடலில், பரத்தை மனையிலிருந்து தலைவன் தன் மனைக்கு வருவதற்காக பாணனை விடுத்தான். அவள் பாணன் இடத்தில் தலைவனை மீண்டும் என் இல்லத்திற்கு வர அனுமதிக்கமாட்டேன். எந்த வாய்ப்பும் தரமாட்டேன் என்றுக் கூறி மறுத்து தலைவி பாணன் இடத்தில் கூறினாள்.

பாணன் பொய் கூறுவதை தலைவி பலமுறை கண்டறிந்தாள். பாணனே, நீ என்னிடம் உண்மையை மட்டும் கூறு என வேண்டினாள். நீ தலைவன் வினை முடித்து இல்லம் வருவதைக் கண்டால் தலைவனோடு வராமல் நீ மட்டும் ஏன் தனியே வருகின்றாய். யார் உனக்கு உரைத்தார் உன்னைப் போல் பொய்யானவர் தலைவர். நீங்கள் என்னிடம் சொல்வது உண்மையானால் யானை சேனையில் படியும் பொன் நிறைந்த பாடலிபுத்திரத்தை அன்பு பரிசாக பெறுவீர் எனக் குறுந்தொகைப் பாடலிலுள்ள தலைவி கருத்துக்களை பாணன் இடத்தில் தெரிவித்தாக உள்ளது.

### 3.1.23 தலைவி தெய்வத்திடம் கூறியது

தலைவி தலைவனின் நற்பண்புகளைக் கூறித் தலைவனுக்கு எவ்வகையான தீங்கும் வரக்கூடாது என்று தெய்வத்திடம் வேண்டுக்கோள் வைக்கப்படுகிறது.

“ஊர்மன்றத்தில் உள்ள கடம்பமரத்தில் பூ பூத்து குலுங்குகிறது. செங்கடம்பு பூ முருகப் பெருமானுக்கு உகந்த மலராகும். அச்சம் செய்தலில் பழமை வாய்ந்த கடவுள் கொடுமையுடையவரைக் கொல்லும் நுதல் பசந்தமையும் தோள் நெகிழ்ந்தமைக்கு காரணம் தலைவன் இல்லையெனவும் கூறி தலைவன் கொடியரவல்லவர் என உணர்த்தினாள். நல்லவரைக் காப்பதற்குத் தலைவி தெய்வத்திற்கு

வழிபாடு செய்தாள். தன் தலைவர் கொடியரவல்லவர் எனக் கூறி துன்புறுத்தல் கூடாது என வழிப்பட்டாள். ஊர் மன்றத்தில் உள்ள மரத்தில் தெய்வம் உறைவதாக நம்பி குறுந்தொகைப் பாடலில் உள்ள தலைவி, தெய்வத்திடம் தாம் கொண்ட கடவுளின் நம்பிக்கையும் தலைவனின் பண்பையும் ஒப்பிட்டு காட்டுகிறாள்.

### 3.1.24 தலைவன் முல்லை காட்டை நோக்கி கூறியது

தலைவன் தலைவியை விட்டு கார்காலத்தில் பிரிகின்றான். அப்பொழுது முல்லைப் பூ பூத்துக் குலுங்குகிறது. அந்தப் பூவைப் பார்த்து தலைவன் தன் மனக்கவலையை கூறி புலம்பும் போது முல்லையே நீ வாழ்வாயாக, முல்லை மேகம் சூழ்ந்து மழை பொழிந்து நீர் மிகுந்து காணப்படுகிறது. முல்லை நிலத்தில் வினை முடிந்து பலரும் ஊருக்குத் திரும்பும் மாலைநேரத்தில் ஒளி குறைந்து காணப்படும். அந்த கார்காலத்தில் முல்லை பூ மலர்ந்து சிரிக்கும். நீ நினது சிறிய வெள்ளிய அரும்புகளால் சிறு முறுவல் கொண்டவை. நான் என் காதலியரைப் பிரிந்து படும் துயரத்தைக் கண்டு சிரிக்கின்றாயா, உன் ஆற்றலை என்னிடத்தில் காட்டுவது உனக்குத் தகுமோ? என்று குறுந்தொகையில் உள்ள தலைவன் முல்லைக் காட்டிடம் தன் மனம் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறான்.

தலைவன் குறித்துச் சென்ற பருவத்தில் மீண்டும் வந்தான். ஊரின் அருகில் வரும் பொழுது முல்லைக் காட்டைப் பார்த்தான். கார்காலத்தில் முல்லை மிகவும் அழகாகப் பூத்துக் குலுங்கியது. பூவைப் பார்த்து நீ நன்னலம் எய்து நீள்கின்றாய். என் காதலியைக் காணப் போகிறேன்? உன்னைப் போலவே அவளும் மிகுந்த அழகுடன்

காணப்படுவாள் என்று ஐங்குறுநூற்றில் முல்லைக்காட்டின் அழகு, முல்லைப்பூ மற்றும் தலைவியின் அழகை வர்ணிக்கப்படுகின்றன.

### 3.1.25 செவிலி-நற்றாய்க்கிடையே தகவல் தொடர்பு

தலைவி உடன்போக்கு போய்விடுகிறாள். இதை அறிந்த செவிலி நற்றாய் இடத்தில் கூறுகின்றாள். தலைவி அவ்வாறு சென்றது அறமே. ஆனால் தலைவியைப் பிரிய முடியாமல் என் மனம் நெகிழ்கின்றது என்று கூறினாள். இவ்வாறு செவிலியும் நற்றாயும் எவ்வாறு ஒருவருக்கொருவர் தகவலைப் பரிமாறிக் கொள்கிறார்கள்.

**“பனிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்**
**செவிலியை வினாதலும் செவிலிக் கிகுளை**
**வரைந்தமை யுணர்த்தலும் வரைந்தமை செவிலி**
**நற்றாய் குணர்த்தலும் உற்றாங் கிருவருந்**
**தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்**
**கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றலும்**
**……………………………………………………..”[45]**

என்னும் நம்பியகப்பொருள் நூற்பாவில், பனிமொழி நற்றாய் மணன் அயர் வேட்கையில் செவிலியை வினவுகின்றாள். செவிலி நற்றாய் இடத்தில் தலைவியின் இல்லறத்தில் புதல்வனைத் தழுவி கிடந்தான் தலைவன். அப்புதல்வனை ஈன்றவள் அவ்விருவரின் மேல் மிகவும் அன்பு கொண்டிருந்தாள். அது எவ்வாறு இருந்தது என்றால் எப்பொழுதும் இனிமை தருவதாக இருந்தது. அவ்வின்பத்திற்கு இவ்வுலகம் முழுவதும் ஒப்பானதாகும். ஐங்குறுநூற்றில் தலைவி தன் குடும்பத்தின் மீது வைத்திருக்கும் அன்பை செவிலி நற்றாய் இடத்தில் எடுத்துரைப்பதை அறியமுடிகின்றன.

குறுந்தொகையில், ‘‘தலைவி தலைவனுடன் இல்லறம் நடத்தும் சிறப்பினைப் பார்த்தாள் செவிலி. நன்றாக காய்ச்சியப் பாலைத் தயிராக்கினாள். அந்தத் தயிரைத் தன் கைகளால் நன்குப் பிசைந்து தாளித்தாள். இனிய புளிப்புச் சுவையுடைய உணவினை தானே துழாவிச் சமைத்தாள். அழுக்குற்ற தன் கைகளை தன் துணியில் துடைத்தாள். தான் சமைத்த உணவினை தன் கணவனுக்கு பரிமாறினாள். அவன் உணவு இனிது என்று புகழ்ந்துக் கூறினான். பின் அவளுடைய முகம் மகிழ்ந்து சிரித்தது. அதைக் கண்ட செவிலி தான் பார்த்த காட்சியை நற்றாய்க்கு தகவலாகப் பரிமாறப்படுகிறது.

### 3.1.26 பரத்தை பாங்காயினார் கேட்பக் கூறியது

பரத்தை என்பவள் தலைவியைப் பற்றி புறம் கூறிக் கொண்டே இருப்பவள். தலைவன் என்னுடையவன் என்மேல் மிகவும் அன்பு கொண்டவன் என்று பாங்காயினர் கேட்கக் கூறுவாள்.

**‘‘குருகு உடைத்து உண்ட வெள் அகட்டு யாமை**
**அரிப் பறை வினைஞர் அல்கு மிசைக் கூட்டும்,**
**மலர் அணி வாயில் பொய்கை, ஊர!நீ**
**என்னை ‘நயந்தனென்’ என்றிநின்**
**மனையோள் கேட்கின் வருந்துவன் பெரிதே’’[46]**

என்னும் பாடலில், தலைமகள் தன்னைப் பழித்துப் பேசினால் எனக் கேள்வியுற்றாள் பரத்தை. அதற்கு பரத்தை தலைவன் என் மேல் தான் அன்பு கொண்டவன். எனக்கு மட்டுமே உரிமையுடையவன் வேறு யாருக்கும் சொந்தம் இல்லை என்று பரத்தை பாங்காயினர் கேட்கக் கூறினாள்.

சேரிப் பரத்தை புறங்கூறினாள் என்று அறிந்த காமக்கிழத்தி, தலைவனுக்கும் தனக்கும் உள்ள அன்பு பிணைப்பையும், உறவினையும் கொண்ட காமக்கிழத்தி, அவளைப் பற்றி வெகுண்டு உரைத்தாள். பரத்தையைப் பற்றி இகழ்ந்துக் கூறினாள். காதல் பரத்தை மீது சினம் கொண்டாள். துணங்கையாடும் களத்திற்கு இல்லுறை மகளிர் வந்தாள். பின் தலைவன் இரவில் தலைவியைக் கூடி விட்டு, பகலில் பரத்தையர் சேரிக்குச் சென்று அவர்களை நுகர்தலைக் கொண்டிருந்தான். இரவில் தங்கிய நீர் நாய் பகலில் வாளை மீனை உணவாகப் பெறுவது போன்று பரத்தை தலைவனைப் பற்றி பாங்காயினர் கேட்பக் கூறினாள். இவ்வாறு குறுந்தொகையில் பரத்தை உறவு குறித்து ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

### 3.1.27 அந்தணர் செவிலிக்கிடையே நிகழும் தகவல் தொடர்பு

தலைவி தலைவன் உடன்போக்கு சென்றுவிட்டனர். தன் மகளைத் தேடி செவிலி பின் தொடர்ந்து சென்றாள். செல்லும் வழியில் செவிலி அந்தணர் இடத்தில் உரையாடுகின்றாள்.

> **"அறம் புரி அருமறை நவின்ற நாவி**
> **திறம் புரி கொள்கை அந்தணிர்! தொழுவல்' என்று**
> **ஒண்டொடி வினவும் பேதை அம் பெண்டே!**
> **கண்டனெம் அம்ம, சுரத்திடை அவளை-**
> **இன் துணை இனிது பாராட்ட**
> **குன்று உயர் பிறங்கல் மலை இறந்தாளே"[47]**

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்ற பின் அவர்களை பின் தொடர்ந்து சென்றாள் செவிலி. சென்ற வழியில் அந்தணர் ஒருவரைப் பார்த்தாள். தன் மகள் பற்றி வினவினாள். அதற்கு அந்தணர் சுரநெறியில் பார்த்தோம். அவள் தன் தலைவனுடன் மிகுந்த

மகிழ்ச்சியுடன் சென்றாள் என அந்தணர் செவிலி இடத்தில் தகவலாகக் கூறினார்.

### 3.1.28 செவிலி அயலோர் இடத்தில் கூறியது

தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு உடன்போக்கு சென்றபோது அவர்கள் எங்கு சென்றார்கள் எனச் செவிலி தேடிச் செல்கின்றாள். அப்படி தேடிச் செல்லும் வழியில் அயலோரைப் பார்த்து ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் சென்றதைப் பார்த்தீர்களா எனக் கேட்டாள்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கில் ஈடுப்பட்டதை அறிந்து அவளைத் தேடிச் செவிலி செல்கின்றாள். செவிலி செல்லும் வழியில் இடையில் நாங்கள் தலைவனையும் தலைவியும் சிறிது தொலைவில் பார்த்தோம். இன்னும் சிறிது தூரம் சுரத்தின் வழியாகச் சென்றால், தலைவனையும் தலைவியையும் காண்பாய் எனக் அயலோர் செவிலி இடத்தில் அச்செய்தியைத் தெரிவித்தனர். அது மட்டுமில்லாமல் அவர்கள் சென்றது அறநெறியே நீ வருத்தபடாதே என ஐங்குறுநூற்றில் செவிலி இடத்தில் அயலோர் கூறி வழிப்படுத்துகின்றனர்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டுக் கடுஞ்சுரத்தின் வழியாகச் சென்றனர். அதைக் கண்ட இடைச்சுரத்தோர் உன் மகள் விரும்பிய தலைவனுடன் துன்பத்தைத் தரக்கூடிய கடுஞ்சுரத்தின் வழியாக செல்கின்றாள். நீ இதை அறிந்து கவலைப்பட வேண்டாம் எனக் கூறினர். இருப்பினும் செவிலி தலைவியை நினைத்துக் கவலையுற்றாள்.

### 3.1.29 பரத்தை தோழிக்கிடையே தகவல் தொடர்பு

தலைவிக்கு மிகவும் நெருங்கியவள் தோழி. அவளிடத்தில் பரத்தை தலைவியைப் பற்றி இகழ்ந்துக் கூறினாள். அவள் தலைவி இடத்தில் சென்று கூற வேண்டும் என்று பரத்தை தலைவியைப் பற்றி பேசுகின்றாள். தோழி மறுமொழியாகப் பரத்தையை இகழ்ந்து பேசுகிறாள். பரத்தை தோழி உரையாடுவதே தகவல் தொடர்பாக அமைகிறது.

தலைவன் புதியதாகப் பரத்தை ஒருத்தியை விரும்பினான். பழைய பரத்தையான இற்பரத்தை புதிய பரத்தையை பழித்துக் கூறினாள். அதனைக் கேள்விப்பட்ட பரத்தை கோபம் கொண்டு தலைவியைப் பற்றி இழிவான சொற்களைத் தலைவியின் தோழி கேட்குமாறு கூறினாள். அகநானூற்றில் உள்ள புதிய பரத்தை தலைவன் தனக்கே உரியவன் என்று கூறுவதாக செய்தி அமைந்துள்ளன.

**"அம்ம வாழி, தோழி! மகிழ்நன்**
**தன் சொல் உணர்தோர் அறியலன் - என்றும்**
**தண் தளிர் வெளவும் மேனி,**
**ஒன் கொடி முன் கை, யாம் அழப் பிரிந்தே"**[48]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவன் பரத்தை மனையில் இருந்து தன் மனைக்குச் செல்ல விரும்பியதை தோழியின் வாயிலாக அறிந்த பரத்தை அவளிடத்தில் தலைவன் தன் மாந்தளிர் போன்ற என்னுடைய அழகினைக் கவர்ந்து விட்டு பின் என்னை அழ வைக்க எண்ணினான். என் அன்பின் நிலையை அவன் உணராதவன் ஆவான் என்று பரத்தை தோழி இடத்தில் கூறினாள்.

### 3.1.30 நற்றாய் காக்கை இடத்தில் கூறியது

தலைவன் தலைவியை உடன்போக்கில் அழைத்துச் சென்றான். நற்றாய் மிகவும் கவலை கொண்டாள். அந்த கவலையில் சிறு ஆறுதல் அடைவதற்காக காக்கை இடத்தில் நல் நிமித்தத்தை கேட்டாள்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றதை அறிந்த நற்றாய் மிகவும் வருந்தி அவர்கள் தன் இல்லத்திற்கு மீள வேண்டுமென்று விரும்பினாள். அவர்கள் வருவார்கள் என அறிவதற்கு நல் நிமித்தத்தை காக்கையிடம் வேண்டினாள். நான் செல்லும் திசையில் நீ கரைந்தால் அதற்குப் பயனாக நான் உனக்கு உணவு தருவேன் என்று ஐங்குறுநூற்றில் உள்ள நற்றாய் கூறுவதன் மூலம் நற்றாய்க்கும் அஃறிணை உயிரின காக்கைக்கும் உள்ள தகவல் தொடர்பை அறியமுடிகிறது.

### 3.1.31 பரத்தை தலைவன்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தையிடம் சேர்கின்றான். பரத்தை தலைவனிடம் நீ என்னை சில நாட்கள் கைவிட்டது போல் இவளை கைவிடாமல் இருப்பாயாக என்று பரத்தை தலைவன் இடத்தில் உரையடுவதாக அமைந்துள்ளது.

பரத்தையிடமிருந்து பிரிந்த தலைவன் மீண்டும் தன் தலைவியிடம் வருகின்றான். தலைவிக்கு அவன் மீது கோபம் அதிகமாகக் காணப்பட்டது. அதனைத் தீர்க்க முடியாது நிற்கின்றான். அங்கு முதுமையுற்ற காமக்கிழத்தி ஒருத்தி அவளைக் கோபம் கொள்ளல் கூடாது என அறிவுறுத்தினாள். அவனோடு உடன்படுத்தி தலைவனே முதிர்ச்சியுற்றப் பிறகு என்னைப்போல் இவளும் உன்னால் கைவிடப்படுவாள் என்று உணர்த்திவிட்டு, நீ உன்னுடைய நட்பை

நன்கு ஆராய்ந்து குற்றம் நேராமல் அவளைப் பிரியாது இருப்பாயாக. குற்றம் செய்தால் உன்னை விரும்பியத் தலைவி தீயிலே இட்ட மலர்போல் கருகிப்போவாள் என வெளிப்படையாக நற்றிணையில் உள்ள காமக் கிழத்தி பேசுவதுபோல் உணரப்படுகிறது.

**"அவருளும் வரைதற்கு உரியோர் ஊரே"[49]**

என்னும் நம்பியகப்பொருள் நூற்பாவின் மூலம், தலைவன் தலைவியைவிட பரத்தையர் இடத்திலும் அதிகமாக வாழ்ந்து இருக்கிறான் என்பதும் அறியமுடிகிறது.

தலைவன் தன் இளம்புதல்வன் கூறிய இனிய மொழிகளை தன் மனைவிக்கும் மற்றவர்களுக்கு கூறி மகிழ்ந்தான். அதனைக் கேள்விப்பட்ட பரத்தை இனி நீ உம் இல்லத்திற்குச் சென்று வாழ்வாயாக என நயம்பட கூறினாள். அவ்வாறு கூறி எப்பொழுதும் தலைவனை தன்னுடன் வைத்துக் கொள்ள விரும்பினாள்.

### 3.1.32 தலைவி அயலார் இடத்தில் கூறியது

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்று விடுகிறாள். பின் தன் ஊருக்குத் திரும்ப முடிவு செய்தாள். தன் ஊர்க்குச் செல்லும் வழியில் சிலரைச் சந்தித்து உரையாடியவை.

உடன்போக்கில் சென்ற தலைவி தன் ஊருக்கு வருகின்றாள். வருவதை முன்னரே அறிவிப்பதற்காக தன் தோழியிடம் சிலரைச் சந்திக்க வைக்கிறாள். ஐங்குறுநூறு நூலில் உள்ள தலைவி, நான் வருவதைத் தோழி இடத்தில் செய்தியாக அறிவிப்பாயாக எனக் கூறுவதில் இருந்து தலைவியின் மறைமுகத் தகவலை அறியமுடிகின்றன.

### 3.1.33 தலைவன் உழையர்கிடையே தகவல் தொடர்பு

தலைவன் உழையர் இடத்தில் தலைவியின் ஊர்ப்பற்றியும் அவளுடைய செல்வத்தைப் பற்றியும் கூறி பெருமிதம் கொள்கிறான்.

பொருளீட்ட கடுஞ்சுரத்தின் வழியாக செலவு மேற்கொண்டான். அப்பொழுது மழை பெய்து நிலம் குளிர்ந்தன. அது கண்ட உடன் பயணிகள் நிலம் மழையால் வெம்மை தானிந்ததால் துன்பமின்றி இனி போகலாம் என்று உழையர் இடத்தில் தலைவன் மகிழ்ந்துக் கூறுவதாக அமைந்துள்ளன.

### 3.1.34 செவிலி முக்கோற்பவர் தகவல் தொடர்பு

தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்று விடுகின்றனர். அவர்களைச் செவிலியானவள் தேடிச் செல்கின்றாள். செல்லும் வழியில் முக்கோற்பவர்களைக் காண்கின்றார். அவர்களுடன் செவிலி உரையாடுவது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான திணைமாலை நூற்றைம்பது பாடலில்,

**“நண்ணிநீர் சென்மின் ஈமர் அவர் ஆபவேல**
**எண்ணிய எண்ணம் எளிதரோ – எண்ணிய**
**வெஞ்சுடர் அன்னானை யான்கண்டேன் கண்டானாம்**
**தன்சுடர் அன்னாளைத் தான்”**[50]

தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றபோது அவர்களைத் தேடிச் செவிலி செல்கின்றாள். செல்லும் வழியில் முக்கோற்பவர் மாலை மறையும் நேரத்தில் தலைவனும் தலைவியும் எங்களுக்கு எதிராகச் செல்கின்றனர். அவ்விருவரும் விரைவாகச் சென்றார்கள். நீங்களும் விரைந்து சென்றால் அவர்கள் இருவரையும் காணமுடியும். அவர்கள் இருவரும் நல்ல இல்லத்தை இனிதே

நடத்துவார்கள். ஆதலால், நீ கவலைப்பட வேண்டாம் என்று முக்கோற்பவர் செவிலியை ஆற்றுப்படுத்துவர்.

### 3.1.35 தலைவி மாலைப் பொழுதை நோக்கிக் கூறல்

தலைவி தலைவன் பிரிவால் மிகவும் வருந்திக் காணப்பட்டாள். அந்த வருத்தத்தைப் போக்குவதற்கு தலைவி மாலைப் பொழுதின் வருகையைப் பார்த்தாள். இந்த மாலைப் பொழுதிடம் தலைவன் என்னுடன் இல்லை என்று வருந்தினாள்.

**“மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத**

**காலை அறிந்தது இலேன்”**[51]

என்னும் குறளில், மாலை நேரம் இவ்வளவு துன்பத்தை தரக்கூடியது என்று தலைவன் இருக்கும் போது நான் அதை அறியவில்லை என மாலைப் பொழுதை நோக்கிப் பேசுவதாய் அமைந்துள்ளன.

தலைவன் திருமணத்திற்குத் தேவையான பொருள் ஈட்டுவதற்கு சில நாள் பிரிந்து சென்றான். பிரிவை ஆற்றமுடியாமல் தலைவி மாலைப் பொழுதை நோக்கி அருவிகளைக் கொண்ட நாடனும் மருத நிலத் தலைவனும் குளிர்ந்த கடற்கரை நாடன் பிரிந்தபொழுது நண்பகல் நேரத்தில் வந்துவிட்டாய் என ஐங்குறுநூற்றில் உள்ள தலைவி மாலைப் பொழுதை நோக்கி நீ இவ்வாறு வாரது காலை நேரங்களில் வருவாயாக என்று தன்மனநிலையை வெளிப்படுத்துகிறாள்.

### 3.1.36 செவிலி ஏவலர்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டதை அறியாத செவிலி ஏவலர்களை ஏவி எங்கு சென்றாள் எனத் தேடுவதற்காக அனுப்பினாள். அந்த பணியாட்கள் சென்று தலைவன் தலைவியரையும் தேடினார்கள்.

**“இது என் பாவைக்கு இனிய நன் பாவை**
**இது என் பைங்கிளி எடுத்த பைங்கிளி**
**இது என் பூவைக்கு இனிய சொல் பூவை’ என்று,**
**அலமரு நோக்கின் நலம் வரு சுடர் நுதல்**
**காண்தொறும் காண்தொறும் கலங்க,**
**நீங்கினளோ-என் பூங்கணோளே?”**[52]

தலைவி தன் காதலனுடன் ஊரறியாத உடன்போக்கில் சென்றுவிட்டாள். அவர்களைக் கண்டுபிடிக்க ஏவலரை அனுப்பினாள். ஏவலர் நான்கு திசைகளிலும் சென்று தேடினார்கள். ஆனால் கிடைக்கவில்லை. அதனால் செவிலி மிகவும் வருந்தி ஏவலர் இடத்தில் கூறினாள். அவர்கள் நீங்கள் கவலையடைய வேண்டாம் என ஆறுதல்படுத்தினர்.

### 3.1.37 நற்றாய் தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றதனால் வருத்தம் அடைந்த நற்றாய் தோழியிடத்தில் உரையாடுகின்றாள். நற்றாய் தன் மன இறுக்கத்தை தளர்த்திக்கொள்ள தோழியை பயன்படுத்திக் கொள்கிறாள்.

**“எம் வெங் காமம் இயைவது ஆயின்**
**மெய்ம் மலி பெரும் பூண்,செம்மற் கோசர்**
**கொம்மைஅம் பசுங் காய்க் குடுமி விளைந்த**
**பாகல் ஆர்கைப் பறைக் கட் பீலித்**
**தோகைக் காவின் துளுநாட்டு அன்ன்**
**வறுங் கை வம்பலர்த் தாங்கும் பண்பின்**
**……………………………………………......”**[53]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில், தலைவன் தலைவியை உடன்போக்கு அழைத்துச் சென்றதனால் நற்றாயும் தோழியும் மிகவும் வருந்தினார்கள். நற்றாய் தன் மனவேதனையை தலைவியின் தோழியிடத்தில் வெளியிடுகின்றாள். அவள் நற்றாய்க்கு ஆறுதலாகப் பேசினாள். தலைவன் தலைவியை உடன்போக்கு அழைத்துச் சென்றபின் நாற்றாயிடம் தோழி களவினை வெளிப்படுத்தினாள். அது கேட்ட தாய் அந்தக் களவினை முதலிலே கூறி இருப்பின் தலைவனுக்கே மணம் முடித்திருப்பேன் என வருந்திக் கூறினாள். அதற்கு அவள் கவலைப்படாதே என நற்றாயிடம் இத்தகவலைக் கூறி ஆறுதல் அடையச் செய்தாள்.

### 3.1.38 தலைவி அந்தணர் இடத்தில் கூறியது

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டு போகும் வழியில் அந்தணரைப் பார்த்து உரையாடுகின்றாள்.

**“சேட் புலம் முன்னிய அசை நடை அந்தணிர்!**
**நும் ஒன்று இரந்தனென் மொழிவல் எம் ஊர்,**
**‘யாய் நயந்து எடுத்த ஆய் நலம் கவின்**
**ஆர் இடை இறந்தனள்’ என் மின்-**
**நேர் இறை முன் கை என் ஆயத்தோர்க்கே”[54]**

தலைவி தன் காதலனுடன் உடன்போக்கு செல்கின்றாள். செல்லும் வழியில் அந்தணர் இருந்தனர். அவர்களை வணங்கினர் மகிழ்ச்சியுடன் தான் செல்வதை தன் தோழி இடத்தில் கூறுமாறு தலைவி அந்தணரிடத்தில் வேண்டினாள்.

### 3.1.39 பரத்தை தலைவிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் பரத்தையின் ஆடல் பாடலில் மயங்கி அவளிடத்திலே தங்கி விடுகின்றாள். அதனால் கோபமுற்ற தலைவி பரத்தையிடத்தில் கோபம் கொண்டு தன் மனக்கருத்துக்களால் சுடுகின்றாள். பின் பரத்தை தலைவி இடத்தில் சபதம் இடுதல். தலைவி தன்னைப் பழித்தால் எனக் கேள்விப்பட்ட பரத்தை உடனே கோபம் கொண்டு தலைவனை முழுவதுமாக அவளை விட்டுப் பிரிப்பேன். தலைவனை என்னிடத்தில் முழுமையாகத் தக்க வைத்துக் கொள்வேன் என்று அகநானூற்றில் பரத்தை தலைவியிடத்தில் சூழுரைக்கிறாள். தலைவன் பரத்தைமை பூண்டு ஒழுகினான். அச்செய்தியைக் கேள்விப்பட்ட தலைவி வேதனை அடைந்தாள். அது கேட்டப் பரத்தை உன் தலைவனை நான் எனக்குள் வைத்துவிட்டேன். ஆகவே, தலைவன் உனக்கு இல்லை என இகழ்ந்து கூறினாள். தலைவனின் கொடுமை உள்ளம் சுடுகின்றது என வருந்தினாள் தலைவி. கூட்டம் தவிராத வகையில் பாணன் முதலியோர் கூறியவழி தலைவியும் பரத்தையரை குறும்பூழ்ப் பறவை என்று கூறினாள். ஏனென்றால், பரத்தை தலைவனை அவளுடனே இறுத்திக் கொள்வதால் தலைவி வருந்துகின்றாள். அந்த வருத்தத்தில் கலித்தொகையில் உள்ள தலைவி பரத்தையை குறும்பூழ்ப் பறவை என அழைக்கின்றாள்.

### 3.1.40 சான்றோன், அரசனுக்கிடையே நேருக்கு நேர் தகவல்

ஒரு நாட்டின் தலைவன் தான் அரசன். அரசனோ தலைவியைத் துறந்து இருந்தான். அதனால் அவையில் இருக்கும் சான்றோர் தலைவன் இடத்தில் அறிவுரைகளைப் பகர்ந்தனர். அரசன் செங்கோல் ஆட்சித் தவறாதவன். ஆனால் அவன் மனைவிக்கு அருள் செய்யவில்லை. தலைவி மிகவும் வருத்தத்துடன் காணப்பட்டாள். அதன்

காரணமாக அவனுடைய அவைச் சான்றோர் தலைவனுக்கு அறிவுரை கூறுவதாக கலித்தொகை சான்றாக உள்ளன.

### 3.1.41 தலைவனைக் கண்ட சுற்றத்தார் கூறியது

தலைவன் ஏறு தழுவி வெற்றி பெற்றான். பின் அவன் தலைவியை மணந்து கொண்டான். அந்த நிகழ்ச்சியைக் கண்ட சுற்றத்தார் மகிழ்ந்து கூறியது.

**"காண்அகன் இருவிசும்பில் ககழ்பெயல் கலந்து, ஏற்ற**
**தண் நறும் பிடவமும், தவல்கொடித் தளவமும்**
**வண்ண வண்தோன்றியும், வயங்குஇணர்க் கொன்னறியும்,**
**அன்னவை பிறவும், பல்மலர் துதைய,**
**தழையும் கோதையும் இழையும் என்று இவை**
**தைகியினர்,மகிழ்ந்து, திளைஇ விளையாடும்**
**……………………………………………………"[55]**

என்னும் பாடலில், தலைவன் ஒருவன் தலைவியைக் காதலித்தான். அவளைத் திருமணம் செய்யும் பொருட்டு ஏறு தழுவி வெற்றி பெற்றான். வெற்றியின் விளைவாக தலைவியை மணந்து கொண்டான். அதைப் பார்த்த சுற்றத்தார் மகிழ்ந்தனர்.

### 3.1.42 தலைவன், ஏவலர்க்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் பொருள் தேடித் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கின்றான். வினை முடிந்ததும் ஏவலர்களிடம் மகிழ்ந்து கூறினான்.

**"விருந்தும் பெறுகுநள் போலும், திருந்து இழைத்**
**தடமென் பணைத்தோள், மடமொழி அரிவை-**
**தளிர்இயல் கிள்ளை இனிதினின் எடுத்த**
**வளராப், பிள்ளைத் தூவி அன்ன,**
**உளர்பெயல் வளர்த்த, பைம்பயிர்ப் புறவில்**
**……………………………………………"[56]**

தலைவன் வினையின் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்து சென்று அவ்வினை முடிந்ததும் மீண்டும் தலைவியைக் காணச் சென்றான். அவன் கருத்தை உணர்ந்தனர் ஏவலர். இனித் தலைவி வருத்தம் நீங்கி வாழ்வு பெறுவாள் என்று மகிழ்ந்து கூறினர்.

### 3.1.43 செவிலி வயலைக்கொடியை நோக்கிக் கூறுதல்

தலைவனும் தலைவியும் உடன்போக்குச் சென்றுவிடுகின்றனர். ஆனால் செவிலி மிகவும் வருந்தித் தன் மனக் கவலையையும் தன் மகளின் நினைவுகளையும் வயலைக் கொடி இடத்தில் முறையிடுகின்றாள்.

**“தற்புரந்து எடுத்த எந்துறந்து உள்ளாள்,**
**ஊரும் சேரியும் ஓராங்கு அலர்எழ,**
**காடும் கானமும் அவனொடு துணிந்து,**
**நாடும் தேயமும் நனிபல இறந்த**
**சிறுவன் கண்ணிக்கு ஏர்தே றுவர்என,**
**வாடினை – வாழியோ, வயலை!-நாள்தொறும்,**
**…………………………………………………”[57]**

களவொழுக்கத்தில் இடையூறு ஏற்பட்டதனால் தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்றுவிடுகின்றனர். பின் வயலைக் கொடியிடத்தில் வயலை! வாழி! நான் சொல்வதைக் கேள். வளர்த்தெடுத்த தாயைக் கூடப் பார்க்காமல் ஊரில் அலர் எழும்படியாகச் சென்றுவிட்டாள். முன்பின் அறியாதத் தலைவனோடு கடுஞ்சுரத்தையும் தாண்டி எவ்வாறாகச் சென்றாள். எம் தலைவிக்கு அழகு செய்யும் அவளுடைய மகளிர் போல, நீயும் துயரத்தால் வாடிக் கிடக்கின்றாய் என்று அகநானூற்றில் உள்ள செவிலியானவள் தன் மனக்கவலையை வயலைக்கொடியிடத்தில் கூறுவதாக அமைந்துள்ளன.

### 3.1.44 செவிலி பெண்மானை நோக்கிக் கூறுதல்

தலைவன் தலைவியை அழைத்துக்கொண்டு உடன்போக்கு சென்றதால் வருந்திய செவிலி கானகத்தை நோக்கிப் பின் தொடர்ந்து சென்றாள். அப்போது ஒரு பெண்மானைக் கண்டு அத்துடன் தன் கவலையை பரிமாற எண்ணுகின்றாள்.

**“முலை முகம் செய்தன் முள் எயிறு இலங்கின்**
**தலை முடிசாறதன் தழை உடையை**
**அலமரல் ஆயமொடு யாங்கணும் படா அல்**
**மூப்புடை முது பதி தாக்கு அணங்கு உடைய**
**காப்பும் பூண்டிசின்கடையும் போகலை**
**போதை அல்லை- மேதை அம் குறுமகள்!**
**……………………………………………..”**[58]

தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு உடன்போக்கு சென்றுவிட்டான். அதனால் வருந்திய செவிலி கானகத்தை நோக்கிப் பின் தொடர்ந்து சென்றாள். வழியில் அ.்.றிணை உயிரினமாகிய பெண்மானை நோக்கிக் கூறினாள். மானே இந்தக் கானகத்தில் என் மகளைக் கண்டாயோ, என் மகள் இந்த காட்டின் சுரத்திடை வழியாக எவ்வாறு சென்றாளோ, நீ அவளைக் கண்டால் என்னைப் பற்றி கூறு என்னை மறந்து அவனுடன் சென்றுவிட்டாள் என்று மிகவும் வருந்திப் பெண்மான் இடத்தில் வருத்தத்தை தெரிவித்தாள். மனிதனுக்கும் விலங்குக்கும் உள்ள தொடர்பு இதனால் உணர முடிகின்றன.

## 3.2 குழுத்தொடர்பு

தொகை நூல்களில் உள்ள கதை மாந்தர்கள் இரண்டு பேர் அல்லது அதற்கு மேற்பட்ட நபர் குழுவாக சேர்ந்து உரையாடுவது குழுத் தொடர்பு எனப்படும். தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் காலங்களில் தலைவன் தோழி தலைவி மூவரும் உரையாடுதல், தலைவன், தலைவி, தோழி, செவிலி, பாணன் போன்றோர்

ஒருவருக்கொருவர் தன் தகவலை ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குப் பரிமாறுதல், தொகை நூல்களில் உள்ள கதை மாந்தர்கள் ஒவ்வொருவர் எவ்வாறாக குழுவாக சேர்ந்து உரையாடுகிறார்கள் என்பதை கீழ்காணும் அட்டவணையின் வாயிலாக அறியலாம்.

## குழுத்தொடர்பு

| தகவலாளர்கள் | நற்றிணை | குறுந்தொகை | அகநானூறு | கலித்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| தலைவன் தலைவி தோழி | 1 | - | 29 | 10 | - |
| தலைவன் தலைவி தோழி செவிலி | 2 | - | - | - | - |
| தலைவன் தலைவி தோழி பாணன் | 1 | - | - | - | - |
| தலைவன் தலைவி பாணன் | 2 | - | 3 | - | - |
| பரத்தை தலைவன் தலைவி விறலி தோழி | 1 | - | - | - | - |
| தலைவி பரத்தை தலைவன் பாங்காயினர் தோழி | 1 | - | - | - | - |
| தலைவி தோழி பாணன் குயவன் | 1 | - | - | - | - |
| பரத்தை தலைவி தோழி பாங்காயினர் | - | - | - | - | 1 |
| தோழி செவிலி அறிவர் தலைவி | - | - | - | - | 1 |
| தலைவன் தூதர் தலைவி மகன் | - | - | - | - | 1 |
| தலைவன் பாணன் கூத்தர் அறிவர் தலைவி | - | - | - | - | 1 |

சங்கத்தொகை நூல்களில் கதைமாந்தர்கள் எல்லாம் ஒன்று கூடி தனியாக உரையாடாமல், குழுவாகத் தகவலைப் பரிமாறுகின்றனர். தலைவன், தலைவி, தோழி உரையாடுவதாக அகநானூற்றில் தான் மிகுதியானப் பாடல்கள் உள்ளன. அதற்கு அடுத்ததாக கலித்தொகை

மற்றும் நற்றிணையில் பாடல்கள் உள்ளன. தலைவன், தலைவி, தோழி, செவிலி இவர்கள் உரையாடுவதாக நற்றிணையில் மட்டுமே உள்ளன. தலைவன், தலைவி, தோழி, பாணன் உரையாடுவதாக நற்றிணையில் ஒரு பாடல் உள்ளது. தலைவன், தலைவி, பாணன், உரையாடுவதாக நற்றிணை, ஐங்குறுநூற்றில் பாடல்கள் உள்ளன. பரத்தை, தலைவன், விறலி, தலைவி, தோழி உரையாடுவதாக நற்றிணையில் ஒரு பாடல் உள்ளது. தலைவன், பரத்தை, பாங்காயினர், தோழி உரையாடுவதாக நற்றிணையில் மட்டுமே பாடல்கள் உள்ளன. தலைவன், தோழி, பாணன், குயவன் உரையாடுவதாக நற்றிணையில் பாடல்கள் உள்ளன. பரத்தை, தலைவி, தோழி, பாங்காயினர் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் உள்ளது. தோழி, செவிலி, அறிவர், தலைவி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் மட்டும் உள்ளது. தலைவன், தூதர், தலைவி, மகன் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் உள்ளது. தலைவன், பாணன், கூத்தர், அறிவர், தலைவி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் உள்ளது. கதை மாந்தர்கள் எல்லாம் எவ்வாறு குழுவாக ஒருவருக்கொருவர் தகவலைப் பரிமாறுகின்றார்கள் என்பதை இதன்மூலம் விளங்குகின்றன.

### 3.2.1 தலைவன், தலைவி, தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் பொருள் தேடுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வான். அந்தக் காலக்கட்டங்களில் தோழி தலைவிக்கு மிகவும் உறுதுணையாக இருப்பாள். தோழி தலைவனிடத்தில் வினையை முடித்து விரைந்து வரும்படியும் கட்டளை இடுவாள். தலைவன், தலைவியிடையே தோழி எவ்வாறு எல்லாம் உரையாடப்படுகிறது.

**"கன்றுள்ளிச் சேர்ந்த பால் காலொற்றித் தாமரைப்பூ**
**வன்றுள்ளி அன்னத்தை ஆர்த்துவான்-சென்றுள்ளி**
**வந்(து)ஐ ஆ என்றும் வகையற்றே மற்றிவன்**
**தந்தையார் தம்மூர்த் தகை"**[59]

என்ற திணைமாலை நூற்றைம்பது பாடலில், தலைவனின் மருதநிலத் தன்மையானது, கன்றினை எருமைகள் நினைத்து மடிவழியாக எருமைப் பாலைச் சுரக்கும். அந்த இனிமையான பாலானது தாமரை மலர் மீது விழும், அத்தாமரை மலர் மீது விழும் அந்த தேனைக் குடிக்க அன்னபறவை வரும். இந்த அழகிய காட்சி வியக்கும் வகையில் இருக்கின்றது. இவ்வளவு வளம் மிக்க மருதநிலத் தலைவன் என் மீது அன்பு வைத்திருந்தான். என்னுடைய ஊடலைத் தீர்த்தான் என்று தலைவி தலைவனைப் புகழ்ந்து தோழி இடத்தில் கூறினாள்.

தலைவன் பகற் நேரத்தில் தலைவியைக் காண வருகின்றான். தோழி அவனிடத்தில் தலைவியின் வருத்தத்தை நான் போக்குவேன் என்று கவலையுறாமல் இருக்கின்றாயா என்று கூறி என்னால் அவளை ஆற்றுவிக்க முடியவில்லை. நீயே ஆற்றுவிக்க வேண்டும். தலைவனிடத்தில் தோழி கொல்லனிடம் கொண்டு சென்று இவ்வுடைந்துப் போன அவள் மனதையும் சிலம்பையும் சரிசெய்து தருவாயாக என்று கேள் எனக் கூறுகிறாள். நற்றிணையில் உள்ள தோழி தலைவன் இடத்தில் கேட்பது போல் அமைந்துள்ளது.

தலைவியை தலைவன் வரைந்து கொள்ளாமல் காலம் நீட்டித்தான். தலைவன் மார்பு தந்த வருத்தத்தால் தலைவி துன்புற்று மெலிந்தாள். அத்துன்பத்தைப் போக்குவதற்கு வழியை அறியாத தோழி தலைவனை பழித்தாள். அதுகேட்ட தலைவி தோழியை நோக்கி நாம் மெலிவதற்குக் காரணமான தலைவன் இரவே வந்தார். வந்து என் உயிர் குழையுமாறு முயங்கினார். யானும் இன்பம் எய்தினேன் இவ்வாறு

உதவி செய்தவரை நீ குறை கூறக்கூடாது என்று அகநானூற்று தலைவி இடத்தில் தோழி கூறியதை அறியமுடிகின்றது.

**"சான்றவர் கேண்மை சிதைவின்றாய் ஊன்றி**
**வலியாகிப் பின்னும் பயக்கும் மெலிவில்**
**கயம்திகழ் சோலை மலைநாடன் கேண்மை**
**நயம் திகழும் என்னுமென் நெஞ்சு"**[60]

என்ற ஐந்திணை எழுபது பாடலில், தோழியே சான்றோர் நட்பில் சிதைவு இருக்காது. அது நிலைத்துக் காணப்படும். பல வகையான நன்மைகளை உண்டாக்கும். அதுபோல நீர் நிலைகள் வளமாகக் காணப்படும் நாட்டில் சோலைகள் மிகுதியாக உள்ளன. தலைவனின் நட்பு குறைவு இருக்காது. இன்பம் பயக்கும் என நெஞ்சம் நினைக்கின்றது'' என்று தலைவியிடம் தோழி தலைவனின் அன்பான நிலையை உயர்த்திப் பேசினாள். தலைவனிடம் உள்ள இயல்பான அன்பினை எடுத்துக் கூறினாள்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்று பரத்தையரோடு வைகை ஆற்றில் நீராடினான். அந்த செய்தியைக் கேள்விப்பட்டத் தலைவி ஊடலுற்றிருந்தாள். அதனைக் கேள்விப்பட்டத் தலைவன் தோழியின்பாற் சென்று தலைவியின் ஊடலைத் தீர்க்குமாறு வேண்டினான். தோழி அவன் வேண்டுக்கோளுக்கு இணங்காமல் நீ பொய் கூறுகின்றாய். நீ பரத்தமையை விட்டு வரமாட்டாய் என்று அகநானூற்றில் உள்ள தோழி தலைவன் இடத்தில் இணங்க மறுத்துரைப்பதை அறியமுடிகின்றன.

**"தன் பதிக்கு அகற்சி தலைவன் சாற்றலும்**
**மென் சொற் பாங்கி விலக்கலும் தலைவன்**
**நீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலும்**

**தலைவி கவன்செல வுணர்த்தலும் தலைவி**
**நெஞ்சொடு புலத்தலும் சென்றோன் நீடலில்**
**………………………………………………..”**[61]

என்னும் பாடலில், தலைவன் பொருள் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கின்றான். அதனால் தலைவி வருந்துகின்றாள். தலைவியின் வருத்தத்தைப் போக்குவதற்காக தலைவனிடம் செலவைத் தவிர்க்கும்படி கூறுகின்றாள். இனிமேல் தலைவியை என்னால் காக்க முடியாது. ஆகவே செலவைத் தவிர்த்துத் தலைவியுடன் இருக்கும்படித் தோழி தலைவனிடம் கூறுகின்றாள். இக்கருத்தையே நம்பியகப்பொருளில் உள்ள தலைவியிடம் சென்று தலைவன் நம்மை விட்டுச் செல்லமாட்டான் என ஆறுதல் அடையும்படிக் கூறப்படுகின்றது.

தலைவன் பிரிந்து செல்ல இருப்பதை அறிந்தாள் தலைவி. அதனால் மிகவும் வருந்தினாள். தானும் தலைவனுடன் வருவதாகக் கூறினாள். தலைவன் அவளது மென்மைத் தன்மையையும் காட்டின் அச்சத்தையும் கூறினான். தலைவி உடன் வருதலைத் தலைவன் உடன்படவில்லை. இதனை அறிந்த தோழித் தலைவியிடத்தில் தலைவன் நம்மிடத்தில் நகையாடிச் சொல்கிறார். எனவே அவர் பிரியமாட்டார் நீ கவலைப்படாதே என்று கலித்தொகையில் உள்ள தோழி தலைவியை ஆறுதல்படுத்துகிறாள்.

### 3.2.2 தலைவன், தலைவி, தோழி, செவிலிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன், தலைவி, தோழி, செவிலி நான்கு பேரும் ஒருவருக்கொருவர் தன் மனதில் கொண்ட கருத்தைப் பரிமாறுகின்றனர். தோழி தலைவன், தலைவி இருவருக்கிடையே சிறந்த தகவல் தொடர்பாளராக விளங்குகின்றாள்.

**“விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்
பாசம் தின்ற தேய் கால் மத்தம்
நெய் தெரி இயக்கம் வெளிமுதல் முழங்கும்
வைகு புலர் விடியல் மெய் கரந்து,தன் கால்
தன் வரைந்து அன்றியும் கலுழ்ந்தன கண்ணே
.......................................................”[62]**

என்னும் பாடலில், தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்டாள். அதை அறிந்த செவிலி அறத்தோடு நின்று தலைவியிடம் சென்று அவ்வுடன்போக்கு இப்போது வேண்டாம் எனக் கூறினாள். பின் தலைவனிடம் சென்று தலைவி உன்னோடு வர முற்ப்பட்டாள். சிலம்பு முதலியவை கழன்று விழும் போலிருக்கின்றது. அதனால் தோழிமார் நோகக் கூடுமோ என்று வருந்தியதால் அச்செலவைத் தவிர்த்தாள். நீ விரைந்து தலைவியை மணம் புரிந்து கொள்ளவேண்டும் என்று தலைவனிடத்தில் தோழி வேண்டுகோள் வைப்பதை உணரமுடிகின்றன.

### 3.2.3 தலைவன், தலைவி, தோழி, பாணனுக்கிடையே தகவல் தொடர்பு

தலைவன் பாணனைத் தூது விடுகின்றான். பாணன் இடத்தில் தோழி தன் உரையாடலை துவக்கின்றாள். தோழி தலைவியின் கருத்துக்களை வாங்கி பாணன் இடத்தில் உரைக்கின்றாள். இவ்வாறாக ஒருவருக்கொருவர் தன் தகவலை ஒருவரிடமிருந்து இன்னொருவர் பரிமாறுகின்றனர். கதை மாந்தர்கள் ஒவ்வொருவரும் எவ்வாறு குழுவாகச் சேர்ந்து உரையாடுகின்றன.

**“அறியாமையின், அன்னை! அஞ்சி,
குழையன் கோதையன் குறும்பைந் தொடியன்
விழவு அயர் துணங்கை தழூஉகம் செல்ல,
நெடு நிமிர் தெருவில் கைபுகு கொடு மிடை
நொதுமலாளன் கதுமெனத் தாக்கலின்,
............................................”[63]**

தலைவன் பரத்தையின் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்த பின் மறைந்து கொண்டு பாணனைத் தூதாக தலைவி இடத்தில் விடுத்தான். தோழி அத்தலைமகன் கேட்குமாறு தலைவி இடத்தில் தலைவன் பரத்தையாரோடு இருக்கும் போது கையும் களவுமாய் பிடிக்கச் சென்றபோது அவனோ வேறுறொரு வழியில் செல்ல முயன்றான். பின் என்னிடத்தில் வந்து அழகாக வியந்தான் என்று தோழி தலைவியிடம் விளக்குகிறாள்.

### 3.2.4 தலைவன் தலைவி பாணன் போன்றோர் தகவலைப் பரிமாறுதல்

பரத்தையின் காரணமாகப் பிரிந்த தலைவன் இல்லத்திற்கு பாணனை நாடுகிறான். பின் பாணன் தலைவியிடம் தகவலைப் பரிமாறி செல்கிறான். பாணன், தலைவன், தலைவி இருவருடத்தும் தகவலைக் கேட்டு ஒருவரிடத்தில் தலைவன் தலைவி பாணன் ஒருவருக்கொருவர் எவ்வாறு தகவலைப் பரிமாறுகின்றனர்.

பரத்தையின் மீது அன்பு கொண்டிருந்த தலைவன் தன் இல்லத்திற்கு வர எண்ணினான். அதற்குப் பாணனின் உதவியை நாடி பாணன் மூலம் தலைவியை தெளிவிக்க முயன்றுத் தோற்றான். பாணனும் தலைவனும் ஒன்று சேர்ந்து தலைவியிடம் வந்தனர். ஐங்குறுநூற்றில் தலைவியோ நீங்கள் இருவரும் ஒன்று சேர்ந்து பொய் கூறுபவர் எனக் கூறி தலைவனை ஏற்க மறுத்தாள்.

**“கழனி உழவர் கலி அஞ்சி ஓடி**
**தழென மதஎருமை தண் கயம் பாயும்**
**புழன வயலூரன் பான எம்முன்னர்ப்**
**போழெனப் பொய் கூறா தோழி”[64]**

என்னும் பாடலில், பரத்தையரை விட்டுப் பிரிந்து வந்த தலைவன் பாணனை தலைவி இடத்தில் அனுப்புகிறான். வயல்களில் உழுகின்ற உழவர்கள் ஆரவாரம் செய்வார்கள். அந்த ஆராவரத்தைக் கேட்டு எருமைகள் தண்ணீரில் விழும். அந்த மருதநிலங்களை உடைய தலைவன் அனுப்பிய பாணனே! என்முன் நீ பொய் உரைப்பதை நீக்குவாயாக என்று கைந்நிலைப் பாடலில் உள்ள பாணன் இடத்தில் தலைவி கூறினாள்.

பரத்தையற் இடத்தில் பிரிந்து வந்த தலைவன் தலைவியின் ஊடலைத் தணிப்பதற்கு பாணனை அனுப்புகிறான். பாணன் கேட்குமாறு தோழி தலைவிக்கு உன் தலைவன் பரத்தையைத் தழுவி விட்டு இப்போது பாணா உன்னை எதற்காகத் அனுப்பினான். அவன் ஊசலாடாது என்னை அழுவதை ஆற்றுவித்து மீண்டும் ஊசலாடுமாறு இங்கு வந்தான் எனச் சினந்து பேசுவதாய் நற்றிணையில் தோழி தலைவி இடத்தில் உரையாடுகிறாள்.

### 3.2.5 பரத்தை, தலைவன், தலைவி, விறலி, தோழிக்கிடையே தகவல் தொடர்பு

தலைவன் பரத்தையர் உடன் நட்புக் கொள்வது. அதனால் தலைவி வருந்திக் காணப்படுவது போன்ற காரணங்களால் தோழி, விறலி அவர்களுக்கு ஆறுதலாக இருப்பார்கள். நற்றிணையில், தலைவன் பரத்தையிடம் சென்று விட்டுப் பின் தலைவியைத் தேடிப் போகின்றான். அதை அறிந்த பரத்தை தலைவி வெறுப்படைதல் வேண்டும் என எண்ணினாள். அவள் தலைவிக்கு நட்பான தோழி, விறலி கேட்கும்படி உரைக்க ஆரம்பித்தாள். தலைவன் என் வளையைப் பறித்தான். இதனை உன் மனைவிக்கு சொல்வேன் என்றேன். அதைக் கேட்டத் தலைவன் நடுங்கிய நிலையை நான்

நினைத்தால் நகைக்கின்றேன் என்று இகழ்ந்து பேசுவதாக அமைந்துள்ளது.

### 3.2.6 தலைவன், தலைவி, பரத்தை, பாங்கயினர், தோழி ஆகியோர் உரையாடியது

பரத்தையர் காரணமாக தலைவி கவலைப்படுகிறாள். தோழியும் கேட்ப பரத்தை தலைவியை இழிவு செய்கிறாள். பரத்தை, தலைவன், தலைவி, தோழி கேட்க எவ்வாறு பரத்தை தலைவியை இழிவு செய்வதை,

> **“எம் நயந்து உறைவி ஆயின், யாம் நயந்து**
> **நல்கினம் விட்டது ஏன்? நலத்தோன் அவ் வயின்**
> **சால்பின் அளித்தல் அறியாது, ‘அவட்கு அவள்’**
> **காதலள் என்னுமோ! உரைத்திசின் - தோழி!**
> **நிரைத்த யானை முகத்து வரிகடுப்பப்**
> **.............................................”[65]**

நற்றிணைப் பாடல் மூலம் அறியமுடிகின்றது. தலைவி பூப்பு அடைந்து நீராடியதால் தோழி அவளுக்கு செவ்வணி செய்தாள். அதுக் கண்ட பரத்தை உலகத்துக்காக தலைவனை விடுகின்றாள், எனினும் ஊரார் அவரை தூற்றுவார்களோ என எண்ணினாள். அந்த காரணத்தினால் பரத்தை தலைவியின் எதிரே நின்று பேசவில்லை. தலைவியும் தோழியும் பாங்காயினர் விறலியிடத்துக் கூறினாள். அவள் நம்மை நயந்துக் கொண்டிருக்கின்றாள் என்று இவ்வூரார் கூறுவர்.

### 3.2.7 தலைவி, தோழி, பாணன், குயவனுக்கிடையேத் தகவல் தொடர்பு

தோழி தலைவியின் நிலையைப் பாணன் மூலமாகத் தலைவனுக்குத் தெரிவிக்க நினைப்பாள். குயவன் என்பவன் ஊர்த் திருவிழா நடக்கும் போது அறிவிப்பான். அதன் மூலம் தலைவி

மகிழ்ந்து காணப்படுவாள். ஏனென்றால், திருவிழா நடக்கும் காலங்களில் தலைவன் ஊரிலே இருப்பான் என்று மகிழ்ந்து இருப்பாள். நாம் குயவனிடம் எந்தத் தகவலைக் கூறினாலும் விரைவில் தலைவன் இடையே சென்றடையும் என்று எண்ணினாள்.

**"கண்ணி கட்டிய கதிர அன்ன**
**ஒண் குரல் நொச்சித் தெரியல் சூடி,**
**யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்,**
**'சாறு' என நுவலும் முது வாய் குயவ!**
**ஈதும் ஆங்களன்று வன்றிசின் மாதே-**
**................................................"**[66]

தலைவன் பரத்தையரை விட்டுப் பிரிந்து பின் தலைவியைக் காண பாணனை அனுப்புகிறான். பாணன் வரும் பொழுது தோழி வாயில் மறுக்கின்றாள். அப்போது ஊரில் திருவிழா நடப்பதனைத் தெரிவிக்க கடமை பூண்டக் குயவனிடம் தோழி இவ்வூர் மகளிரிடம் இப்பாணன் பொய்மொழி கூறுகிறான் என அனைத்து மகளிரிடமும் சென்று கூறு என நற்றிணைத் தோழி குயவனிடம் கூறியது.

### 3.2.8 பரத்தை, தலைவி, தோழி, பாங்காயினர்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவனை விட்டுப் பிரிந்திருந்த தலைவி வருத்தப்பட்ட காலங்களில் தோழி உதவியாக இருப்பாள். பரத்தை தலைவியை இகழ்ந்து கூறுவது போன்ற செயல்களினால் பாங்காயினர் கேட்பது. இவ்வாறாக ஒருவருக்கொருவர் தகவலைப் பரிமாறுகிறார்கள் கதை மாந்தர்கள்.

**“அம்ம வாழி, தோழி ! ஊரன்**

**வெம்முலை அடைய முயங்கி, நம் வயின்**

**திருந்து இழைப் பணைத்தோள் நெகிழ,**

**பிரிந்தனன் ஆயினும், பிரியலன் மன்னே”[67]**

ஒரு நாள் தலைவன் பரத்தையின் தொடர்பை விட்டு விட்டு தன் இல்லத்திற்குச் சென்றான். அங்கு அவன் மனைவி பரத்தைமை விரும்பி பின் என்னிடம் அன்பு இல்லாமல் பிரிந்தாய் என்று கூறினாள். அதனைக் கேள்விப்பட்ட ஐங்குறுநூறுப் பாடலில் உள்ள பரத்தை தலைவி கூறிய பதிலுக்கு விடையாகத் தோழி பாங்காயினர் கேட்குமாறு என் தலைவன் மீண்டும் வருவார் எனத் தேற்றுகிறாள்.

### 3.2.9 தோழி, செவிலி, அறிவர், தலைவி இவர்களுக்கிடையே தகவல் தொடர்பு

தலைவி தலைவன் மீது அன்பு கொண்டிருந்தாள். அவனையே மணம் புரிந்து கொள்ள எண்ணினாள். அவளைச் சில சான்றோர் பெண் கேட்டு வந்தனர். ஆனால் அவள் விரும்பவில்லை. அந்த நேரத்தில் தோழி செவிலியிடம் அறத்தோடு நின்று அவள் தகவலை உரைக்கின்றாள்.

**“அன்னாய் வாழி! வேண்டு அன்னை! என் தோழி**

**நுனி நாண் உடையள் நின்னும் அஞ்சும்**

**ஒலி வெள் அருவி ஓங்கு மலைநாடன்**

**மலர்ந்த மார்பிற் பாயல்**

**தவ நனி வெய்யன் நோகோ, யானே”[68]**

என்னும் பாடலில், தலைவியானவள் காளைபோல் இருக்கும் ஒருவனை விரும்பினாள். அவனை மணம் புரிந்து கொள்ள எண்ணி கற்புக் கடம் பூண்டாள். சில சான்றோர்கள் அவளை பெண் கேட்டு வந்ததை அறிந்த

தலைவி கவலையுற்றாள். அப்போது தோழி அறத்தோடு நின்று தலைவியின் நிலையை செவிலியிடம் திருமணம் நடைபெற உதவுகிறாள்.

### 3.2.10 தலைவன், தூதர், தலைவி, மகன் போன்றோர் கருத்துக்களைப் பரிமாறுதல்

தலைவன் தலைவியை திரும்பப் பெற பாணனின் உதவியை நாடினான். அது பயனற்று விட்டது. தன் மகன் மூலமாக தலைவியைப் பார்க்க எண்ணினான்.

**"வெள்ளாங்குருகின் பிள்ளைச் செத்தென**
**காணிய சென்ற மடநடை நாரை**
**காலை இருந்து மாலை சேக்கும்**
**தென் கடற் சேர்ப்பனொடு வாரான்**
**தாம் வந்தனன், எம் காதலோனே!"**[69]

என்னும் பாடலில்,

தலைவன் பரத்தையின் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்திருந்தான். தலைவியின் ஊடலைத் தீர்ப்பதற்கு தூதர் உதவியை நாடினான். அப்போது தன் மகனைத் துணையாகக் கொண்டு இல்லத்திற்கு வருவதாக கேள்விப்பட்டாள். தன் மகன் மட்டும் தான் வந்தான். அப்போது தலைவி, வெள்ளைக் கொக்கின் குஞ்சு இறந்ததாக, அதன் தாயைக் கண்டு ஆறுதல் கூறும் பொருட்டு காலைப் பொழுதிலும் மாலைப் பொழுதிலும் தாயிடம் இருந்தன. அதுபோல கடற்கரைத் தலைவன் தன் தந்தையொடு வாராமல் தான் மட்டும் தனியாக வருகின்றான். என் மகன் அன்பு கொண்டவன் என்று கூறினான்.

### 3.2.11 தலைவன், பாணன், கூத்தர், அறிவர், தலைவிக்கும் இடையே தகவல் தொடர்பு

தலைவனுக்குச் சிறந்த தகவல் தொடர்பாளராக பாணன், கூத்தர், அறிவர், தலைவி போன்றோர் இருந்திருக்கின்றனர் என்பது அகநூலாகிய ஐங்குறுநூற்றின் மூலம் அறியமுடிகிறது. அதைப் பற்றி கீழ்காணும் பாடல்களின் மூலம் அறியலாம்.

**“தன் பார்ப்புத் தின்னும் அன்பு இல் முதலையோடு**
**வெண் பூம் பொய்கைத்து, அவன் ஊர் என்ப அதனால்**
**தன் சொல் உணர்ந்தோர் மேனி**
**பொன் போல் செய்யும் ஊர்கிழவோனே”[70]**

என்னும் பாடலில், தலைவன் தலைவிக்கிடையே சில மனக்கசப்புகள் ஏற்பட்டன. அதன் காரணமாகத் தவறுகளை சுட்டிக் காட்டித் தெளிவிக்கும் உரிமை கொண்ட பாணர், கூத்தர், அறிவர் போன்றோரை தலைவி இடத்து அனுப்பினான். தலைவன் ஒழுக்கத்தில் தவறானவன் என்று அவனையும், அவன் வாயில்களையும் இகழ்ந்து கூறினாள். தகவல் தொடர்பியலில் மிக முக்கியமானது ஒன்று தூது ஆகும். இன்றைய காலக்கட்டம் எவ்வளவோ வளர்ச்சி பெற்றிருக்கிறது. அன்றைய நிலையில் ஒருவர் செய்தியை ஒருவரிடம் அறிவிப்பதற்கு யாராவது ஒருவராவது சென்று நேரில் கூற வேண்டும். அப்போது தான் கருத்து முழுமை பெறும். அதற்கு உயிர் கிடைக்கும். தகவலைக் கூறுபவருக்கு மனம் நிறைவு பெறுவர். அந்தச் செய்தி முழுமை பெறும். ஆகவே சங்க காலத்திலே தகவல் தொடர்பு இருந்திருக்கின்றன. அவைதான் இப்போது வளர்ந்து பரிணாம வளர்ச்சி பெற்றிருக்கின்றது. அதற்குச் சான்றாக தலைவி தலைவன் இடத்தில் சென்று

செய்திகளைக் கூற அஃறிணை உயிர்களான நாரையை நற்றிணையில் பயன்படுத்திருக்கின்றாள்.

### 3.3. அஃறிணை பொருட்கள் தகவல் தொடர்பு

| தகவலாளர் கள் | நற்றிணை | அகநானூறு | கலித்தொகை | குறுந்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| தலைவி நாரை | 2 | - | - | - | - |
| தலைவி கிளி | 1 | - | - | - | - |
| தலைவி வண்டு | 1 | - | - | - | - |
| தோழி கிளி | 1 | - | - | - | - |

ஐங்குறுநூற்றில் அதிகப் பாடல்கள் உள்ளன. நற்றிணையில் குறைந்த பாடல்களே உள்ளன. தலைவி வண்டை நோக்கிச் செய்தி கூறல். தோழி கூகையை நோக்கிச் செய்தி தெரிவித்தல். தலைவன், தோழி, கிளி ஆகியோரிடத்தில் தகவலைக் கூறுதல். சங்க இலக்கியத்தில் உள்ள கதை மாந்தர்கள் ஒரு செய்தியை அறிவிக்க யாரை எல்லாம் தூதாக பயன்படுத்துகிறார்கள் என்பதையும், அவர்கள் சென்று எவ்வாறு செய்தியை அறிவிக்கிறார்கள் என்பதையும் அறியமுடிகின்றன.

#### 3.3.1 தலைவி நாரையை நோக்கிக் கூறுதல்

தலைவி தலைவனைக் களவின் பொருட்டு சந்திப்பாள். அதற்கு இடையூறு ஏற்பட்டதனால் தன் வருத்தத்தைப் போக்கிக் கொள்வதற்காக நாரையிடம் தகவலைக் கூறி தலைவனிடம்

நாரையைத் தூது அனுப்பினாள். தலைவி நாரையை எவ்வாறு தூது அனுப்புகிறாள் என்பதை,

**“சிறுமீன் கவுள் கொண்ட செந்தூவி நாராய்**
**இறுமென் குரல நின் பிள்ளை கட்கே யாகி**
**நெறிநீர் இருங்கழிச் சேர்ப்பன் அகன்ற**
**நெறியறிதி மீன்கபு நீ!”**[71]

ஐந்திணை ஐம்பது என்னும் பாடலில், சிவந்த இறகுகளைக் கொண்ட நாராய் நான் சொல்வதைக் கேட்பாயாக! மெல்லிய குரலையுடைய உன் குஞ்சுகளை எண்ணி மீன்களைக் கொத்தி தின்கின்றாய். களவுப் புணர்ச்சியில் என்னையும் தலைவனையும் கண்டுள்ளாய். ஆகையால் வளைந்து செல்லும் நீரையுடைய தலைவன் என்னைவிட்டு நீங்கியது நீ நன்றாக அறிவாய். தலைவி உனக்காக காத்து இருக்கிறாள். தலைவியைக் காண போகவில்லை என்றாள் அவள் இறந்து விடுவாள் என பொருள் காரணமாகப் பிரிந்த தலைவன் இடத்தில் இச்செய்தியை அறிவிக்குமாறு கூறி அனுப்புகிறாள்.

பகற்நேரத்திலும், இரவு நேரத்திலும் தலைவியைக் காண தலைவன் வந்தான். சில இடையீட்டின் காரணமாக தலைவன் வராமல் நின்றான். நற்றிணையின் தலைவி வரைதல் வேட்கை கொண்டு நாரையை நோக்கினாள். சிறிய வெள்ளிய நாரையே தலைவர்க்கு நான் இறந்துபடும் துயரத்தை நீ கூறவில்லையோ, எம் ஊரில் உள்ள இரையை அருந்தியபின் அவர் ஊருக்கு செல். அங்கு சென்று நான் படும் துயரத்தை தலைவனிடம் எடுத்துக் கூறு. இல்லை, அதனையும் நீ மறந்து விடுவாயோ என்று நாரையை தன் தகவல் தொடர்பாளராக பயன்படுத்தி தலைவனிடம் சென்று அறிவிக்கச் செய்கிறாள்.

களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவன் இடையில் வராமல் இருந்தான். தடைப்பட்டக் கூட்டத்தால் தலைவி மிகவும் வருந்தினாள். மணம் புரியக் கருத்தில் கொண்டு தலைவி தன் வேட்கையை நாரையிடம் கூறினாள். நாராய் நான் சொல்வதைக் கேள். தலைவன் இல்லாமல் மாலைப் பொழுதில் நான் வருந்தும் வருத்தத்தை அவன் உணருமாறு சொல்வாய். தலைவியைக் காண நீ செல்லவில்லையென்றால் அவள் இறந்துவிடுதலும் கூடும் என்ற தகவலை மறவாமல் தலைவனிடம் கூறு என்று நற்றிணைத் தலைவி நாரையை தூது அனுப்பினாள்.

### 3.3.2 தலைவி கிளியை தூது அனுப்புதல்

தலைவி பகற்பொழுதிலும் இரவுப் பொழுதிலும் தலைவன் வரும் வழியை நோக்கிக் காத்திருந்தாள். தலைவன் வராததால் கிளியை தலைவனிடம் தூதாக அனுப்பி தன் மனக்கருத்தை வெளிப்படுத்த எண்ணினாள்.

**"கொடுங்குரற் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி?**
**அஞ்சல் ஓம்பி, ஆர் பதம் கொண்டு,**
**நின் குறை முடித்த பின்றை, என் குறை**
**செய்தல் வேண்டுமால் கை தொழுது இரப்பல்**
**பல் கோட் பலவின் சாரல் அவர் நாட்டு,**
**……………………………………………….."**[72]

என்னும் பாடலில், தலைவன் தலைவியைக் காண பகற்நேரத்திலும் இரவு நேரத்திலும் காண வந்தான். சில காலங்களில் இடையீடு ஏற்பட்டன. அதனால் தலைவி மிகவும் வருந்தினாள். பின் கிளியிடம் தன் மனக் கருத்துக்களை வெளிப்படுத்த எண்ணி கிளியை தூது

அனுப்பினாள். தலைவி கிளியிடம் கிள்ளாய் என் தலைவர் தம் மலைப் பக்கத்திலுள்ள உன் உறவினரைக் காணச் செல்லும் பொழுது என் தலைவரைக் காண்பாயாக. கண்டு அங்கு உன் மலைக்குறமகள் தினைப்புனம் காப்பதற்காக தலைவி வந்தாள். கிளியே நீ அங்கு சென்று தலைவன் இடத்தில் தூது செல் என அனுப்பினாள் என்று தலைவி கிளியிடம் கூறுவதாக அமைந்துள்ளன.

### 3.3.3 தலைவி வண்டை தூதாக அனுப்புதல்

தலைவன் சில காரணங்களால் தலைவியை விட்டுப் பிரிந்து வேற்று நாடு சென்றதால் அவன் பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாமல் வருந்தினாள். அவள் வருத்தத்தைப் போக்கிக் கொள்வதற்கு வண்டை தலைவனிடம் தூதாக அனுப்பினாள். தலைவி வண்டை எவ்வாறு தூது அனுப்புகிறாள் என்பதை நற்றிணையில்**,**

**“கொடியை வாழி – தும்பி! - இந்நோய்**
**படுகதில் அம்ம, யான் நினக்கு உரைத்தென்**
**மெய்யே கருமை அன்றியும், செவ்வன்**
**அறிவும் கரிதோ- அறனிலோய்!-நினக்கே?**
**மனை உறக் காக்கும் மாண் பெருங் கிடக்கை**
**..........................................................”**[73]

தலைவன் தலைவியை மணந்து கொள்ளாது பொருள் தேடுவதற்காகப் பிரிந்து சென்றான். அறத்தோடு நின்ற பின்னும் தலைவன் சென்றது நினைத்து தலைவி வருந்தினாள். அவள் தன் மனக்குறையைப் போக்குவதற்காக வண்டிடம் கூறி தூது அனுப்பினாள். வண்டே வண்டே நீ கூடி முயங்குமாறு எம்மைத் தலைவன் முயங்க செய்யவில்லை. உன் உள்ளமும் உடலைப் போன்றே கருமை.

தலைவனிடம் சென்று தலைவி உன்னைக் காணவில்லையென்றால் உயிரை விட்டுவிடுவாள் என தூது செல். இல்லையென்றால் நோயால் இன்றே மடிவேன் நீ மட்டும் நீடு வாழ்க என்று நோயின் தன்மையை வெளிப்படுத்துகிறாள்.

### 3.34 தோழி கிளியிடம் தூது அனுப்புதல்

தலைவியை வெளியே விடாமல் காவல் வைத்திருந்தனர். அச்செய்தியைத் தலைவனிடம் கூற விரும்பினாள் தோழி. அதற்கு அ∴றிணை உயிராக விளங்கும் கிளியை சிறந்த தகவல் தொடர்பாளராகப் பயன்படுத்தி தூது அனுப்பினாள்.

**"முறஞ்செவி யானைத் தடக் கையின் தடைஇ**
**இறைஞ்சிய குரல பைந்தாட் செந்தினை,**
**வரையோன் வண்மை போல, பல உடன்**
**கிளையோடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்!**
**குல்லை, குளவி, கூகளம்,குவளை**
**இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன,**
**……………………………………………."**[74]

தலைவியை வெளியே விடாமல் தடைசெய்யப்பட்டு இல்லத்தில் வைத்திருந்தனர். அதனைத் தலைவன் இடத்தில் உணர்த்த எண்ணினாள் தோழி. அதனால் கிளியைத் தூதாகப் பயன்படுத்தினாள். கிளியின் இனமே என் அன்னை எம்மைக் காவலில் வைத்திருப்பதை அறிந்தீர். இனி என் தாய் வெறியாட்டு நிகழ்த்தும் இச்செய்திகளை எம் தலைவன் இடத்தில் சென்று கூறுங்கள்.

## 3.4 தொகுப்புரை

தொகைநூல்களில் தொடர்புத்திறன் என்னும் மூன்றாம் இயலில் தலைவன் தலைவிக்கிடையே தோழி சிறந்த தகவல் தொடர்பாளராக விளங்குகின்றாள் என்பதைக் காணமுடிகின்றது.

தகவல் தொடர்பு சாதனங்களின் இடையீடு இல்லாமல் ஒருவருக்கொருவர் நேரடியாக உரையாடுவதை நேருக்கு நேர்த் தகவல் தொடர்பு என்பர். தொகை நூல்களில் தலைவன் தலைவியிடையே உள்ள காதல் குறித்த தகவல்களை தலைவன் மற்றும் தலைவி இருவரும் நேரடியாகப் பகிர்ந்து கொள்ளும் பொருட்டு காதல் ஏற்படும் காலங்களில் ஆறுதல் கூறும் வகையில் தோழி,செவிலி, நற்றாய், பாங்கன் வாயிலாக தன் துன்ப நிலையைக் கூறும் நிலையில் நேருக்கு நேர்த் தகவல் தொடர்பு ஏற்படுகிறது.

நேருக்கு நேர் தொடர்பு தலைவின் களவு காலத்தில் தலைவனை சந்தித்துப் பின் தகவலை தலைவியிடத்துக் கூறும் பொழுதும் கற்புக் காலத்தில் தலைவன் பொருள் காரணமாகப் பிரிந்த காலத்தும் தலைவியை ஆற்றுபடுத்தும் காலத்தும் ஏற்படுகிறது. களவின் காரணமாக தலைவி தலைவனை சில இடையீட்டின் காரணமாக பார்க்க இயலாது போய்விடுகின்றது. தலைவி வருந்திக் காணப்படுகிறாள். அப்போது தோழி தலைவியிடத்தில் நேருக்கு நேராக தன் கருத்தைக் கூறி ஆறுதல் அடையச் செய்வதையும் காணமுடிகின்றது.

தலைவி மற்றும் தோழி தகவல் பரிமாறிக்கொள்ளும் பாடல்கள் குறுந்தொகையில் தான் மிகுதியான பாடல்கள் காணப்படுகின்றன. அதற்கு அடுத்தாற் போல் நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை

மற்றும் அகநானூற்றிலும் பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் தோழி இடத்தில் நேருக்குநேர் தகவல் பரிமாறும் பாடல்கள் ஐங்குறுநூற்றில் அதிகமாகவும் குறுந்தொகையில் அதற்கு அடுத்தாற் போல் அகநானூறு, நற்றிணை, கலித்தொகை என்ற வரிசையில் காணப்படுகின்றன. உண்மையான கதாபாத்திரங்களாக வலம் வரும் தலைவன் தலைவி இருவரும் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும் அடுத்ததாக கலித்தொகை, நற்றிணை, அகநானூறு, குறுந்தொகை என்ற வரிசையில் பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் தேர்ப்பாகன் இடத்தில் நேருக்கு நேர் உரையாடுவதாக அகநானூற்றில் அதிகமான பாடல்களும் ஐங்குறுநூறு, நற்றிணை மற்றும் குறுந்தொகை எனும் வரிசையில் பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவன் தலைவி உடன்போக்கு செல்கின்றார்கள். அவர்களைக் கண்ட இடைச்சுரத்தோர் கூறுவதாக ஐங்குறுநூறு மற்றும் கலித்தொகைநூல்களில் ஒரே சமமான பாடல்களான நான்கு பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் மற்றும் பாங்கன் உரையாடுவதாக குறுந்தொகையில் அதிகப்பாடல்களும் நற்றிணையில் அடுத்தநிலையில் அகநானூறும், நற்றிணையில் குறைவான பாடல்கள் எண்ணிக்கையில் காணப்படுகின்றன. பாணன், தோழி உரையாடுவதாக நற்றிணையில் ஆறு பாடல்களும் அகநானூற்றில் ஒரு பாடலும் காணப்படுகின்றன. தோழி வேலனை இகழ்ந்து கூறுவதாக கலித்தொகையில் ஆறு பாடல்களும் நற்றிணையில் ஒரு பாடலும் உள்ளன. தோழி உழவர் இடத்தில் உரையாடுவதாக ஒரு பாடல் இருக்கின்றது. செவிலி தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்கள் அகநானூறு மற்றும் கலித்தொகை என்ற அடிப்படையில் பாடல்கள்

அமைந்துள்ளன. தலைவியை கண்டோர் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும், கலித்தொகையில் இரண்டு பாடல்களும் அமைந்துள்ளன. தூதுவர் தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் செவிலி தெய்வத்திடம் கூறுவதாக குறுந்தொகையில் ஒரு பாடலும் காதற்பரத்தை பாங்காயினர் இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் இரண்டு பாடல்களும் குறுந்தொகையில் ஒரு பாடலும் என்று முறைப்படுத்தப்பட்டு உள்ளன.

தலைவன் சான்றோர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், தலைவி பாணன் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்கள் குறுந்தொகையில் குறைவாக இரண்டு பாடல்கள், தலைவி தெய்வத்திடம் கூறுவதாக குறுந்தொகையில் மட்டும் ஒரு பாடல் காணப்படுகின்றன. தலைவன் முல்லைக் கொடி இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் குறுந்தொகையில் ஒரு பாடலும் அமைந்துள்ளது. செவிலி நற்றாய் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமானப் பாடல்களும் குறைவானப் பாடல்களாக குறுந்தொகையும் உள்ளன.

பரத்தை பங்காயினர் இடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் நான்கு பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் பாணன் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்கள், கலித்தொகையில் ஒரு பாடல், அந்தணர் செவிலி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்கள், கலித்தொகையில் ஒரு பாடல் இருக்கின்றன. செவிலி தலைவியின் நலன்களைப் பற்றி அயலார் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் பரத்தை

தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூறு மற்றும் அகநானூற்றில் பாடல்கள் காணப்படுகின்றன.

நற்றாய் காக்கை இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் பரத்தை தலைவன் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் அதிகமான பாடல்களும் ஐங்குறுநூற்றில் குறைவான பாடல்கள் காணப்படுகின்றன. தலைவி அயலார் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் தலைவன் உழையர் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் அமைந்துள்ளன. செவிலி முக்கோற்பவர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், தலைவி மாலைப்பொழுதை நோக்கிக் கூறுவதாக கலித்தொகையில் ஒரு பாடல் தலைவனைப் பார்த்த இடைச்சுரத்தோர் கூறுவதாக ஐங்குறுநூற்றில் நான்குப் பாடல்கள் அமைந்துள்ளன.

செவிலி ஏவலர் இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல், நற்றாய் தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் இரண்டு பாடல்கள், அகநானூற்றில் ஒரு பாடல் அமைந்துள்ளன. தலைவி அந்தணர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் மட்டும் ஒரு பாடல் உள்ளது. ஆய்ச்சியர் தென்னங்குரவர் உரையாடுவதாக கலித்தொகை மற்றும் ஐங்குறுநூற்றில் ஒரு பாடலுள்ளது.

பரத்தை தலைவி இடத்தில் உரையாடுவதாக அகநானூற்றில் நான்குப் பாடல்களும் கலித்தொகையில் இரண்டு பாடல்களும் உள்ளன. சான்றோர் அரசன் இடத்தில் உரையாடுவதாக குறுந்தொகையில் இரண்டு பாடல்களும் காணப்படுகின்றன. சுற்றத்தார்

கூறியதாக கலித்தொகையில் ஒரு பாடல் அமைந்துள்ளது. தலைவன் ஏவலர் இடத்தில் கூறியதுமாக அகநானூற்றில் இரண்டு பாடல்கள் குறிப்பிடுகின்றது. செவிலி வயலைக்கொடியை நோக்கிக் கூறுவதாக அகநானூற்றில் ஒரு பாடல், செவிலி பெண்மானை நோக்கிக் கூறுவதாக ஒரு பாடல் இருப்பதை அறிய முடிகிறது.

குழுத்தொடர்பு தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் காலங்களில் தலைவன், தோழி, தலைவி, செவிலி, பாணன் போன்றோர் ஒருவருக்கொருவர் தன் தகவலை ஒருவரிடமிருந்து இன்னொருவர் பரிமாறுதல் போன்ற செய்திகளை ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன. தொகை நூல்களில் உள்ள கதை மாந்தர்கள் ஒவ்வொருவர் குழுவாக சேர்ந்து செய்தியை எவ்வாறு பரிமாறுகிறார்கள் என்பது பற்றியும் வெளிக்கொணரப்பட்டுள்ளன.

தகவல் தொடர்பில் மிகவும் முக்கியமானது ஒன்று தூது. இன்றைய காலகட்டம் எவ்வளவோ வளர்ச்சி பெற்றிருக்கின்றது. ஆனால், அன்றைய நிலையில் ஒருவர் செய்தியை ஒருவரிடம் அறிவிப்பதற்கு அ.்.றிணை உயிர்களையும் அனுப்பி செய்தி பரிமாற்றம் செய்துள்ளனர். அப்போது தான் ஒரு கருத்து முழுமை பெற்று அதற்கு உயிர் கிடைக்கும். தகவலை கூறுபவரும் மனநிறைவு பெறுவர். சங்க காலத்திலே அ.்.றிணைகளோடு தகவல் தொடர்பு இருந்திருக்கின்றது என்பதை உணரமுடிகின்றன.

## குறிப்புகள்

1. பதி – ஐந்தி – ஐம்பது – 30, ப – 28
2. திருக் - 1286, ப – 278
3. குறுந் - 16 , ப – 53
4. பதினெண் - ஐந்தி. – ஐம்பது 1, ப – 8,
5. பதினெண் - ஐந்தி. - எழுபது – 17, ப – 18
6. நற் - 104, ப – 187
7. பதினெண் - ஐந்தி. – ஐம்பது – 35, ப – 31
8. குறள் - 1146, ப – 250
9. தொல் - பொருள் - 1126, ப – 322
10. பதி – ஐந் - ஐம் - 12, ப – 15
11. தொல் - பொருள் - 1095, ப – 314
12. குறுந் - 53, ப – 138
13. பதி – ஐந் - எழுபது – 10 , ப – 53
14. தொல் - பொருள் - 1067 , ப – 303
15. தொல் - பொருள் - 1104, ப – 318
16. பதி – ஐந் - ஐம்பது – 12, ப – 15
17. பதி – திணை – ஐம்பது – 4, ப – 10
18. தொல் - பொருள் - 1103, ப-317
19. ஐங் - 64, ப – 143
20. தொல் - பொருள் - 1181, ப – 334
21. சிலப்பதிகாரம் - 40, ப – 95
22. நம்பி – 130, ப – 175
23. குறள் - 1277, ப – 276
24. தொல் - பொருள் - 1105, ப – 318
25. நம்பி – 120, ப – 147
26. பதி – திணை – நூற் - 22, ப – 148
27. திரு – 1325, ப – 285

28. பதி – ஐந் - 10, ப - 13

29. தொல் - பொருள்- 986, ப – 269

30. பதி – திணை – நூற் - 71, ப – 181

31. நற் - 394 , ப –729

32. பதி - திணை - நூற் - 33, ப - 155

33. பதி – திணை – நூற் - 47, ப – 165

34. நம்பி – 1371, ப – 38

35. தொல் - பொருள் - 1128, ப- 322

36. பதி – கைந் - 40 , ப – 269

37. தொல் - பொருள் - 24, ப – 301

38. பதி – திணை – நூற் - 12, – ப -141

39. பதி – ஐந் - எழுபது – 62, ப - 85

40. ஐங் - 361, ப– 788

41. குறு – 378, ப – 902

42. கலி – 94, ப – 405

43. திருக் - 1135, ப - 114

44. ஐங் - 13, ப - 31

45. நம்பி – 194 , - ப-62

46. ஐங் - 81, ப - 176

47. மேலது – 387, ப - 847

48. ஐங் - 38, ப - 81

49. நம்பி – 115 , ப - 32

50. பதி – திணை – நூற் - 89, ப - 195

51. குறள் - 1226, ப - 266

52. ஐங் - 375, ப - 820

53. அகம்-15, ப-43

54. ஐங்- 384, ப - 841

55. கலி – 102, ப - 43

56. அகம் - 324, ப – 774

57. மேலது – 383, ப – 383

58. அகம் - 7, ப - 19

59. பதி – திணை – நூற் - 138, ப - 228

60. பதி – ஐந் - எழுபது – 5, ப - 50

61. நம்பி – (168 – 1, 5) ப - 53

62. நற் - 2, ப - 4

63. நற் - 50, ப - 87

64. பதி – கை – 37 , ப – 267

65. நற் - 176, ப – 323

66. மேலது – 200, ப - 366

67. ஐங் - 30, ப- 67

68. ஐங் - 205, ப – 433

69. மேலது – 157, ப – 330

70. மேலது – 41, ப – 87

71. பதி – ஐந் - எழுபது – நூற்-68, ப - 89

72. நற் - ப - 102, ப – 183

73. மேலது – ப - 277, ப – 510

74. மேலது – ப - 376, ப – 694

# 4. தொகை நூல்களில் அறிவித்தல், அறிவூட்டல், மகிழ்வித்தல்

**4.0** தொடர்பியலின் முக்கியமான பணி வாசகர்களிடம் தகவல்களைப் பரப்புவதாகும். மக்களுக்கு எல்லா விவரங்களையும் உடனுக்குடன் உண்மையாக விருப்பு வெறுப்பின்றி, முழுமையாக வழங்க வேண்டும். இவ்வகையில் தொகைநூல்களில் தலைவன் தலைவியின் நட்பை மேம்படுத்த தகவல்களை யார், யார் மூலமாக சூழலுக்கேற்ப, சமூகம், பண்பாடு, மரபு மாறுபடாமலிருக்கும் வகையில் பல்வேறு செய்திகளைத் தகவல்களாக்கி எவ்வாறு அறிவிக்கின்றன. உலகில் புதிய கண்டுபிடிப்புகளும் அறிவியல் முன்னேற்றங்களும் நாளும் பெருகி வருகின்றன. அன்றைய மக்களிடம் இத்தகைய தகவல் தொடர்பு முன்னேற்றம் இல்லை. சங்க காலத்தில் தொகை நூல்களில் தலைவன், தலைவி இருவருக்கு இடையேயும் தோழி எவ்வாறு அறிவூட்டல் பணியை அகநிலை மாந்தர்கள் எவ்வாறு செய்துள்ளனர். இறுதியாக தலைவன், தலைவியை தோழி எவ்வாறு மகிழ்விக்கிறாள். மகிழ்விக்கக் கூடிய தகவல்களைக் கூறியும், சோர்ந்து விடாமல் உற்சாகமூட்டியும் மகிழ்விக்க வேண்டும். அவர்களுக்கிடையே மகிழ்ச்சியை உண்டாக்கும் வண்ணமாக இவ்வியலில் ஆராயப்பட உள்ளது.

| தகவலளார்கள் | நற்றிணை | அகநானூறு | குறுந்தொகை | கலித்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| அறிவித்தல் | 189 | 137 | 251 | 85 | 235 |
| அறிவூட்டல் | 48 | 34 | 72 | 16 | 27 |
| மகிழ்வித்தல் | 11 | 8 | 4 | 9 | 37 |

தொகை நூல்களில் காணப்படும் தகவல்களில் அறிவித்தல் குறித்த பாடல்களின் எண்ணிக்கைகளில் 897 பாடல்களைப் பெற்று முதலிடம் வகிக்கின்றன. அதற்கடுத்தாற்போல் அறிவூட்டல் குறித்த பாடல்கள் 197 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அடுத்த இடத்தில் மகிழ்வூட்டல் பாடல்கள் 69 பாடல்களின் மூலம் மூன்றாம் இடத்தில் உள்ளன. இதன்மூலமாக தொகை நூல்களில் அதிகமாக இடம்பெறுவது அறிவித்தல் பாடல்களே என்பது புலனாகின்றன.

**அறிவித்தல்**

| கதை மாந்தர்கள் | நற்றிணை | அகநானூறு | குறுந் தொகை | கலித்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| தலைவி தோழி | 101 | 91 | 184 | 25 | 104 |
| தலைவன் தோழி | 10 | 26 | 52 | 14 | 65 |
| தலைவன் தலைவி | 3 | 4 | 3 | 17 | 34 |
| தலைவி பாணன் | 74 | 1 | 1 | 3 | 6 |
| தோழி குயவன் | 1 | - | - | - | - |
| தலைவன் தேர்பாகன் | - | 12 | - | - | 8 |
| செவிலி தோழி | - | 1 | 6 | - | 12 |
| பரத்தை தோழி | - | 2 | - | - | 1 |
| காதற்பரத்தை தலைவன் | - | - | 3 | 8 | 2 |
| செவிலி நற்றாய் | - | - | 1 | - | - |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாணன் தலைவன் | - | - | 1 | - | - |
| தலைவி தலைவன் கண்டோர் | - | - | - | 4 | 1 |
| தலைவன் பாங்கன் | - | - | - | 1 | - |
| தலைவி மகன் | - | - | - | 3 | - |
| தலைவன் காமக்கிழத்தி | - | - | - | 8 | - |
| தலைவன் தலைவி தோழி | - | - | - | 10 | - |
| பாணன் தோழி | - | - | - | - | 1 |

சங்கத் தொகை அகநூல்களில் அகநிலை மாந்தர்கள் எவ்வாறு தகவலைப் பரிமாறுகின்றனர் என்பதையும் தலைவி தோழி உரையாடுவதாக குறுந்தொகையில் மிகுதியான பாடல்கள் உள்ளன. தோழி தலைவி இடத்தில் ஆறுதல் அடையச் செய்ய செய்தியை அறிவிப்பதாக 184 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 104 பாடல்களும், நற்றிணையில் 101 பாடல்களும், அகநானூற்றில் 91 பாடல்களும், கலித்தொகை 25 பாடல்களும் காணப்படுகின்றன. அடுத்ததாக தலைவன் தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 65 பாடல்களும், குறுந்தொகையில் 52 பாடல்களும், அகநானூறு 26 பாடல்களும், கலித்தொகையில் 14 பாடல்களும், நற்றிணையில் 10 பாடல்களும் இருக்கின்றன. தலைவன் தலைவி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 34 பாடல்களும், கலித்தொகையில் 17 பாடல்களும், அகநானூற்றில் 4 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், நற்றிணையில் 3

பாடல்களும் உள்ளன. தலைவன் தலைவி உரையாடுவது மிகக் குறைந்த பாடல்களேயாகும்.

தலைவி பாணன் உரையாடுவதாக நற்றிணையில் 74 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 6 பாடல்களும், கலித்தொகையில் 3 பாடல்களும், குறுந்தொகை, அகநானூற்றில் தலா ஒரு பாடலில் பேசுவதாக அமைந்துள்ளன. தோழி குயவனிடம் உரையாடுவதாக ஒரு பாடலும், தலைவன் தேர்பாகன் இடத்தில் உரையாடுவதாக அகநானூற்றில் 12 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 8 பாடல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. பின் செவிலி தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 12 பாடல்களும், கலித்தொகையில் 6 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடல் உள்ளன. பரத்தை தோழி உரையாடுவதாக இரண்டு நூலில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளன. அதில் அகநானூறு 2 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 1 பாடல் அமைந்துள்ளன. காதற்பரத்தை, தலைவன் அறிவிப்பதாக குறுந்தொகை 3 பாடல்களும், ஐங்குறுநூறு 2 பாடல்களும் இருக்கின்றன. மேலும் செவிலி நற்றாய் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், பாணன் தலைவன் அறிவிப்பதாக குறுந்தொகையில் ஒரு பாடல், தலைவன் தலைவி உடன்போக்கு செல்கின்றார்கள். அப்பொழுது அவர்களை கண்டவர்கள் அறிவிப்பதாக கலித்தொகையில் ஒரு பாடல், ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் தகவலை அறிவிக்கின்றது. தலைவன் பாங்கனிடம் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல், தலைவி தன் மகனிடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் இருக்கின்றது. தலைவன் காமக்கிழத்தியிடம் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் 8 பாடல்களும், தலைவன், தலைவி இவர் இருவருக்கும் இடையில் தோழி அறிவிப்பதாகக் கலித்தொகையில் 10 பாடல்களும், தோழி பாணன் இடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில்

ஒரு பாடல் அமைந்துள்ளன. தலைவி, தலைவன் இருவருக்கும் இடையில் தோழி விளங்குகின்றாள். மேற்குறிப்பிட்ட இந்த அட்டவணையின் மூலம் தொகைநிலை மாந்தர்கள் அறிவித்தலில் எவ்வாறு அறிவிக்கின்றனர்.

## 4.1 அறிவித்தல்

ஒருவரின் அகமனதில் உள்ள கருத்துக்களைக் குறிப்பாக இன்ப துன்பங்களை மற்றவரோடுப் பகிர்ந்து கொள்ளுகின்ற பொழுது இறுகிய மனம் நெகிழ்ச்சி அடைகின்றது. அறிவித்தல் என்பது இருமன இறுக்கங்களின் வடிகாலாகிறது. சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவி இருவருக்கும் முன் வந்து செல்லும் தொடர்பாளர்கள் முக்கியப் பாத்திரங்களாக மாறி தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்துகின்றனர்.

### 4.1.1 தலைவியிடம் தோழி தகவலை அறிவித்தல் முறைகள்

சங்கத் தொகை நூல்களில் தலைவி தோழி இருவருக்கிடையே நிகழும் கருத்துக்களை தொடர்புபடுத்தி உரையாடுகிறார்கள். தலைவன் பொருள் தேடச் சென்று விடுகின்றான். தலைவனின் பிரிவால் வருந்திய தலைவிக்கு தோழி அறிவிக்கின்றாள். தோழி தலைவனின் நல்ல செயலை எடுத்துக் கூறி தலைவியை தேற்றிச் செய்தியை கூறுகின்றாள். இவ்வாறு தலைவி தோழி இருவரும் தன் கருத்துக்களை அறிவிக்கிறார்கள். சங்கத்தொகை அகநூல்களிலுள்ள குறுந்தொகையில் தலைவி தோழி உரையாடல் மிகுதியாக காணப்படுகின்றன. அடுத்த நிலையில் ஐங்குறுநூற்றிலும் அதன்பின் நற்றிணையிலும், அகநானூற்றிலும் காணப்படுகின்றன. ஆனால் கலித்தொகையில், தலைவி தோழி உரையாடல்கள் குறைவாக உள்ளது. தோழி தான்

தலைவிக்கு சிறந்த தகவல் தொடர்பளராக விளங்குகின்றாள். ஒவ்வொரு தொகை நூல்களில் உள்ள தலைவி தோழி உரையாடலை அதிகமாக உள்ள பாடல்களின் எண்ணிக்கையை வரிசைப்படுத்தி அவர்களின் உரையாடலை அறிவித்தலில் காணலாம்.

பத்துப்பாட்டில் உள்ள தலைவிக்கு தோழி அறிவிப்பதாக, தோழி நான் சொல்வதைக் கேட்பாயாக, உனக்கும் நீ விரும்பிய தலைவனுக்கும் திருமணம் எவ்வித தடங்களுமின்றி நடக்க வேண்டும்.

தனித்தனியாக உள்ள இரண்டு குடிகளும் ஒரே குடியாக வேண்டும். குணத்தையும் உதவியையும் ஒப்பிட்டுப் பார்க்காமல் நீ தலைவனை மணம் புரிந்து கொள்ள வேண்டும். நீ இதை மனதில் எண்ணி நன்றாகப் புரிந்து கொள் என்ற தன் தகவலை தலைவிக்கு தோழி அறிவிப்பதாக காணப்படுகின்றது.[1]

**“சூழ்தலும் உசாத்துணை நிலையிற் பொலிமே”**[2]

என்னும் நூற்பாவில், தொல்காப்பியத்தில் உள்ளத் தோழியும் தலைவியின் துன்பத்திற்கு மிகவும் உறுதுணையாக இருந்திருக்கின்றாள். தலைவியின் துன்பத்தை தீர்ப்பதற்கு சிறந்த தகவல் தொடர்பாளராக தோழி விளங்குகின்றாள்.

**‘செல்வார் அல்லர்’ என்று யான் இகழ்ந்தனனே**
**‘ஒல்வாள் அல்லள்’ என்று அவர் இகழ்ந்தனரே**
**ஆயிடை, இருபேர் ஆண்மை செய்த பூசல்,**
**நல் அராக் கதுவியாங்கு, என்**
**அல்லல் நெஞ்சம் அலமலக்குறுமே’**[3]

என்னும் பாடலில், தோழி தலைவன் என்னிடத்தில் அன்புடையவன் என்று கருதினேன். என்னை விட்டு தலைவர் பிரிய மாட்டார் என

உறுதியாக நம்பினேன். அந்த நம்பிக்கையை இழக்கும் வண்ணம் தலைவன் என்னை விட்டுப் பிரிந்துச் சென்றுவிட்டார். அவ்வாறு பிரிந்துச் சென்ற செய்தி எவ்வாறு இருந்தது என்றாள். நல்லப் பாம்பு தீண்டுவது போல் இருந்தது. என் நெஞ்சத்தில் பிரிவுத் துயரம் மிகவும் துன்புறுத்துகின்றது என்ற தகவலை தலைவி தோழி இடத்தில் அறிவிக்கின்றாள்.

தோழி நம் தலைவர் வேனில் வெம்மையிலும் பாலை நிலத்தின் கொடுமையில் பொருள் தேடுவதற்காகச் சென்றார். களிறு தன் கொம்பினால் மரப்பட்டையைக் குத்தி உரிக்கும். பின் உரித்த மட்டையை தன் சுற்றத்தார்க்கு கொடுக்கும். இக்காட்சியைப் போல் நம் தலைவரும் சுற்றத்தார்க்குத் தேவையானப் பொருளைத் தேடிச் சென்றார் எனத் தலைவி தன் துன்பத்தை தோழிக்கு கூறுகிறாள்.

நீ குன்றுகளையுடைய நாட்டின் தலைவனோடு உடன்போக்கில் செல்லத் துணிந்தாய். அவனை அழைத்துக் கொண்டு வந்துவிட்டேன். அவன் உன்னுடன் செல்லுவதற்காக ஓர் இடத்தில் நிற்கின்றான். அப்பொழுது தலைவி நாணம் கொண்டு உடன்போக்கு உடன்படாமல் இன்றையப் பொழுது எப்படியாவது கழிய வேண்டும் எனக் கூறினாள். அதற்கு தோழி இனி என்னால் எதுவும் செய்ய முடியாது என்று தலைவியிடம் கோபப்படுகின்றாள்.

பகற்பொழுது கழிந்தது. முல்லை அரும்புகள் மலர்ந்து நிற்கின்றது. சூரியன் தன் வெப்பத்தை தணிப்பதற்காக மழைக்காலம் வரப்போகின்றது. இந்த மழைக்காலத்தையும் இரவு நேரத்தையும் கடந்து விடுவது எவ்வாறு இருப்பது என்றாள், கடல் எவ்வளவு பெரியதாக உள்ளதோ அதுபோல் எனக்கும் அவ்வளவு பெரியதாக இருக்கின்றது. அதில் நாம் நீந்தும் பொருட்டு என்ன நன்மை வரப்போகின்றது என்று தலைவி தோழிக்கு அறிவுறுத்துகிறாள்.

சங்கத் தொகை நூல்களில் குறுந்தொகைக்கு அடுத்தப்படியாக விளங்குவது ஐங்குறுநூறு. இதில் தலைவி தோழி உரையாடல் மிகுதியாக காணப்படுகின்றது. இங்கும் தோழி தான் சிறந்த தகவல் தொடர்பாளராக விளங்குகின்றாள்.

‘‘தோழியே! தீயினால் வெந்து கருகிய காட்டுக்கு மீண்டும் நறுமணம் உண்டாகிறது. ஏனென்றால், மலையிலிருந்து அருவியின் மூலம் சந்தனக்கட்டை அடித்துக் கொண்டு வருகின்ற மலை நாட்டின் தலைவன் இனி இங்கு வருவானோ! வராமல் இருந்து விடுவனோ!’’[4] அதனை அறியாமல் என் நெஞ்சம் நடுங்குகின்றது. கைந்நிலை என்னும் நூலில் உள்ள தலைவி தோழியிடம் கூறினாள்.

தலைவன் இயற்கைப்புணர்ச்சியின் காரணமாக தலைவி இரவில் காண்பதற்காக வந்து சென்றான். பின் சிறு இடைவெளியின் காரணமாக தலைவன் தலைவியைக் காணவில்லை. அதனால் மிகவும் துன்ப நிலை அடைந்தாள். தோழி தலைவி இடத்தில் இரவு நேரத்தில் உன்னைக் காண வருதலால் அலர் உண்டாகின்றது. சில இடையீடு ஏற்படுகின்றது. தலைவன் அதை அறிந்திருப்பான். களவுப்புணர்ச்சி நிலை இல்லாதது என்று புரிந்திருப்பான்.’’[5] அவன் விரைவில் உன்னை மணம் புரிந்து கொள்ளுவதற்காக வருவான். எனவே கவலைப்படாதே எனத் தோழி தலைவிக்கு அறிவித்தாள்.

**‘‘கானல் அம் பெருந் துறைக் களதிரை திளைக்கும்**
**வான் உயர் நெடு மணல் ஏறி, ஆனாது**
**காண்கம் வம்மோ–தோழி!**
**செறி வளை நெகிழ்தோன் எறி கடல் நாடே!’’**[6]

என்னும் பாடலில், களவுக் காலத்தில் தலைவன் தலைவியை விட்டு நீங்கினான். அப்பொழுது ஊரார் அலர் தூற்றினர். அப்பிரிவினைத் தாங்க முடியாமல் தலைவி வருந்தினாள். அப்போது தோழி உன் வளையல்கள் கழன்று விழும்படியாக இருக்கின்றது. உன் உடல் மெலிந்து இருக்கின்றது. தலைவனை நினைக்காமல் என்னுடன் வருக. மணல்மேட்டின் மீது விளையாடலாம் என்று தலைவி இடத்தில் இயம்பினாள்.

மழை இல்லாமல் தினைப்பயிர் கருகிவிட்டது. அதனால் தினைப்புனம் காவல் செய்ய இனிமேல் நாம் செல்லமாட்டோம். தினை காப்பதைக் கொண்டு நம் தலைவனைச் சந்தித்தோம். இனி அது முடியாது என்று கவலைப்பட்டாள். தோழி தலைவன் குன்றின் மேல் மேகம் கருக்கின்றது. மழைப் பெய்யப் போகின்றது என்று அவள் தலைவியிடம் தகவலை எடுத்துக்காட்டுகிறாள்.

தலைவன் தலைவியை இயற்கைப் புணர்ச்சியின் பொருட்டு வந்து நீங்கினான். தலைவி தலைவன் தன்னை விரைவில் மணம் செய்து கொள்ள வேண்டும் என விரும்பினாள். ஆனால் தலைவன் குறித்தக் காலத்தில் வரவில்லை. அதனால் தலைவி பெரிதும் வருந்தினாள். தோழி தலைவி இடத்தில் தலைவன் திருமணம் புரிந்து கொள்வதற்காக ஏற்பாட்டுடன் வருவான் என தலைவி இடத்தில் கூறி புரிய வைக்கிறாள்.

தலைவன் தலைவியை திருமணம் செய்து கொள்வதற்காக வரைவிடை வைத்துப் பிரிந்து சென்றதால் தலைவி ஆற்றாது வருந்தினாள். அதனைக் கண்ட தோழி வருத்தப்படாதே எனக் கூறினாள். தலைவி தோழி இடத்தில் மலைநாடன் என்னைத் தனித்து

விடுத்துச் செல்லவில்லை. அவ்வாறு செல்கையில் என் மெல்லிய தோள்களின் அழகையும் உறக்கத்தையும் உடன்கொண்டு போனான் எனத் தலைவி தோழியிடம் வருத்தத்தை வெளிப்படுத்துகிறாள்.

தலைவியின் தமர் தன்னை தலைவனுடன் திருமணம் செய்துக் கொள்ள மறுப்பர் என எண்ணினாள். அதனால் தலைவி தன் கற்பைக் காத்துக் கொள்ள எண்ணி, தலைவி தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்டாள். பின் மீண்டும் ஒரு நாள் தன் ஊருக்குத் திரும்பி வந்தாள். இடைச்சுரத்தில் என்ன நிகழ்ந்தது எனத் தோழி கேட்டாள். தலைவியும் தான் விரும்பியவாறு ஆண்டு கடந்துவிட்டது. நாங்கள் செல்கையில் என் தமையன்மார் பின் தொடர்ந்து வந்தனர். மலை ஒன்றில் மறைந்துக் கொண்டோம். அம்மலை செய்த உதவி எங்களுக்கு மிகவும் பெரியது என தோழி இடத்தில் விளக்கினாள்.

“பொன்னால் செய்யப்பட்ட வளையல்களை அணிந்த தோழியே! மாமரங்கள் பக்கத்தில் உயர்ந்து விளங்கும் குருந்த மரங்களுடன் சேர்ந்து அரும்புகளைத் தோற்றுவிக்கும். பின் மலரும் நம்மைக் கலந்து விட்டுப் பிரிந்து சென்ற தலைவர் சொன்ன மொழிகள் எல்லாம், வேனிற்காலம் வருதலால் குயில்கள் கூவி அவற்றைப் பொய்யாக்கி விட்டன”[7] என்று தலைவன் பிரிவினால் வருந்தியத் திணைமாலை நூற்றைம்பதில் தலைவி தோழியிடம் அறிவித்தாள்.

நற்றிணையில் பொருள் தேடுவதற்காக பிரிந்து சென்ற தலைவன் குறித்து சென்றப் பருவத்தில் வருவேன் எனக் கூறினான். அந்த பருவம் வந்தும் தலைவன் வரவில்லை. தலைவி பெரிதும் வருந்தினாள். தலைவி வருந்துவதை அறிந்த தோழி தலைவியை ஆற்றுவிக்க எண்ணினாள். அதன் காரணமாக தலைவன் வருகையை உணர்ந்த

தோழி கடல் நீரை ஆவியாகப் பெற்று வானம் மின்னுகின்றது. விரைவில் மழை வரப் போகின்றது. கார்காலம் வந்துவிட்டதை தலைவன் அறிவான். விரைவில் மீண்டும் நம்மை வந்துச் சேர்வான் என்னும் தகவலைத் தலைவிக்கு தோழி ஆற்றுவித்தாள்.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்ள கருதினாள். அது விரைவில் நடக்க வேண்டும் என எண்ணிய தோழி தலைவியிடத்தில் ஊரார் உன்னை அலர் தூற்றினர். அது உண்மையென்று எண்ணி அன்னை வருந்தினாள். அது கண்டு நான் வருந்துகிறேன். நம் தலைவனோடு நீ சென்று சேருமாறு எண்ணுகிறேன். அவ்வாறாக நீங்கள் சென்றால் இவ்வூர் என்ன செய்ய இயலும். அலர் கூறிக் கொண்டே ஒழிந்து போகட்டும். என்றத் தகவலை திறம்பட பரிமாறிக்கொண்டாள்.

**“சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி,**
**மூக்கின் உச்சிச் சுட்டு விரல் சேர்த்தி,**
**மறுகில் பெண்டிர் அம்பல் தூற்ற,**
**சிறு கோல் வலந்தனள் அன்னை அலைப்ப,**
**அலந்தனள் வாழி–தோழி!-கானல்**
**புது மலர் தீண்டிய பூ நானு குரூஉச் சுவல்**
**…………………………………………………..**
**அலர் சுமந்து ஒழிக, இவ் அழுங்கல் ஊரே!”**[8]

என்னும் நற்றிணை பாடலில், தலைவன் தலைவியை விட்டுப் பொருள் காரணமாகப் பிரிந்து சென்றான். அதனை அறிந்த தலைவி மிகவும் வருந்தினாள். அதற்குத் தோழி தலைவன் உன்னைப் பிரிந்து செல்பவரல்லர். அவ்வாறு செல்லினும் காதல் மிகுதியை

ஆற்றமாட்டாள். பொருள் வேண்டாம் என்றும் சில நொடிகளில் வந்து விடுவார். மழையின் ஒலி பிரிந்தாரை நாடித் தருவது போலும் என்று ஆறுதல் கூறி தலைவியைத் தேற்றுகிறாள்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். ஆகையால், குறித்து சென்றப் பருவத்தில் வரவில்லை. அதனால் வருந்திய தலைவி இடத்தில் தோழி குளிர்காலத்தில் நாம் அவரைப் பிரிந்துப்படும் துயரத்தையும் நாம் உறங்காமல் தவிப்பதையும் அவர் அறிவார். இதை அறிந்திருந்தும் நம்மிடத்தில் வராமல் இருப்பது எவ்வாறாக இருப்பதென்றால் அவர் அன்பிலர் என்பதைக் காட்ட முயற்சிக்கிறாள் தோழி.

தலைவன் குறித்து சென்றப் பருவத்தில் மீண்டும் வரவில்லை. அதனால் தோழி தலைவியிடம் நம் தலைவன் முன் சொன்ன வார்த்தை தவற மாட்டான். மீண்டும் வருவான். முதல் மழை பெய்யப் போகின்றது. அவன் நம்மிடத்தில் கூறிச் சென்ற சொற்கள் பழிக்குமாறு நம் தினைப்புனத்தில் மழை பெய்யட்டும். அன்றைய தினம் வருவான் எனத் தோழி தலைவியிடம் தெரிவித்தாள்.

“ஒளி பொருந்திய நெற்றியையுடைய தலைவி மனதிற்குள்ளே கவலை கொண்டு இளைத்துப் போனாள். அதைக் கண்ட தோழி தலைவி இடத்தில் நீ வாழ்வாயாக. தலைவன் இல்லாமல் உன் கைவளையல்கள் நெகிழப் பெற்றிருக்கின்றது. அழகு பொழிவு இழந்து காணப்படுகிறது. இனி நீ கவலைப்படாதே”[9] தலைவன் விரைவில் வந்துவிடுவான் என்று பத்துப் பாட்டில் உள்ள தோழி தலைவி இடத்தில் எடுத்துரைக்கிறாள்.

களவின் காரணமாக இடையூறு ஏற்பட்டது. அதனால் தலைவி தலைவனைக் காண வரவில்லை. தலைவி உடல் மெலிந்து காணப்பட்டாள். அது கண்ட தோழி கடுஞ்சுரத்தின் வழியாகச் செல்வது மகளிர்க்கு இயலாது என்று செலவினைத் தவிர்த்திருந்தான் தலைவன். இன்று நம்மோடு வருவதற்கு செலவினை விரும்பினார். நீ கவலையடைய வேண்டாம் என அகநானூற்றில் தோழி தலைவியை ஆற்றுவித்தாள்.

தலைவன் தன் வினையின் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்தால் தலைவி மிகவும் வருந்தினாள். தலைவியை ஆற்றியிருக்கும்படி கூறிய தோழி. நீ ஆற்றாது வருந்தினால் என் கடமை எவ்வாறு ஆற்ற இயலும். நீ உயிர் விடுவதற்கு என் உடம்பை விட்டு உயிர் சென்றுவிடும் போலிருக்கின்றது என்று தோழி தன் தகவலை தலைவியை நோக்கி உரைக்கின்றாள்.

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடுவதற்காகச் சென்றான். தலைவன் பிரிவை அவளால் தாங்கிக் கொள்ள இயலாமல் பெரிதும் வருந்தினாள். அது கண்ட தோழி தமக்கு வாய்த்த செல்வம் அதிக அளவுக்கு தேவைப்படும் என்பதற்காகவும், நீ மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைத்து இருக்க வேண்டும். பகைவரே உங்களின் செல்வத்தைப் பார்த்து தலை நாணி இருப்பார்கள். மலை பல கடந்து சென்றார் தலைவர். அவர் விரைந்து வருவார். வருத்தப்படாதே எனத் தோழி தன் தகவலை தலைவியிடம் உணர்த்துகிறாள்.

தலைவன் தலைவியைப் பிரிந்துப் பொருள் தேடச் சென்ற தலைவனை தோழி அவளை ஆற்றுவிக்கும் பொருட்டு அவனைப் பற்றி பழித்துப் பேசினாள். அதனைப் பொறுக்காத தலைவி தலைவனைப்

பற்றி நற்பண்புகளை எடுத்துக் கூறி தோழி தலைவி இடத்தில் ஆற்றுப்படுத்தினாள்.

**“முயற்சிக் காலத்து, அதிர்பட நாடிப்,**

**புணர்த்தல் ஆற்றலும் அவன்வயி னான”**[10]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தோழி தன் முயற்சியால் தலைவியை மகிழச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் தலைவியை தலைவனோடு சேர்த்து வைத்தல்

நல்ல நெற்றியையுடைய தலைவியே! இக்கார் காலத்தில் தோன்றிய கரிய மேகம் சூழ்வதால் மழை பொழியப் போகின்றது. இந்த மழையால் முல்லைப்பூ அரும்புகளைத் தோற்றுவிக்கின்றது. கார்ப்பருவத்தில் நமக்கு இனிமையைத் தரவல்லது. நம் தலைவர் இப்பொழுதே காண வருவார். இனி பசலை நோய் நம்மை என்ன செய்ய முடியும். எனவே நீ துன்பம் அடையாமல் இருப்பாயாக என்று திணைமொழி ஐம்பது என்னும் பாடலில் உள்ள தோழி தலைவிக்கு இயற்கையின் தன்மையை உணர்த்த முயலுகிறாள்.

**“மென்முலைமேல் ஊர்ந்த பசலை மற்(று) என்னாங்கொல்**

**நன்னுதல் மாதராய்! ஈதோ நமர் வருவர்**

**பலநிற முல்லை அரும்பப் பருவம் செய்(து)**

**இன்னிறம் கொண்ட(து) இக்கார்”**[11]

தலைவன் தலைவியை பிரிந்து கார்காலத்தில் வருவேன் எனக் கூறிச் சென்றான். தலைவன் வரததால் தலைவி மிகவும் வருந்தினாள். அதைக் கண்ட தோழி தலைவன் வரும் தகவலை அறிந்து கூறி தலைவியை கவலையடையாமல் இருப்பாயாக என்று ஆற்றுவித்தாள்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். இளவேனிற் காலத்தில் திரும்பி வருவேன் எனக் கூறிச் சென்றான். இளவேனிற் காலம் அண்மையில் வரவிருக்கிறது. தலைவியானவள் அதை அறிந்து தலைவர் வருவாரோ, வர இயலாமல் போய்விடுமோ என அவளிடம் அச்சம் இருந்தது. தோழி தலைவி இடத்தில் நீ எதற்கும் கலங்க வேண்டாம். விரைவாக வந்து விடுவார் எனத் தகவலை அறிவித்து தோழி தலைவியை ஆற்றுவித்தாள்.

தலைவன் பொருள் காரணமாக தலைவியை விட்டுப் பிரிந்து சென்றதால் வருந்தும் தலைவியை கண்ட தோழி நம் தலைவர் மிக கடுமையான காட்டின் வழியாகச் சென்றாலும் இயல்பான காட்சிகள் பல அவர் கண்முன் தோன்றும். அதை காணும் தலைவன் மேற் செல்லாது திரும்பி வருவான் எனத் தோழி தலைவியிடம் பரிமாறியது.

### 4.1.2 தோழி தலைவன் தகவலை அறிவித்தது

தலைவன் ஒரு செய்தியை தலைவிக்கு நேரடியாகக் கூற இயலாமல் தோழியின் மூலம் அச்செய்தியை அறிவிக்கச் செய்வான். சங்கத்தொகை அகநூல்களில் தலைவன் தோழி எவ்வாறு தகவலைப் பரிமாறுகின்றனர். ஐங்குறுநூற்றில் தலைவன் தோழி மிக அதிகமாக உரையாடுகின்றனர். அடுத்ததாக குறுந்தொகையிலும் அதற்கு அடுத்த படியாக அகநானூற்றிலும், அடுத்தாற்போல் கலித்தொகை மற்றும் அகநானூற்றிலும் உரையாடுவதை தெலிவாகின்றன. சங்கத் தொகை நூல்களில் எவ்வாறு தலைவன் தோழி தகவலை பரிமாறுகிறார்கள் என்று ஆராயப்படுகின்றன.

“புலால் நாற்றத்தினை அகற்றும் பொருட்டு நறுமணமிக்க மலர்கள் மலர்ந்து புன்னை மரங்கள் மீது காணப்படுகின்றன.

நிலவொளியையும் வெல்லும் படியான வெண்மணல் பரந்த இக்கடற்கரைச் சோலையில் இரவு நேரத்தில் அதனுள் உண்டாகும் தலைவியின் சுழற்சியினை விலக்கும் பொருட்டு வாராதிருப்பாயாக. அதை நீக்கிப் பகல் நேரத்தில் வருவாராயின் மேகம் போன்ற நீரினையும் வெண்மையான அலைகளை உடையன. இக்கடற்கரையின் பக்கங்களிலெல்லாம் மிகுதியானப் பழிச் சொற்கள் எழுகின்றது.''[12] இவ்வாறு இரண்டு குறிகளையும் விலக்கி விரைவாக வரைந்து கொள்ளும்படி திணைமாலை நூற்றைம்பதில் தோழி தலைவனை வேண்டினாள் என்பதை உணரமுடிகின்றது.

``இது தலைமகன் இரவுப் பொழுதில் பாதையில் கடுமை கூறி இரவுக் குறியை தடுத்தான்''[13]. பின் தலைவியை விரைந்து மணம் புரிந்து கொள்ளும்படி நம்பியகப்பொருளில் தோழி தலைவனிடத்தில் இக்கருத்தையே அறிவித்தாள்.

தலைவன் ஒரு பரத்தையின்பால் அன்பு கொண்டிருந்தான். அப்பரத்தை அவன்பால் ஊடினாள். தனக்கு வாய்ப்பாகக் கொண்டு தலைவியின் ஊடலைத் தீர்க்க முயன்றான். அப்போது தலைவியின் ஊடலைத் தீர்க்க முயன்ற தலைவனுக்கு தோழி அழகிய மா இழைப் போன்று விளங்ககூடிய பரத்தையின் மேனியைக் கொண்ட எம் தோழியாகிய பரத்தையின் துயரைக் கண்டோம் என்று தலைவனிடம் வாயில் மறுக்கிறாள்.

தலைவியை இயற்கைப் புணர்ச்சியின் காரணமாக தலைவன் கூடினான். தோழியின் துணையுடன் மீண்டும் அவளை புணர விரும்பினான். அவனுக்கு விடை கூறும் பொருட்டுத் தோழி தலைவி மிகவும் இளமையானவள். அவள் உன்னை வருத்தும் பருவமுடையவள்

அல்லல் என்றாள். வயதில் இளையளே எனினும் எனக்கு உய்த்தற்கு உரிய துயரை தருபவள் என்று தலைவன் தோழி இடத்தில் அறிவித்தான்.

தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேடப் பிரிய வேண்டும் எனும் எண்ணம் வந்தது. அதை தலைவியிடத்தில் நேரடியாகக் கூற இயலாமல் தோழியிடம் சென்று அறிவிக்குமாறு கூறினான். தோழி பெரிய தோள்களை உடைய தலைவி உன்னைப் பிரிவதற்கு உடன்படாமல் உன்னைத் தடுப்பாள். இந்நேரத்தில் இவள் துன்புற்று அழுமாறுப் பிரிந்து செல்வதைத் தவிர்ப்பாயாக என்று தோழி தலைவனிடம் பிரிவுநிலையை விளக்குகிறாள்.

தலைவன் தலைவியை வரைந்து கொள்ளாமல் காலம் தாழ்த்தினான். ஒரு நாள் தலைவன் தோழியைக் காண வந்தான். அப்பொழுது தோழி தலைவனிடத்தில் தலைவியின் மேனி பசலையுற்று இருக்கின்றது. எனவே களவினை நீடிக்காமல் இருப்பதே நல்லது எனத் தோழி தலைவன் இடத்தில் அறிவித்தாள்.

**“கடுகி அதர் அலைக்கும் கல்சூழ் பதுக்கை**
**விடுவில் எயினர்தம் வீளை ஒத்(து) ஓடும்**
**நெடுவிடை அத்தம் செலவு உரைப்பக் கேட்டே**
**வடுவிடை மெல்கின கண்”**[14]

என்ற கைந்நிலை பாடலில், விரைந்து வந்து பொருளைப் பறிக்கின்ற ஆறலைக் கள்வர்கள் வாழும் பகுதியில் அதிகமாக பருக்கை கற்கள் காணப்படுகின்றன. கற்பாறை நடுவில் அம்புகளை எய்து அதன் மூலம் ஒலி எழுப்புவார்கள். அதைக் கண்டு காட்டு எருமைகள் அஞ்சி ஓடும். இத்தகைய இயல்புடைய பாலை நில வழியில் செல்கின்றாய் என்று

தலைவி கேட்டாள். அவள் நெஞ்சு பிளப்பது போல் வேதனை அடையும் என்று தோழி தலைவியின் நிலை எடுத்து தலைவனிடத்தில் தெளிவுபடுத்தினாள்.

தலைவன் தோழியிடம் பூவைக் கொடுக்கின்றான். அப்பூவை வாங்க மறுத்த தோழி தலைவன் இடத்தில் தெய்வத்திற்கு அணிவிக்கக்கூடிய மலரை எதற்காகக் கொடுக்கின்றாய். இந்த மலரை பார்த்தால் தலைவியின் தாய் வெறியாட்டு நிகழ்த்துவாள். அது மட்டுமல்லாமல் தலைவி இந்த பூவைப் பார்த்தால் மிகவும் துன்புறுவாள். இப்பூ எனக்கு வேண்டாம் என்று குறுந்தொகையில் உள்ள தலைவனிடம் மறுத்து உரைக்கப்படுகிறது.

இரவில் பலரறிய மழை பெய்கிறது. பகலில் அந்த நீர் அருவியாய் விழுவது போன்று, உன் வருகையால் அலர் உண்டாயிற்று. உடம்பு பற்றிய காமம், காலத்தாலும், இடத்தாலும், இடையீடு ஏற்பட்டாலும் உயிரோடு அழியாது. இது தொடர்ந்து கொண்டுதான் இருக்கும். இரவுக்குறி வாய்க்கப்பட்டமையால் ஒரு காலம் நீங்கினாலும் யாம் உன் மேல் வைத்திருக்கும் நட்பு குறையும் என்று தலைவனிடம் தோழி நம்பிக்கையின்மையை உணர வைக்கிறாள்.

இருண்ட இருளில் தாவும் ஆண் குரங்கு பாறைகளின் மேல் பட்டு இறந்து போகும். தன் கணவனால் விருப்பப்பட்ட பெண் குரங்கு தன் குட்டிகளை வேறு இடத்தில் சேர்த்துவிடும். பின்பு அதுவும் குதித்து இறந்துபோகும். இத்தகைய மலைச் சாரலையுடைய நாட்டின் தலைவனே. இந்த இரவு நேரத்தில் என்னைக் காண வருவதை தவிர்ப்பாயாக அங்ஙனம் நீ வரின் உனக்குத் தீமை வரும் என எண்ணி

வருந்துவோம். ஆகவே தீங்கு இல்லாமல் வாழ்வாயாக என்று தோழி தலைவன் தன் அச்சத்தை வெளிப்படுத்துகிறாள்.

கார்காலத்தில் வருவதாகச் சொல்லி பிரிந்த தலைவன் வரவில்லை. தலைவன் வராமையால் அவனுடன் புதுப் புனல் ஆடுதலும், அருவியில் மலர்களை புனைதலும் இல்லாமல் கலங்கினாள். அதைக் கண்ட தோழி தலைவன் இடத்தில் சென்று நீ தலைவியை விரைந்து திருமணம் செய்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் அவள் தனிமைத் துயரில் இறந்துவிடுவாள் எனத் தோழி கூறி வருந்தினாள்.

அழகிய தன்மையுடைய பொய்கை போலப் பலர்க்கும் பயன்படும் தலைவன். நெடுநேரம் நீரில் பரத்தையோடு விளையாடினான். தலைவியைக் காண தோழியின் உதவியை நாடிய தலைவனை தோழி நீ பரத்தையோடு நீராடியது எனக்குத் தெரியாதா என்று உரைத்தாள். அச்சம் செய்யும் பாம்புகள் திரியும் தெருவில் எங்களை விட்டுப் பிரிவாயின் எங்களை பிறந்த வீட்டிற்கு அழைத்துச் சென்று வருவாயாக என்று தோழி தலைவன் இடத்தில் கூறினாள்.

“தலைமகன் தலைமகளை ஒரு வழிக் கூடியிருந்து மகிழ்ந்தான். பின் தலைவியைக் காணாததால் தோழியின் உதவியை நாடினான். தோழி இப்போது தான் தலைவியின் அருமை உனக்குத் தெரிகிறதா என்று கேட்டாள்”.[15]

தலைவன் தலைவியை மணம் செய்து கொள்ளாமல் களவிலேயே நாட்கள் கழிந்தன. தலைவன் இரவு நேரத்தில் தலைவியைக் காண வந்து கண்டு மீளும் போது தோழி ஒரு நாள் எதிர்ப்பட்டு நீ இனி இரவில் வராதே! யாம் நாளை தினைப்புனம் காக்க

பகலில் வருவோம். நீவிர் பகலில் வருக எனத் தோழித் தலைவன் இடத்தில் அறிவித்தாள்.

தலைவன் பொருள் தேடுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரியக் கருதினான். அது கண்ட தோழி தலைவன் இடத்தில் சென்று நீ பொருளீட்ட கருதி கடுஞ்சுரத்தின் வழியாகச் செல்லும் மொழியினைக் கேட்டாள் தலைவி. கேட்ட அளவிலே அவள் கண்கள் நீர் சொரிந்தன. நீவிர் பிரிந்து சென்றால் அவள் நிலை என்னாகுமோ? பிரியக் கருத வேண்டாம் எனக் கூறி தலைவனைத் தவிர்க்கும் படி புரிய வைக்கிறாள்.

தலைவன் தலைவியை மணம் செய்து கொள்ளாமல் களவொழுக்கத்தையே விரும்புகின்றான். ஒரு நாள் தோழி தலைவனைப் பார்த்துப் பகற்குறியையும், இரவுக்குறியையும் தவிர்க்க வேண்டும். ஏன் என்று அதற்குரிய காரணங்களைக் கூறி தலைவியை விரைவில் மணம் செய்து கொள்ளும்படிக் கூறினாள்.

தலைவன் பொருள் தேடச் செல்வதற்காகத் தலைவியை விட்டுப் பிரிய நினைத்தான். அதை தோழி இடத்தில் நீ தலைவிக்குக் கூறி நான் வரும்வரை நன்றாகப் பாதுகாத்துக்கொள். ஆனால் தோழியோ மறுத்துக் கூறினாள். அவள் மிகவும் துன்பப்படுவாள். எனவே தலைவா! நீ அவளிடத்தில் கூறி விடைப்பெற்றுச் செல் என்று தலைவன் இடத்தில் தோழி கூறினாள்.

தலைவன் பொருள் தேடுவதற்காகத் தலைவியைப் பிரிய இருக்கிறேன் என்றான். தோழி தலைவியின் நலன்களை நன்றாக அறிந்து வைத்திருப்பவள். தலைவியை விட்டு நீ சென்றாள் உயிருடன்

இருப்பது மிகவும் அரிது. நீ செல்வதை தவிர்ப்பாயாக! என்று தோழி தலைவனை நிலைகுலையச் செய்கின்றாள்.

தலைவன் பொருள் காரணமாகப் பிரிந்துச் செல்ல இருப்பதைத் தோழியிடம் கூறினான். நீ பொருள் தேடச் செல்ல நினைக்கும் காடு மிகவும் வெம்மை சுரந்த கொடிய நிலமாகும். நீ சென்றால் இந்த இளமைக்காலம் வெகு விரைவாக முடிந்துவிடும். தலைவி உன்னைப் பிரிந்து உயிரோடு இருப்பது அரிது. வாழ்வே சில காலம் தான் என்று தலைவனுக்குத் தோழி நிலையாமை குறித்து விளக்குகிறாள்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் பிரிவு குறித்துத் தோழியிடம் கூறினான். தோழித் தலைவனிடம் நீ பிரிந்தால் பெருமையற்றவர் தொடர்பு போல் உன்னை அலர்தூற்றுவர். தலைவி பிரிந்த நிலையில் உடல் தளர்ந்து அமைதியின்றிக் காணப்படுவாள். நீ செல்வதைத் தவிர்க்குமாறுத் தோழி தலைவனிடத்தில் எடுத்துரைக்கிறாள்.

தலைவனிடத்தில் தோழி அவனைத் தலைவி இடத்திலும் நிறுத்தும் நிலையாகவும், உண்மையைக் கூறலும், பொய் மொழிகளைக் கலந்துக் கூறலும், நயமான சொற்களைக் கூறுதலும் இவ்வாறு பல வகையான பேச்சில் தோழி உரையாடும் எதையும் படைத்துச் சொல்லும் திறமை உடையவள் என்று தொல்காப்பியம் தோழியின் திறத்தை தொடர்புப்படுத்துகிறாள்.

> **“இரந்துக் குறையுற்ற கிழவனைத் தோழி,**
> **நிரம்ப நீக்கி நிறுத்தல் அன்றியும்,**
> **...............................................**
> **நல் வகையுடைய நயத்தின் கூறியும்**
> **பல்வகையானும் படைக்கவும் பெறுமே”**[16]

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து போவதைத் தோழி அறிந்தாள். நீவிர் பிரிந்து போவது உமக்கு மகிழ்ச்சியைத் தருவதாக உள்ளது. இப்பிரிதலைக் கேட்ட உடன் இவளுக்கு பேரழிவு தந்தது. உனக்கு விருப்பமானதை செய்வாயாக என்று கூறினாள்.

தலைவன் தலைவி இருவருக்கும் திருமணம் முடிந்து ஒரு நாள் தோழி தலைவன் இல்லத்திற்குச் சென்றாள். அப்போது தலைவன் பிரிவுக் காலத்தில் தலைவியை நன்கு காத்தாய் என்று கூறினான். யான் ஆற்றுவித்தது ஒன்றுமில்லை என்று பாதுகாப்பின் தன்மையை உயர்த்தி கூறுவதாக வெளிப்படுத்துகின்றது.

### 4.1.3 தலைவன் தலைவிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவிக்குத் துன்பம் வரும் காலங்களில் தன் கவலையைத் தீர்க்கும் பொருட்டு தலைவனின் உதவியை நாடுவாள். தலைவன் தலைவி இருவருக்கும் இடையில் தன் கருத்துக்களை அறிவிப்பது மூலம் தகவல் பரிமாறப்படுகின்றது. இவ்வாறு ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டுக் கருத்துக்களை அறிவிப்பது மூலம் தகவல் பரிமாறப்படுகிறது. இவ்வாறு ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு கருத்துக்களைப் பரிமாறுவதன் மூலம் தலைவனுக்கும் தலைவிக்கும் நெருக்கமான அன்பு வெளிப்படுகிறது. அங்கு தொடர்பு இல்லையென்றால் வாய் இருந்தும் ஊமையாகிவிடும். சிறந்த தகவலை ஒருவருக்கொருவர் பரிமாறுவதன் மூலம் தகவல் சென்றடைகிறது. சங்கத் தொகை நூல்களில் தலைவன் தலைவி கூற்று மிக அதிகமாக ஐங்குறுநூற்றிலும் அடுத்து கலித்தொகையிலும், அகநானூறு,

குறுந்தொகை மற்றும் நற்றிணையிலும் தலைவன் தலைவி எவ்வாறு உரையாடினார்கள் என்பது ஆராயப்படுகின்றன.

தலைவா! நான் உன்னை தழுவி இருந்தேன். நீ சற்று அகன்றுவிட்டாய். அந்த இடைவெளியில் என்னைப் பசலை பற்றி உடல் மெலிந்தேன். இப்போது ஏன் வந்தாய். மீண்டும் என்னை பிரிந்து செல்வதற்காகவா என்று தலைவி தலைவனிடம் கேட்பது போல் சங்கப் பாடல்கள் அமைந்துள்ளன.

**“புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்**

**அள்ளிக்கொள் வற்றே பசப்பு”**[17]

சிறிய வரிசையாய் அமைந்த பற்களையும் அழகிய சொற்களையும் உடைய தலைவியே! நாம் விரும்பிச் செல்கின்ற வழியில் கடிமரம் நுணா மரத்தோடு சேர்ந்து மலர்ந்து காணப்படுகின்றதைக் காண்பாய். பெரிய இறகுகளையுடைய வண்டினங்கள் பாலைப் பண்ணைப் பாடப் பெறும். நம்மை அன்புடன் வரவேற்பதைக் காண்பாயாக.[18] உடன்போக்கு செல்லும் தலைவியை அழைத்துச் செல்லும் பொழுது தலைவன் வெம்மை தெரியாமல் இருப்பதற்காகத் தலைவியிடம் உரையாடிச் சென்றான்.

பரத்தையரோடு பொழுதுபோக்கி நெடிது இன்பம் துய்த்த தலைவன் தலைவி இடத்தில் வந்தான். அதற்குத் தலைவி என் இளமை நலம் குறைந்தமையால் நீ பரத்தையரை நாடிச் சென்றாயோ என மனம் வெறுத்து தலைவி ஐங்குறுநூற்றில் உள்ள தலைவனிடம் கேள்விகளைத் தொடுக்கின்றாள்.

தலைவன் பொருளீட்டக் கருதித் தலைவியைப் பிரிந்து வேற்று நாடு சென்றான். அப்பொழுது தான் பிரிந்த பொழுது கடினமாக

தோன்றியது. காடு திரும்பும் பொழுது எளியதாக இருந்தது என்று தலைவன் தலைவியிடம் கூறினான்.

தலைவன் கார்காலத்தில் பிரிந்து செல்வானோ என வருந்தினாள். அவள் ஐயத்தைப் போக்குவதற்காக மேகம் வானவில்லைத் தோற்றுவிக்கின்றது. மழை பொழியப் போகிறது. வேந்தன் என்னைத் தூதாக விடுக்கும் தொழிலைக் கைவிட்டான். அதன் விளைவாக இனி யான் உன்னைப் பேணும் கடமை மேற்கொண்டேன்.

தலைவன் பொருள் ஈட்டுவதற்காக தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். குறித்து சென்ற பருவம் வருவதற்கு முன்பே வந்தான். வரும் வழியில் தலைவியின் உரு வெளித்தோற்றம் காணப்பட்டது. அவள் இல்லம் புகுந்ததும் தலைவியிடம் கூறினான்.

திருக்குற்றாலக் குறவஞ்சியில், "குளிர்ச்சி வாய்ந்த இளம் பிறையை சூடிய திருகுற்றாலநாதர் எழுந்தருளியிருக்கின்ற திருநாட்டின் தலைவன் தலைவியைக் கண்டான். இருவரும் ஒருவரையொருவர் கண்டபொழுது கடலாக அன்பு பெருக்கெடுத்தது. கடலுக்குள் கரையானது இடைநின்று தடுப்பதை போல இடையில் தெருவானது அவர்களைத் தடுத்தது. தலைவியைக் கண்ட உடன் தலைவன் தமயந்திபால் தூது சென்ற நளன் போல் மயக்கம் கொண்டான்.[19] தலைவியும் கன்னிமாடத்திருந்த அழகுள்ள தமயந்தியின் தன்மைபோல் காதல் மயக்கமுடையவளானாள்.

தலைவியின் காமநோயைப் பிறர் அறியாமல் மறைக்கவும் முடியவில்லை. தலைவனுக்கு எடுத்துக் கூறலாம் என்றாள் வெட்கம் தடுக்கிறது. தலைவனிடம் வெட்கம் அடையாமல் தலைவி எடுத்துக் கூறுவதாக திருக்குறளில் காட்டப்படுகின்றது.

**“கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு**

**உரைத்தலும் நாணும் தரும்”[20]**

கலித்தொகையில் தலைவன் பரத்தையின் இல்லத்திலிருந்து தலைவியைக் காண வந்தான். அவனைக் கண்டு நீ காலம் தாழ்த்தி வந்தமைக்கு காரணம் என்ன என்று வினவினாள். அவன் நான் புதுப்புனல் விளையாடியதனால் காலம் ஆகிவிட்டது என்றான். அதற்கு தலைவி நீ ஆடிய புதுப்புனல் எனக்குத் தெரியும் என்று நெருங்கித் தலைவன் இடத்தில் அறிவித்தாள்.

அருமை செய்து விரும்பிய தலைவன் வந்ததனால் தலைவி எள்ளி நகையாடினாள். தலைவன் அவளோடு மாறுபட்டுக் கூறி நகையாடினான். கூடுவதற்கு பேசி உடன்படவைத்தான். தலைவன் உயர்மொழிக்குத் தலைவி உறழ்ந்து கூறியவை.

தலைவன் பரத்தை இல்லத்திலிருந்து தன் இல்லத்திற்கு வந்தான். அதனை அறிந்த தலைவி அவனை ஏற்றுக்கொள்ளாமல் மறுத்தாள். தலைவன் தலைவியின் ஆற்றாமையால் தலைவியை ஊடினான். தலைவி நீ என் தங்கையராக பரத்தை இடத்து ஊடல் கொண்டது எனக்கு அறியாது என்று நினைத்திருக்கின்றாய் என வினவுகின்றாள்.

தலைவன் தன் அன்பின் காரணமாக தலைவியின் ஆற்றாமையால் உள்ளே புகுந்தான். தலைவியை நெருங்கக் கூட நினைத்தான். அப்பொழுது தலைவி அவனுடன் ஊடிச் சில சொற்கள் கூறினாள். அவன் தன் ஆற்றாமையால் தவறை மறந்து பின் தலைவியின் ஊடல் தீர்த்தான். தலைவன் தலைவி மேல் இருக்கும்

அன்பு மிகுதியால் குறையை மறைத்து தகவலைக் கூறி தலைவியிடம் சேர்ந்தான்.

“திருக்குற்றாலக் குறவஞ்சியில், ஆண் தன்மையுடைவனாக இருக்கும் தலைவன் தலைவியைக் காணாமல் தேடினான். பெண்ணாசை தாங்க முடியாமல் போய்விட்டான். பின் தலைவியைத் தேடித் திருக்குற்றாலநாதர் எழுந்தருளிய இடத்தில் தேவர்களும் வலம் வந்து சுற்றுவார்கள். இந்தத் திருக்குற்றால நகரத்தினது பெருமைமிக்கத் தெருவின் இடத்தில் நடந்து சென்று கொண்டிருந்தான்.”[21] அப்பொழுது காணாமல் போன பொருளைக் கண்டதுபோல் தன் தலைவியைக் கண்டான். பின் தலைவியிடத்தில் அருகில் வந்து உரையாடினான்.

தலைவன் களவிலே இரவு நேரத்தில் தலைவியைக் காண வந்து கொண்டே இருந்தான். மணந்துக் கொள்ளாமல் காலம் தாழ்த்தினான். அதனையறிந்த தலைவி களவொழுக்கத்தில் நீடித்துக் கொண்டு இருந்தால் புணர்ச்சிக் காலத்தைவிட நீண்டதான பிரிவுக் காலம் தான் ஏற்படும். விரைவில் மணம் புரிய வேண்டும் என அகநானூற்றின் தலைவி தலைவன் இடத்தில் அறிவித்தாள்.

நம்பியகப்பொருளில், தலைவன் தலைவியின் ஒவ்வொரு அங்கத்தையும் பாராட்டுகிறான். தலைவியின் அழகு நலத்தையும், பாதம் முதலாகக் கொண்டு தலைமுடி வரை மிகவும் போற்றுகின்றான்.

அயல் வீட்டார் நம்மைப் பொதுவாகப் பார்ப்பதுபோல் பார்க்கும் தன்மை நம் உள்ளத்தில் அன்பை மறைத்து வைத்திருக்கும் நம்மிடம் உண்டு எனத் திருக்குறளின் தலைவன் தலைவியிடம் கூறினான்.

**“ஏதிலார் போல பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே உள”**[22]

பகற்நேரத்தில் தலைவன் தலைவியைக் காண வருகின்றான். அப்பொழுது தலைவி என்னுடைய வளையல்கள் கழன்று நெகிழ்ப்பெற்றிருக்கின்றது. இதைக் கண்டு என் தாய் இச்செறிக்கிறாள். நீ விரைந்து என்னை வரைந்துக் கொள்ள வேண்டும் என்று நற்றிணையின் தலைவி தலைவனிடம் வேண்டுகோள் வைக்கின்றாள்.

**"குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒரு கண்**

**சிறக்கணித்தாள் போல நகும்"**[23]

அவள் என்னை நேருக்கு நேர் பார்ப்பதில்லை. ஏன் என்று கேட்டால் இமைகளைத் தாழ்த்தி, சிறிதளவு மட்டுமே பார்த்துச் சிரிக்கின்றாள் என்று திருக்குறளில் தலைவன் தலைவியின் நிகழ்வை எடுத்துக் கூறினான்.

பத்துப்பாட்டில், தலைவியைத் தலைவன் அணுகிய நிலையில் அவளுக்கு நாணமும், அச்சமும் அதிகமாக இருந்தது. விரைந்து தலைவனிடத்தில் விலக முற்பட்டாள். அப்போது அவன் விடாமல் தலைவியை இருக்க அணைத்துக் கொண்டான்.[24] பின் அவள் அழகு நலத்தைப் பாராட்டிக் கொண்டிருந்தான்.

மென்மையான இயல்புடைய பெண்ணே உன்னுடைய நல்ல உள்ளம் தனிமையில் வருந்தும் படியாக விட்டுச்சென்றேனே. நான் பிரிந்த இடத்தில் உயிருடன் இருந்தால் நான் செல்லுவது உற்ற தகுதியைத் தருவதாகும். அவ்வாறு உன்னை விட்டுப் பிரிந்து நான் உயிருடன் வாழும் நாள் ஒவ்வொன்றும் என்னை நீங்கி இரவலர் வாராது. நீ இல்லாதது பல நாட்கள் துன்பமே தருவதாகும் என்று குறுந்தொகையில் தலைவி இடத்தில் தன் உணர்வை புரிய வைக்கிறான்.

### 4.1.4 தலைவி, பாணன் இடையேத் தகவல் தொடர்பு

பாணன் என்பவன் யாழ் வாசிப்பதில் சிறந்தவன். அவன் தலைவனுக்காகத் தலைவியிடம் தொடர்பாளராக வருகின்றான். தலைவனைப் பற்றி நற்பண்புகளை தலைவியிடம் கூறுகின்றான். தலைவி அதை மறுத்துக் கூறுகிறாள். சங்கத்தொகை நூல்களில் நற்றிணையில் தான் தலைவி பாணன் உரையாடுவது மிக அதிகமாக பாடல்கள் இருக்கின்றது. ஐங்குறுநூற்றிலும், அடுத்ததாக கலித் தொகையிலும், அகநானூறு மற்றும் குறுந்தொகையிலும் ஒரு பாடல் மட்டுமே அமைந்துள்ளது.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில், ‘‘செவ்வழிப் பண்ணைச் சிறப்பாகப் பாடும் யாழினைக் கொண்ட நல் பாணனே! நல்லவை என்று பலரால் ஆராய்ந்து சொல்லப்பட்ட நன்செய் நிலங்கள் மிகுதியாக உள்ள மருதநிலத்திற்குரியத் தலைவனே! என் மகன் ஆனவன் சிறியத் தேரினைத் தன் கைகளால் இழுத்துச் சென்று விளையாடுகிறான். என் மகன் பிறப்பதற்கு முன்னே, என் தங்கையானப் பரத்தையர் இடத்தில் தொடர்பு கொண்டு இருந்தான்’’.[25] எனக்கு தக்க தலைவன் அவன் இல்லை என்று தலைவி பாணனிடம் வாயில் மறுத்துரைக்கிறாள்.

தலைவி தன் மகனை ஈனும் காலத்தில் தலைவன் பரத்தையர் காரணமாகப் பிரிந்தான். தலைவியின் ஊடல் தீர்க்கும் பொருட்டு பாணனை தொடர்பாளராக அனுப்பினான். பாணனிடம் தலைவி தலைவன் இனிமேல் எனக்கு அயலவன் ஆயினான். காதற்பரத்தைதான் அவன் மனைவி என்று இவ்வூரார் அறிந்தன. அதனை மறுத்துப் பேசாதே என பாணனிடம் தன் கருத்தை தெரிவித்தாள்.

தலைவன் பரத்தை வீட்டுக்குச் சென்றான். பின் தன் மனைக்கு திரும்புவதற்காகத் தலைவியின் உடன்பாட்டை தெரிந்து கொள்வதற்காகப் பாணனை அனுப்பினான். அவன் தலைவியிடத்தில் சென்று தலைவனின் நற்பண்புகளை எடுத்துக் கூறி உடன்பட வேண்டினான். தலைவி வெறுத்து நாணமில்லாத தலைவனுக்காக நீ மிக நல்ல நண்பன் என்று கூறுகின்றாய். தலைவன் அழகிய துறைக்குத் தலைவனெனினும் அவன் ஒழுக்கம் மிகவும் கொடிது என வெறுத்து ஐங்குறுநூற்றில் தலைவி பாணனிடம் கூறினாள்.

தலைவன் பரத்தையரோடு வாழ்ந்து மீண்டும் தன் இல்லத்திற்கு வந்தான். மனைவியின் உடன்பட்டு பின் நீங்கினான். அப்போதும் அவன் முன் செய்த தீங்கு மீண்டும் ஏற்பட்டது. அதனால் மெலிவுற்றாள். அதற்கு காரணம் வினவினான் பாணன். தலைவி உன் ஊர்த் தலைவன் தேரினைக் கொண்ட கொங்கனை விரும்பினால் இழந்த நலனை மீட்க முடியுமா என்று தலைவி தன் ஆதங்கத்தை சினந்து கூறினாள்.

தலைவியைக் காணச் சென்றான் பாணன். அவள் பொருட்டு தலைவன் பிரிந்து உறையும் நாட்டிற்குச் தூது செல்ல விரும்பினான். அவன் விருப்பத்தைக் கேட்டத் தலைவி யாம் தங்குவதற்கு அரிய துன்பத்தினை எமக்குச் செய்த பொய் புகழ்வதில் வல்லவரான அவர் போல் நீயும் எம்மை மறவாமல் இருப்பாயாக என்று தலைவி பாணன் இடத்தில் உதாரணம் காட்டுவதாக அமைந்துள்ளது.

ஐந்திணை ஐம்பது என்னும் நூலில், தலைவி பாணன் இடத்தில் இனிய சொற்களையுடைய தன்மையதாய் மழலைச் சொற்கள் பேசுகின்ற எம் புதல்வன் எனக்குத் துணையாக இருப்பதால் வேறு

துணை எனக்கு வேண்டியதில்லை. குளங்கள் நிறைந்த மருதநிலத் தலைவன் நல்ல இயல்புகளை என்னிடம் கூறுவதற்கு என்ன தகுதியைப் பெற்றுள்ளான். தலைவன் செய்தது ஒரு பிழை இல்லை என்றாலும் அவனுடைய செய்கைகள் முழுவதையும் அறிந்துள்ளோம் என்று தொடர்பாளராக வாயில் வேண்டி வந்த பாணனை நோக்கிக் கடிந்துரைக்கிறாள்.

கலித்தொகையில், பாணன் தலைவனுக்காக தலைவி இடத்தில் தூதாக வந்தான். அவன் இடத்தில் தலைவனை நினைத்தாள் என் உள்ளம் சுடுகின்றது என்றாள். பாணன் தலைவனைப் பற்றி நயந்து கூறினான். தலைவி அதை ஏற்றுக் கொள்ளாமல் பரத்தையரைக் குதிரையாக்கிக் கூறினாள்.

தலைவனின் கொடுமை உள்ளம் என்னை மிகவும் சுடுகின்றது. தலைவியிடத்துக் கூட்டம் தவிராத வகையில் பாணன் தூதாக வந்தான். தலைவி தலைவனை ஏற்றுக்கொள்ளவில்லை. தலைவன் பரத்தையரைக் கண்டது எனக்குத் தெரியாது என குறும்பூழ்ப் பறவை எனத் தலைவனைப் பற்றி தலைவி பாணனிடம் உவமைப்படுத்துகிறாள்.

அகநானூற்றில், பாணா! தலைவர் வருவார் என்பதை அறிந்தாயோ! இல்லை காதால் கேட்டாயோ தலைவனைப் பற்றிய செய்தியை நீங்கள் கூறினால் பொன் மிகுந்த பாடலிப்புத்திர நகரத்தை உங்களுக்கு பரிசாகக் கொடுக்கின்றேன். பாணா நீ கூறுவாயாக என்று தலைவி பாணனிடம் அறிவித்தாள்.

திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலில், யாழையுடையப் பாணனே! இங்கு என் மகன் கை சாடையாலும் செவ்வாயின் மழலை மொழிகளாலும் கேட்டு அமைதி அடைகின்றேன். எனக்கு பின்னவளாக

இருக்கக்கூடிய இடத்தில் வாழ்கின்றான் தலைவன். அத்தன்மைக் கொண்ட தலைவனோடு வாழ விரும்பவில்லை.[26] நான் இவ்வாறாகவே இருந்துவிடுகிறேன் என்று தலைவன் பால் வந்த பாணனுக்குத் தலைவி பதிலுரைக்கிறாள்.

தலைவன் பரத்தையர் இடத்தில் சென்று ஒழுகினான். அதை அறிந்த தலைவியின் ஊடலைத் தீர்க்கும் பொருட்டு தலைவன் பாணனை விடுத்தான். பாணன் தலைவி இடத்தில் சென்று தலைவன் மிகவும் நல்லவன் என்று கூறியபோது, அவள் அப்பாணனின் வாய்மொழியை நம்பவில்லை. பரத்தை கூட என் போல் இரக்கத்தக்கவள் ஆவாள். எனக்குத் தலைவன் வேண்டாம் என்று தலைவி பாணன் இடத்தில் கூறியது.

### 4.1.5 தோழிக் குயவனிடம் தகவலைக் கூறுதல்

குயவன் என்பவன் ஊரில் நல்லது கெட்டது ஏதாவது நடந்தது என்றால் அந்த ஊரில் வீடு வீடாகச் சென்று செய்தியை அறிவிப்பான். கிராமப்புறங்களில் இன்றளவும் நடைமுறையில் உள்ளது. அவ்வாறாக அவன் வருகையில் தோழி குயவன் இடத்தில் அறிவித்தது. சங்கத்தொகை நூல்களில் நற்றிணையில் மட்டும் தான் தோழி, குயவன் உரையாடல் அமைந்திருக்கின்றது.

நற்றிணையில், தலைவன் பரத்தையிற் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். தலைவியிடத்துப் பாணனைத் தூதாக தலைவன் அனுப்பினான். தோழி வாயில் மறுக்கின்றாள். அப்போது ஊரில் திருவிழா நடைபெறுவதை தெரிவிக்கும் பொருட்டுக் குயவன் வந்தான். அப்போது தோழி குயவனிடம் இவ்வூரில் உள்ள மகளிர் இடத்தில் பாணனைப் பற்றி பொய் மொழிகளைக் கூறுக என்று அறிவுறுத்தினாள்.

### 4.1.6 தலைவன் தேர்பாகன் இடையே தகவல் தொடர்பு

தலைவன் சென்றவினையை முடித்து வீடு திரும்புகிறான். அப்போது தேரை ஓட்டக் கூடியப் பாகனை நோக்கித் தேரை விரைவாக செலுத்தும்படி அறிவிக்கின்றான். தலைவி என்னை எதிர்நோக்கி காத்திருப்பாள் என்ற செய்தியை தலைவன் தேர்பாகன் இடத்தில் தெரிவித்தல். சங்கத் தொகை அகநூல்களில் தலைவன் தேர்பாகன் உரையாடல் இரண்டு நூல்களில் மட்டுமே உள்ளன. அதிகமான உரையாடல் அகநானூற்றில் மட்டுமே காணப்படுகிறது. அதற்குப்பின் ஐங்குறுநூற்றில் உள்ளது.

**“ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேண் சென்றார்**

**வருநாள் வைத்துஏங்கு பவர்க்கு”**[27]

தன் வினையை முடித்துத் திரும்பும் தலைவன் தேர்பாகன் இடத்தில் என் தலைவியை நெடுந்தூரம் பிரிந்து சென்றதனால் என் தலைவிக்கு ஒருநாள் கழிவது ஏழுநாள் கழிவது போன்றது என்று தலைவன் தேர்பாகனிடம் அன்பின் தொடர்பை உணர்த்தினான்.

வேந்தனுக்கு போர்த்துணைவனாகத் தலைவியைப் பிரிந்து தலைவன் செல்கின்றான். பின் போரில் வென்று மீள்கின்றான். அப்போது தன் தலைவியைக் காணப் பெரிதும் விருப்புற்றுத் தேரை விரைந்து செலுத்துமாறு தேர்பாகனை விரைவுப்படுத்தினான்.

தலைவன் தலைவியை விட்டு வினையின் காரணமாகப் பிரிந்தான். கருதிச்சென்ற வினையை வெற்றியோடு முடித்தான். தலைவன் தான் குறித்து சொல்லிச் சென்றக் கார்ப்பருவத்தில் புறப்பட்டான். வரும் வழியில் இடையில் தலைவியை நினைத்து தேரை

விரைந்து செலுத்துமாறு தேர்பாகன் இடத்தில் தன் வாய்மையைப் புலப்படுத்தினான்.

நம்பியகப் பொருளில், தலைவன் தேர்பாகன் இடத்தில் என் தலைவி மிகவும் வருந்திருப்பாள். என்னைக் காணாமல் உடல் மெலிந்து காணப்படுவாள். வாயிலை நோக்கிக் காத்திருப்பாள். பாகா! உன் வலிமை மிக்க குதிரைத் தேரினை விரைந்து செலுத்துக. இல்லை என்றால் நான் போவதற்குள் என் தலைவி உயிர் தரித்திருக்கமாட்டாள் என்று தலைவன் தேர்பாகனை நோக்கி கூறுவதாக அமைந்துள்ளன.

தலைவன் தலைவியிடம் விடைபெற்றுக் கடமை காரணமாகப் பிரிந்து செல்கின்றான். பின் கடமை முடிந்து திரும்புகையில் தேர்பாகனிடம் என் தலைவி அழகானவள். என்னைக் காணாமல் உடல் மெலிந்து இருப்பாள். அவள் இந்நோயிலிருந்து விடுதலை பெறவேண்டும் என்பதற்காக நீ விரைந்து உன் தேரைச் செலுத்து என்று கட்டளையிடுவது போல் உரையாடினான்.

பாகனே! என் தலைவி ஒவ்வொரு மாலைப் பொழுதையும் எண்ணி, என் பிரிவினால் மிகவும் வருந்திக் காணப்படுவாள். வரும் பொழுதையாவது தலைவி என்னைக் கண்டு மகிழ வேண்டும். பறவை போன்ற உன் குதிரைத் தோழனை விரைந்து செலுத்துக என்று தலைவன் தேர்பாகன் இடத்தில் ஆணையிட்டான்.

**“கருவி வானம் பெயல் தொடங்கின்றே**
**பெருவிறற் காதலி கருதும் பொழுதே**
**விரி உளை நன்மாப் பூட்டி,**
**பருவரல் தீர, கடவுமதி தேரே!”**[28]

பாகா!, வானம் இடி மின்னலோடு மழை பொழியத் தொடங்கிவிட்டது. என் காதலி என்னை நினைத்து வருந்துவது இதனை காரணமாகவே வைத்து அவள் துயரத்தைப் போக்க வேண்டும். பாகா, நல்லக் குதிரை வண்டிக்குப் பொருத்தி விரைந்து வேகமாக ஓட்டிச்செல் என்று தலைவன் பாகன் இடத்தில் அறிவித்தான்.

### 4.1.7 செவிலி தோழிக்கிடையேத் தகவல்தொடர்பு

தலைவியின் பசலை நோய் அறிந்த செவிலி வெறியாட்டு நிகழ்த்த எண்ணினாள். அப்போது தோழி தலைவியின் உண்மையான காரணத்தைக் கூறி செவிலி இடத்தில் அறத்தோடு நிற்பாள். சங்கத்தொகைநூல்களில் அகத்தில் மூன்று நூல்களில் செவிலி தோழி உரையாடல் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. அதிக எண்ணிக்கை அளவிலான ஐங்குறுநூற்றிலும், அதற்குப் பின் குறுந்தொகையிலும், குறைவான பாடல்கள் அகநானூற்றிலும் காணப்படுகின்றன. செவிலி தோழி எவ்வாறு தகவலைப் பரிமாறுகிறார்கள்.

திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலில், பலா மரங்கள் மிகுந்த வளம் நிறைந்த மலையின் மேல் தினைப்புனம் காக்கச் சென்றேன். அங்குள்ளப் பரண் மேல் அமர்ந்து கொண்டிருந்தோம். அப்பொழுது மதம் பிடித்த யானை ஒன்று எங்களைத் துரத்தியதைக் கண்டு காளை போன்ற ஒருவன் எங்களைக் காப்பாற்றினான். அவ்வாறு காப்பாற்றிய வீரனைத் தவிர, தலைவி வேறு தோள்களைத் தீண்ட மாட்டாள் எனத் தோழி அறத்தோடு நின்று செவிலியிடம் இயம்பினாள்.

தலைவியின் உடல் பசலை அடைந்து காணப்பட்டது. அதனால் செவிலி கவலை கொண்டாள். தோழி அறத்தோடு நின்று களவினை வெளிப்படுத்திய பிறகும் தலைவன் திருமணம் செய்துக் கொள்ள

முற்படவில்லை. ஒரு வேளை அவன் தன் மகளைத் தவிர வேறு ஒரு குலப்பெண்ணை மணப்பானோ! என ஐயுற்றாள். அதற்குத் தோழி அவன் விருப்பமடைந்த என் தோள்களைப் பிரிந்தால் அவனுக்கு என்ன பயன்தான் இருக்கப் போகின்றது என்று செவிலியிடம் எடுத்துரைத்தாள்.

தலைவியின் கூந்தலை என்றுமில்லாத அளவு வண்டுகள் மொய்த்தபடி இருந்தது. அதனால் செவிலி ஐயுற்றாள். இதன் காரணமாக செவிலி தோழி இடத்தில் வினவினாள். இதற்கு முக்கியக்காரணம் தலைவனே எனக் கூறி தோழி அறத்தோடு நின்றாள்.

தலைவி மருதநிலத் தலைவன் மீது அன்பு கொண்டு அவனையே திருமணம் செய்து வைக்க வேண்டும் எனக் கற்புக்கடம் பூண்டிருந்தாள். அதனை அறியாத அயலார் அவளைப் பெண் கேட்டு வந்த நிலையில் தோழி தலைவியின் கற்பைக் காப்பாற்றும் பொருட்டு செவிலியிடம் தகவலை வெளிப்படுத்தனாள்.

குறுந்தொகையில், தலைவியின் உடல் மெலிவிற்குக் காரணம் வேலன் என்று வெறியாட்டு நிகழ்த்த எண்ணினாள். பிறர் அறிந்த ஒன்றை கூறுவதில் வல்லமையுடையது வேலனே என்று செவிலி கேட்கின்றாள். தோழி அறத்தோடு நின்று தலைவியின் மெலிவிற்கு காரணம் வேலனன்று, தலைவனே என்று செவிலிக்குப் புலப்படுத்தினாள்.

கானவர், மரங்களை வெட்டிக் களைகளை நீக்கி அதை விளைநிலமாக மாற்றுவர். தினைவகைகளைப் பயிரிடுவர். அந்த கதிர்களைக் காப்பதற்காக மகளிர் காவல் புரிவர். மரத்தைக் கொன்றுப் பயிர் செய்யத் தெரிந்தவர்க்கு, மகளுக்கு மணம் செய்து வைக்கத் தெரியவில்லை. தலைவியின் உடல் மெலிவு ஏற்பட்டது. இது

வேலனால் நடைப்பெற்றது என வெறியாட்டு நிகழ்த்த முற்பட்ட செவிலிக்கு தோழி அறத்தோடு நின்று தலைவன் தான் காரணம் எனக் கூறித் தடுத்து நிறுத்தினாள்.

திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலில், "மண்ணில் படிந்த குலையினையுடைய வாழை மரத்தில் தேன் தேனெடுப்பது போல் மயக்கமுற்று இருக்கின்றாள் அழகிய தலைவி. தாமரை மலர் போல் உள்ள கண்ணில் நிறைந்துள்ள மருதநிலத் தலைவன் மாலையினைத் தொடுப்பான்"[29] என்று செவிலிக்கு தோழி மணமக்களின் அன்பு நிலையை எடுத்துக் கூறினாள்.

களவின் காரணமாக தலைவன் தலைவியைப் பகற் பொழுதிலும் இரவுப் பொழுதிலும் வந்து மீண்டான். ஒரு நாள் இரவுக்குறியில் தலைவியைக் காண தலைவன் வந்ததை. கண்ட தோழி தலைவன் காதில்படும்படி செவிலி இடத்தில் இக்களவினால் தாய் தலைவியைக் கடிந்துரைக்கும் செய்திகளை அகநானூற்றின் தலைவன் அறியும் பொருட்டு தாய்க்குத் தோழி அறத்தோடு நின்றாள்.

### 4.1.8 பரத்தை தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

பரத்தை தலைவியைப் பழித்துத் தலைவியின் தோழியிடம் கூறுவாள். தலைவிக்கு பரத்தையைக் கண்டால் பிடிக்காது. இவள் கூறுவதுபோல் பரத்தை தோழிக்கு கூறுதல். சங்கத் தொகை அகநூல்களில் பரத்தை தோழி உரையாடுவதாக இரண்டு நூல்களில் காணப்படுகின்றன. இதில் அகநானூற்றில் அதிக இடங்களாக இரண்டு பாடல்களும் மற்றும் கலித்தொகையில் ஒரு பாடலும் உள்ளன.

அகநானூற்றில், தலைவி தன்னைப் பழித்துக் கூறியதைக் கேள்விப்பட்ட பரத்தை தலைவியின் தோழி கேட்குமாறு தலைவியின்

செருக்கை அடக்குவதற்கு நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன் என்று சூளுரைத்தாள் என்னும் தகவலைத் தோழி இடத்தில் கூறுவதாக அமைகிறது.

**"இல்லை தவறு அவர்க்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர் அளிக்கு மாறு"**[30]

தலைவனிடம் தவறு ஒன்றும் இல்லை. மிகவும் அன்பானவர். ஊடல் கொள்வது மேலும் அன்பைப் பெருக்க உதவுகிறது என்று தலைவியிடம் இந்த செய்தி சென்றடைய வேண்டும் என்பதற்காக பரத்தை தோழி இடத்தில் உரைத்தாள்.

தலைவன் தன் மனைவியைப் பெரிதும் விரும்பி அன்பு செலுத்துகின்றான் எனக் கேள்வியுற்றாள். அதனால் பரத்தை நான் தான் மிகவும் அழகில் சிறந்தவள். காம இன்பமளிப்பதில் எனக்கு அவள் ஈடாகமாட்டாள் எனத் தலைவியைப் பழித்து தோழி இடத்தில் அறிவித்தாள்.

### 4.1.9 தலைவன் பரத்தைக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தலைவியை விட்டுப் பரத்தையிடம் வருவான். பரத்தையிடம் இனிமையான சொற்களைப் பேசி இன்பம் துய்த்தபின் பரத்தை தலைவன் இடத்தில் நலமாகப் பேசிக் கவர வைத்தல். எவ்வாறெல்லாம் பரத்தை தலைவனிடம் உரையாடுகிறாள். சங்கத்தொகை நூல்களில் குறுந்தொகையில்தான் அதிகமாகத் தலைவன் பரத்தை உரையாடுகிறார்கள். கலித்தொகை மற்றும் ஐங்குறுநூற்றிலும் தகவலைப் பரிமாறுகிறார்கள்.

**"பெண்இயலார் எல்லாரும் கண்ணில் பொதுஉண்பர்**
**நண்ணேன் பரந்த நின்மார்பு"**[31]

ஆண்தன்மை உடைய அனைவரும் தம் கண்களால் உன்னைக் கண்டு அனுபவிக்கிறார்கள். நீ இன்னும் அழகாக இருப்பதால் நான் தழுவுவேன் என்று திருக்குறளிலுள்ள காதற்பரத்தையைப் பார்த்து தலைவன் அறிவிக்கின்றான். அது போல், கலித்தொகையில், தலைவன் தலைவியை விட்டுப் பரத்தைச் சேரிக்கு வந்தான். அப்போது பரத்தை தன் அன்பு மிகுதியைக் கூறி ஊடினாள். இது கண்ட தலைவன் உன்னைப் பார்த்தது ஓர் ஆண்டு கழிந்தது போல் இருக்கின்றது என்று கூறினான். அதற்கு பரத்தை இனிமேல் ஊடல் தீர்ப்பாயா என்று அறிவித்தாள்.

குன்னூர்க்குக் கிழக்கில் உள்ள கடல் கீழ்கடலைக் குறிப்பதாகும். அங்குள்ள பரத்தையர் அடுத்த மனையாளின் ஆடவரைப் பற்றிக் கொள்வார்கள். தலைவன் அவ்வாறு இருந்தபோதிலும் தலைவியை அழகானவள் என்று வர்ணிப்பான். அதை உணர்ந்த பரத்தை தலைவியைப் பற்றி இல்லாத சொற்களைப் புகுத்துவாள். தலைவன் இடத்தில் மிகவும் பேசிப் பற்றிக் கொள்வாள்.

கண்டும் கேட்கும் உண்டும் முகர்ந்தும் ஒளிபொருந்திய வளையல்கள் அணிந்த உன்னிடத்தில் மட்டுமே உண்டு.[32] என்று திருக்குறளில் உள்ள பரத்தையிடம் தலைவன் வர்ணிப்பான்.

தலைவா! நீ எம்முடன் பொழுதைக் கழிக்க வேண்டும். அவ்வாறு இருந்தால் ஒளியை உடைய இலையைக் கொண்ட வேலைடைய குதிரையை விரைந்து செலுத்துக. அணையை உடைத்துப் பாயும் புதுப்புனலிலே நின்னோடு ஆடுவோம் என்று பரத்தை தலைவன் இடத்தில் கூறியது.

தலைவனோடு தலைவி முன்னதாகப் புனலாடினான். அதைக் கேள்விப்பட்டாள் பரத்தை. அவனுடன் இனி ஆடுவதில்லை என வெறுத்திருந்தாள். தலைவன் பரத்தையை புதுப்புனலாட அழைத்தான். நின் மனைக்குச் செல்வதை தவிர்ப்பாயாக என்று பரத்தை வினவினாள்.

### 4.1.10 செவிலி நற்றாய் இடையேத் தகவல் தொடர்பு

தலைவியின் திருமணத்திற்குப் பிறகு செவிலி தலைவியின் இல்லத்திற்குச் செல்கின்றாள். அங்குத் தலைவி மகிழ்ந்து காணப்பட்டாள். அந்தக் காட்சியைப் பார்த்தச் செவிலி நற்றாயிடம் கூறும் முறைகள்.

குறுந்தொகையில், செவிலி ஒரு நாள் தலைவியின் இல்லத்திற்குச் செல்கின்றாள். அப்போது தலைவி உணவு சமைத்தாள். அந்த உணவினை தலைவன் உண்டு மிகவும் நன்றாக இருக்கின்றது என்று வாழ்த்தினான். இந்தக் காட்சியைக் கண்ட செவிலி தன் இல்லத்திற்குத் திரும்பவும் வந்தாள். தலைவியின் இல்லத்தில் நடந்த நிகழ்ச்சியை நற்றாய் இடத்தில் கூறல்.

### 4.1.11 பாணன் தலைவனுக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவனின் நண்பனாவான் பாங்கன். தலைவன், தலைவி இவ்வளவு நல்லவள். அவளின் ஊர் பற்றியும், தலைவியின் செயல்களையும் அவன் நண்பன் இடத்தில் எடுத்துக் கூறி மகிழ்வான். சங்கத்தொகை நூல்களில் ஒரு நூலில் தான் பாணன் தலைவன் உரையாடல் இருக்கின்றது பாணன் தலைவன் எவ்வாறு உரையாடுகிறார்கள் என்பதை,

**“கடுபுன மருங்கில் கலித்த ஏனற்**
**படுகிளி கடியும் கொடிச்சி கைக்குளிரே**
**இசையின் இசையா இன்பாணித்தே**
**கிளி, ‘அவள் விளி’ என, விழல் ஒவாவே**
**அதுபுலந்து அழுத கண்ணே, சாரல்**
**……………………………………….”**[33]

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது. இயற்கைப்புணர்ச்சிக்குப் பின் தலைவன் தன் நண்பனான பாங்கன் இடம் தலைவியின் இருப்பிடம், அவள் அழகு நலன்கள் பற்றிக் கூறினான். தலைவியை முதல் முதலாகக் கண்ட இடத்தையும் தினைக் கதிர்களைப் பாதுகாப்பதற்காக அதை விரட்ட இருந்தாள். அப்போது அங்கு சென்ற ஊழ்வினைப் பயனால் தலைவியைக் கண்டேன் என்று குறுந்தொகையில் தலைவியின் குணநலன்களை பாணன் இடத்தில் தலைவன் உரையாடுகிறான்.

### 4.1.12 தலைவன், தலைவியைக் கண்டோர் உரைத்தது

தலைவன் வெம்மை தரக்கூடிய வழியில் தலைவியை அழைத்துக் கொண்டு உடன்போக்கு செல்கின்றான். செல்லும் வழியில் பார்த்த சுற்றத்தார் இந்த நல்லாளை இவன் கொடிய கடுஞ்சுரத்தின் வழியாக எவ்வாறு அழைத்துச் செல்கின்றான் என்று கூறினார்கள்.

திணைமாலை நூற்றைம்பது பாடலில், ‘‘தலைவன் தலைவி உடன்போக்குச் செல்லும் வழியைப் பற்றி இடைச்சுரத்தோர் கூறியது. நீங்கள் செல்லும் வழி இப்பாலை நில வழியிலும் நெடியதாக உள்ளன. அந்த மலையின் கண்ணே நெருப்பினையொத்தக் கதிர்களை வீசும் கதிரவன் பாதியளவு மறைந்து விட்டான். ஆகையால், இவ்வழகிய மங்கையுடன் நீரும் எம்மோடு சமமாய் தகுதியோடு இன்று தங்கி நாளை போதல் அழகுக்குரியது’’[33] என பாலை நிலச் சுரத்திடைக் கண்ட மக்கள் தலைவியுடன் இருக்கும் தலைவனை நோக்கிப் புலம்புகின்றனர்.

தலைவன் பொருள் தேடுவதற்காக வரைவிடை வைத்துப் பிரிந்து சென்றான். தலைவி பிரிவை ஆற்றமுடியாமல் நாணம் கடந்து உள்ளம்

கலங்கி நின்றாள். பொழுதோடு புலம்பினாள். தலைவன் வந்ததால் கலக்கம் நீங்கி தெளிந்தாள், இதனைக் கண்ட சுற்றத்தார் தலைவியைக் கண்டு மகிழ்ந்தனர்.

தலைவன் வேந்தன் பொருட்டு அரசனுக்குக் கடமை செய்வதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். தலைவன் இப்பிரிவின் காரணமாக வரைவிடை வைத்துப் பிரிந்து சென்றான். தலைவன் பிரிந்த வருத்தத்தால் தலைவி மிகவும் துன்பம் அடைந்தாள். அவள் படும் துன்பத்தைக் கண்டோர் தலைவனிடம் கூறல்.

ஐங்குறுநூற்றில், தலைவன் தலைவி இருவரும் கடுஞ்சுரத்தின் வழியாகச் சென்றனர். அவரிடையே இருக்கும் உறவு மிகவும் நெருக்கமாக இருந்தது. அதைக் கண்டு வியந்து இவர்கள் நீண்ட சிறகுகளையும், கூரியக் கால்களையும் உடைய மகன்றில் பறவைகள் போல, பிரியாதக் காதலைப் போன்று இணைந்து செல்கின்றனர் என்பதை இடைச்சுரத்தோர் வழி அறியலாம்.

### 4.1.13 தலைவன், பாங்கன் இடத்தில் தகவல் தொடர்பு

தலைவன் தலைவியை எவ்வாறு அடைந்தான் என்பதைப் பற்றியும், தலைவியின் குணநலம், அழகு நலம் பற்றியும் பாங்கன் தலைவனிடம் கூறினான். சங்கத்தொகை நூல்களில் தலைவன் பாங்கன் எவ்வாறு தகவலை பரிமாறுகின்றனர்.

திணைமாலை நூற்றைம்பது என்னும் நூலில், முழுநிலவின் கண்ணே இரண்டு வில்களைப் போல் புருவங்களை உடையவள். பிறர்க்குத் தீங்காகும் என்று தெளியாது இரு வேல்களாகிய கண்களை அவ்வில்களுக்கு இடையில் இருந்தது. தம் குலத்தைச் சேர்ந்த ஒருத்தி என்று எண்ணப்படும் இவ்விடத்தில் எளிமையோடு தினைப்புனம்

காப்பாள் தலைவி. அவள் என் மனதில் புகுந்து காக்க வைத்தார்கள் என்று நிறையழிந்த தலைமகன். தலைவியைக் கண்டு தன் தோழனிடம் புலம்புகின்றான்.[34]

கலித்தொகையில், தலைவன் பனங்குருத்தாலாகிய குதிரையை ஊர்ந்து தலைவியை அடைந்தான். இது மடலேறுதல் எனப்படும். தலைவன் எவ்வாறு மடலேறினான் என்பதையும் தலைவியை அடைந்த முறையையும் தன் தோழனான பாங்கனிடம் எடுத்துக் கூறுகின்றான்.

### 4.1.14 தலைவி தன் மகன் இடத்தில் தகவலைப் பரிமாறுதல்

தலைவன் பரத்தை இல்லத்திலிருந்து தன் இல்லத்திற்கு வருவான். தலைவன் வருவதை அறிந்த தலைவி தன் மகனுக்கு கூறுவது போல் தலைவனுக்கு தன் மனக்கருத்துக்களைக் கூற நினைப்பவை. சங்கத்தொகை நூல்களில் தலைவி, மகன் உரையாடல் கலித்தொகை நூலில் மட்டும் தான் இருக்கின்றது. தலைவி அவளுடைய மகன் எவ்வாறு உரையாடுகிறார்கள் என்பதை,

**“நயம் தலை மாறுவார் மாறுக் மாறா,**
**கயம் தலை மின்னும் கதிர்விடு முக்காழ்,**
**பயந்த எம் கண் ஆர யாம் காண நல்கி-**
**திகழ் ஒளி முத்து அங்கு அரும்பாகத் தைஇப்**
**பவழம் புனைந்த பருதி சுமப்ப,**
**கவழம் அறியா நின்கைபுனை வேழம்**
**...........................................”**[35]

கலித்தொகைப் பாடல் சான்றாகின்றது. தலைவன் பரத்தை வீட்டிலிருந்து தன் இல்லத்திற்கு வந்தான். இல்லத்தில் நுழையவில்லை. வேலிக்கு வெளிப்புறமாக நின்று கொண்டிருந்தான். அவன் அறியும்

வண்ணம் தன் மகன் இடத்தில் அறவே அன்பின்றி மாறுவார் மாறி விட்டுப் போகட்டும். உன்னைப் பெற்ற கண் நிறைய அன்பு மாறாத வரவை எதிர்பார்த்து நிற்கும். மென்மையான தலைவி இடத்தில் மின்னும் ஒளிவிடுகின்ற முத்துமாலை ஒளிவிடுகின்றது. எம் கண்ணார அதனை எமக்கு காட்டு என்று கூறினாள்.

### 4.1.15 தலைவன், தலைவி, தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தலைவி இருவருக்கும் இடையே சிறந்த ஊடகமாக திகழ்பவள் தோழி. தலைவன் தலைவி இருவரும் சிறந்த இல்லறத்தை சிறப்பாக நடத்த துணைப்புரிவது. தலைவி துவண்டு இருக்கும் நேரத்திலும் துணைநிற்பாள். சங்கத்தொகை நூல்களில் கலித்தொகையில் மட்டும் தான் தலைவன், தலைவி, தோழி எவ்வாறு தகவலைப் பரிமாறுகின்றனர் என்பதை அறியமுடிகிறது. இந்நூலில், தலைவன் தலைவியை பொருள் ஈட்டுவதற்காகப் பிரியக் கருதினான். தோழி, நீவிர் வெம்மை தரக்கூடிய பாலை நிலத்தில் பொருள் காரணமாகப் பிரிய இருக்கின்றீர் என்று கேட்டாள். தலைவி மிகவும் துன்புறுவாள் எனக் கூறி அவனுடைய செலவினைத் தவிர்த்தாள். இதை தோழி தலைவியிடமும் அறிவித்தாள். இதைப்போல,

**“இடுமணல் எக்கர் அகன் கானல் சேர்ப்பன்**
**கடுமான் மணியரவம் என்று – கொடுங்குழை**
**புள்ளரவம் கேட்டுப் பெயர்ந்தாள் சிறுகுடியர்**
**உள்ளரவம் நாணுவர் என்று”**[36]

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான ஐந்திணை எழுபது என்னும் நூலில், வளைந்த காதணிகளையுடைய தலைவி. பறவைகளின் ஒலியும், கடலின் ஒலியும் இருக்கும் கடற்கரைமேட்டில்

அமர்ந்திருந்தாள். தலைவனைக் காணவில்லை. தோழி இடத்தில் தலைவனைக் காணவில்லையோ என்று ஐயமும் கொண்டாள். தலைவன் குதிரையின் மேல் ஏறி குடியின் பக்கத்தில் வந்தான். தோழி தலைவன் இடத்தில் இதுவரை தலைவி இங்கே தான் இருந்தாள். உன்னைக் காணாமல் சென்றுவிட்டாள். இரவுக் குறியினைத் தவிர்த்து தலைவியை விரைவில் மணம் செய்து கொள்ளும்படி அறிவுறுத்துகின்றாள்.

### 4.1.16 பாணன் தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவனிடமிருந்து தூதாக வந்த பாணன் இடத்தில் தோழி வாயில் மறுத்துக் கூறினாள். பாணா! நீ யாழ் வாசிப்பதில் வல்லவனாக இருக்கலாம். தலைவிபடும் துயரம் உனக்குத் தெரியாது. இருவரும் ஒருவருக்கொருவர் தகவலை அறிவிக்கின்றனர்.

ஐங்குறுநூற்றில், தலைவன் கார்பருவத்தில் திரும்பி வருவதாகக் கூறிச் சென்றான். பின் வரவில்லை. தலைவி தலைவன் இல்லாமல் துன்பப்பட்டாள். தலைவியை ஆற்றியிருக்கும்படி கூற பாணன் தூதாக வந்தான். பாணனிடத்தில் தோழி தலைவியின் வளையல்கள் தலைவனைக் காணாமல் கழன்று ஓடுகிறது. மேனி அழகிழந்து இருக்கின்றது. இதனைத் தலைவன் இடத்தில் சென்று கூறு எனத் தோழி பாணனின் நிலையை விளக்கினாள்.

தலைவன் களவையே நீடித்துக் கொண்டுக் காலம் தாழ்த்திக் கொண்டே இருந்தான். அதனால் தலைவி பசலையால் மெலிவுற்றாள். தோழி தலைவன் இடத்தில் தலைவியை விரைந்து மணம் புரிந்து கொள்ள வேண்டும் என அறிவூட்டுவாள். தலைவன் பொருள் தேடச் சென்றுவிட்டால் தலைவி மிகவும் துன்பப்படுவாள். தலைவன்

வரும்வரை பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று தலைவி தோழி இடத்தில் ஆற்றுதல். தலைவன் வினைமுடித்து மீளும் பொழுது பாகனிடம் தேரை விரைவாக செலுத்தும்படி கூறல். சங்க இலக்கியத்தில் அகநூல்களில் உள்ள கதை மாந்தர்கள் ஒருவருக்கொருவர் துவண்டு காணப்படும் நேரங்களில் ஆறுதல் சொல்லும் பொருட்டு அறிவூட்டுகிறார்கள். இவ்வாறு தலைவி, தலைவன், தோழி, தேர்பாகன் ஒருவருக்கொருவர் எவ்வாறு கருத்துக்களை பரிமாறிக் கொள்கின்றனர் என்பதை அறியலாம்.

## 4.2 அறிவூட்டல்

| தகவலளார்கள் | நற்றிணை | அகநானூறு | குறுந்தொகை | கலித்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| தலைவி தோழி | 14 | 21 | 59 | 3 | 9 |
| தலைவன் தோழி | 30 | 13 | 13 | 13 | 18 |
| தலைவன் தலைவி | 4 | - | - | - | - |
| செவிலி தோழி | - | - | - | - | 1 |

சங்கத் தொகை கதை மாந்தர்கள் எவ்வாறு உரையாடுகிறார்கள் என்பதைப் பற்றி பார்ப்போம். தோழி தலைவி இடத்தில் அறிவூட்டுபவளாக குறுந்தொகையில் மிகுதியான பாடல்கள் காணப்படுகின்றன. அதற்கு அடுத்தாற்போல் அகநானூற்றிலும், நற்றிணையிலும், பின் ஐங்குறுநூற்றிலும் உள்ள கலித்தொகையில் குறைந்தப் பாடல்களே உள்ளன. தோழி தலைவன் இடத்தில் அறிவூட்டுபவளாக நற்றிணையில் முதன்மையானப் பாடல்கள் இருக்கின்றன. மேலும் அகநானூற்றிலும், குறுந்தொகையிலும்,

கலித்தொகையிலும் ஒரே அளவாக இருக்கின்றன. ஐங்குறுநூற்றில் மிகக் குறைவான பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் தலைவி உரையாடுவதாக நற்றிணையில் மட்டுமே உள்ளது. செவிலி தோழி உரையாடுவதாக ஒரே ஒரு பாடல் மட்டுமே ஐங்குறுநூற்றில் அமைந்துள்ளது. தலைவன் தலைவி இருவருக்கும் இடையில் தோழி அறிவூட்டுபவளாக விளங்குகின்றாள். மேலே குறிப்பிட்ட அட்டவணையின் மூலம் எவ்வாறு தகவலைப் பரிமாறுகிறார்கள் என்பதைப் விளக்கமாக அறிய முடிகின்றன.

### 4.2.1 தலைவி தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் இல்லாமல் தலைவி மிகவும் துன்பப்படுவாள். அந்நிலையில் தோழி தலைவன் நிலையையும், வரும் நேரத்தையும் எடுத்துக்கூறுவாள். இந்த தகவலைத் தோழி தலைவி இடத்தில் கூறியதும் மிகவும் ஆறுதலாக அவளுக்கு இருந்தது. தோழி தலைவி இடத்தில் குறித்த நேரத்தில் தகவலைக் கூறாவிடில் இறந்து விடுவாள். தலைவிக்கு சிறந்த தகவல் தொடர்பாளராக இருக்க கூடியவள் தோழி. தோழியானவள் எவ்வாறு தலைவி இடத்தில் அறிவூட்டுகிறாள்.

திணைமாலை நூற்றைம்பது என்னும் பாடலில், ‘‘என்னுடைய மனமானது, புன்னை மரங்கள் மிகுந்து காணப்படும் அளவுக்கு மலர்கின்றது. குளிர்ந்த சோலைகளில் சிவந்த கண்களையுடைய குயில்கள் கூவி அழைக்கின்றது. இதனால் வேனிற்காலம் வந்துவிட்டது என நினைவூட்டுகிறது. தலைவன் பொருள் மீது கொண்ட விருப்பத்தினால் நம்மை விட்டு நீங்கிச் சென்றார் எனத் தலைவி தோழி இடத்தில் கூறினாள்.’’[37] இதைகேட்ட தோழி தலைவன் விரைந்து வருவான் உன்னை மணம் புரிந்துக் கொள்வான். அதுவரை

ஆற்றியிருக்கும்படி அறிவூட்டினாள் அதுபோல, குறுந்தொகையில், மலையில் இருக்கும் தேன்கூட்டை நாம் கண்டால் தேனைப் பருக தோன்றும். ஆனால் தேனைப் பருக முடியாது. கீழே வீணாகப் போகும். அதுப்போல தலைவன் என்னைக் காணாமல் இருப்பது என் பெண்மைக்கு இழிவு தருவது என்று தலைவி தோழி இடத்தில் கூறி துன்பம் அடைந்தாள். அதற்கு தோழி தலைவன் பொருள் ஈட்டுவது காரணமாகப் பிரிந்து சென்றான். அவன் பொருளை ஈட்டி விரைவில் மணந்து கொள்வான். அதுவரை ஆற்றியிருத்தல் உன் பெண்மைக்கு அழகு என அறிவுரை கூறினாள்.

இரைதேடும் முயற்சியையுடைய நாரைகள் தம் முயற்சியை கைவிடும் வண்ணம் வாடைக்காற்று வேகமாக வீசுகின்றது. நம் காதலர் மட்டும் தம் முயற்சியை கைவிட்டு வரமுடியவில்லை. அவர் வருவதாகக் கூறிய கார்பருவம் முடிந்தது. கூதிர் பருவம் கூட வரப்போகின்றது. தலைவன் இல்லாமல் நான் எவ்வாறு உயிர் வாழப் போகின்றேன் என வருந்தினாள். தோழி தலைவன் விரைந்து வருவான். பொருள் ஈட்டிக் கொண்டு உன்னை வரைந்து கொள்வான். நீ கவலைப்படாதே தலைவன் வரும்வரை ஆற்றியிரு என கூறுகிறாள்.

‘‘தலைவி தோழி இடத்தில் மாலைக் காலத்தில் வில் போன்று வானவில் தோன்றியிருக்கின்றது. கரிய வண்டுகள் முல்லை மலர்கள் மீது ரீங்காரம் செய்கின்றது. இதைப் பார்க்கும் போது தலைவனைச் சார்ந்திருக்கின்ற மகளிர்க்கு இன்பத்தைப் பயக்கின்றது. ஆனால் பிரிவினால் தனித்துத் துணையில்லாமல் தவிக்கின்ற எனக்கு உயிரை பிளக்கின்றது. நாம் எவ்வாறு ஆற்றுவோம் என கூறினாள். தலைவனின் நிலையை அறிந்து புரிந்து கொள்.’’[38] தலைவன் வரும் வரை

ஆற்றிருப்பது உன்னுடைய கடமை என ஐந்திணை ஐம்பதில் தோழி தலைவியை நெறிப்படுத்துகிறாள்.

> **“நெடுங் கரைக் கான்யாற்றுக் கடும் புனல் சாஅய்,**
> **அவிர் அறல் கொண்ட விரவு மணல் அகன் துறைத்**
> **தண் கயம் நண்ணில் பொழில்தோறும், காஞ்சிப்**
> **பைந் தாது அணிந்த போது மலி எக்கர்**
> **வதுவை நாற்றம் புதுவது கஞல,**
> **மா நனை கொழுதிய மணி நிற இருங் குயில்**
> **…………………………………………..”[39]**

தலைவன் தலைவியை விட்டுப் பொருள் காரணமாகப் பிரிந்து சென்றான். இளவேனிற் பருவத்தில் வருவதாகக் கூறிச் சென்றான். அந்தப் பருவம் வந்தும் தலைவன் வரவில்லை. அதைக் கண்ட தோழி குறித்தப் பருவம் கடந்தாலும் தலைவன் தன் பிழைக்கு வருந்தி விரைவில் வருவான். அவன் வரும் வரை ஆற்றிருக்க வேண்டும் என அகநானூற்றில் தோழி தலைவி இடத்தில் அறிவூட்டினாள். தலைவன் பொருள் காரணமாக தலைவியைப் பிரிந்து சென்றான். சென்றவன் குறித்த காலத்தில் வரவில்லை. தலைவி பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாமல் வருந்தினாள். அது கண்ட தோழி தலைவனுடைய பேரன்பினை எடுத்துக் கூறினாள். உன்னை மறந்துவிட்டு உறங்க மாட்டார். விரைவில் வருவார் எனவும் வரும்வரை ஆற்றிருக்கும் படி வழிப்படுத்தினாள்.

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடுவதற்காகச் சென்றான். அதனால் தலைவி பெரிதும் வருந்தினாள். அது கண்ட தோழி தலைவன் பாலை நில வழியில் சென்றுள்ளான். அங்கு உன்னை நினைப்பான். அவன் உன் மேல் வைத்திருக்கும் அன்பின்

காரணமாக அவன் விரைந்து வருவான். அவன் வரும் வரை ஆற்றியிருத்தல் உன் கடமை என அறிவுறுத்தினாள்.

“ஒளிமிக்க வளையல்கள் அணிந்த தலைவியே! இந்த மேகக்கூட்டமானது தோல் வாரினால் கட்டப்பட்ட முரசு ஒலி போன்று இடி இடிக்கின்றது. நீ தலைவன் மேல் வைத்திருக்கும் அன்பை முறியடிப்பது போல் இருக்கின்றது. நம் தலைவர் உன்னை நினைத்திருப்பார். எனவே விரைவில் நம்மை வந்து சேருவார்.”[40] நீ அதுவரைப் பொறுத்திருக்க வேண்டும் என ஐந்திணை ஐம்பதில் தோழி நெறிப்படுத்தினாள்.

வினையின் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் கார்ப்பருவத்தில் வருவேன் எனக் கூறிச் சென்றான். ஆனால் தலைவன் வராததால் தலைவி மிகவும் வேதனையுற்றாள். தலைவியை ஆற்றுவிக்கும் பொருட்டுத் தோழி தலைவன் சொல்லிவிட்டுச் சென்ற கார்ப்பருவம் இப்போதுதான் தொடங்குகிறது. நம் தலைவர் அயல் நாட்டில் இருப்பினும் நம்மீது மிகவும் அன்புடையவர். தவறாமல் வந்துவிடுவார். நீ வருந்தாதே என நற்றிணையில் உள்ள தோழி ஆறுதல் அடையும் படிக் கூறினாள்.

தலைவன் பொருள் தேடுவதற்காக தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். அதனால் தலைவி மிகவும் வருந்தினாள். தோழி தலைவியிடத்தில் பல்லி குரல் எழுப்புகிறது. குயில் கூவுகின்றது. எனவே இனிய குறி காணப்படுகிறது. விரைவில் எம் காதலர் வருவார். வானம் மழை பெய்யும் அறிகுறி காணப்படுகிறது. அவர் சொல்லி விட்டுச் சென்ற பருவமும் இதுவே. ஆதலால் தலைவன் விரைந்து வந்துவிடுவார் எனத் தோழி நிமித்தங்கள் மூலம் உணர வைத்தாள்.

தலைவன் நாள்தோறும் களவின் இன்பத்தையே விரும்பி மணம் புரியாது காலம் தாழ்த்தினான். ஓர்நாள் இரவு நேரத்தில் தலைவன் வந்து மறைந்து கொண்டிருந்தான். அதை அறிந்த தோழி தலைவி இடத்தில் உன் நெற்றியில் பசலை படர்ந்தாலும் பெரிய தோள்கள் நெகிழ்ந்தாலும் பரவாயில்லை. உன்னைக் காண இரவு நேரத்தில் கொடிய வழியில் தலைவனை வர வேண்டாம் என்று கடிந்து தலைவி இடத்தில் தோழி அறிவூட்டினாள்.

‘‘என்னருமைத் தலைவியே! நல்லக் கூறுகளால் பரதவர் வலையை பிண்ணியிருப்பர். அந்த வலையைக் கொண்டு மீன்களாகிய வற்றலினைப் பிடிப்பர். அதை உளர்த்திவிடுவர். அந்த வற்றலினை உண்ணப் பறவைகள் வரும். இத்தகைய துறையை உடைய தலைவனை நம் கண்களால் காண முடியுமோ? அவனைக் காண வேண்டுமானால் தலைவன் உன்னை திருமணம் செய்ய வரும்போதுதான் பார்ப்போம். ஏனென்றால் திருமணத்திற்குத் தேவையானப் பொருள் ஈட்டும் பொருட்டு தான் நம்மைப் பிரிந்து சென்றான்.[41] எனவே விரைவில் பொருள் தேடி நம்மை வந்து சேருவார் என ஐந்திணை எழுபது நூலில் உள்ள தோழி தலைவி இடத்தில் வலியுறுத்தினாள்.

தலைவன் தலைவியை விட்டுச் செல்லும் போது பருவம் குறித்துச் சென்றான். ஆனால் குறித்துச் சென்ற பருவத்தில் தலைவன் வரவில்லை. தலைவியின் வருத்தத்தைப் போக்குவதற்கு தோழி புதர்களின் மேல் நிறைய பூக்கள் பூத்துள்ளன. இந்தப் பூவை உன் தலையில் சூடி மகிழத் தலைவன் வருவார். ஏன் காலம் தாமதம் ஆகிறதென்றால் பகைவருடைய அணிகலன்களைப் போரிட்டு

உனக்காக கொண்டு வருவார். தலைவன் வரும் வரை காத்திருப்பது உன் கடமை எனத் ஐங்குறுநூற்றில் தோழி தலைவி இடத்தில் அறிவுறுத்தியது.

தலைவன் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்தது. தலைவன் வரவில்லை. இதனால் வருந்தினாள் தலைவி. அதற்கு தோழி முல்லை மலர்கள் காட்டில் மலர்ந்து காணப்படுகின்றது. அதன் வழியாகத் தான் நம் தலைவன் சென்றான். முல்லை மலரைப் பார்த்து தலைவன் விரைவில் திரும்பி வருவான். கவலையடையாதே தலைவி என்று ஆற்றுவித்தாள்.

தலைவன் நெடுநாள் தலைவியை விட்டுப் பிரிந்துச் சென்றதால் வருந்திய தலைவி கார்ப்பருவம் வருவதைச் சுட்டிக் காட்டினாள். தலைவி அங்கே பார் அங்கு தேரைகள் ஒலிக்கின்றன. இது கார்காலத்திற்கு உண்டான அறிகுறி. தலைவன் காலம் தாழ்த்தாமல் இன்னோசையுடைய மணிகள் கட்டிய நெடிய தேரை ஊர்ந்து இன்றே வருவார் அதுவரை காத்திருத்தலே நலம்.

தலைவன் தலைவியை மணம் புரிந்து கொள்ளாமல் களவின் பொருட்டு காலம் தாழ்த்தினான். விரைவில் தலைவியை மணம் புரிந்து கொள்ளக் கூறுகின்றாள். தோழி கூறியும் தலைவன் வரவில்லை. அதனால் தோழி ஐயப்பட்டாள். தலைவன் தலைவியை வரைந்து கொள்ள வந்தான். இதனை அறிந்த தோழி மகிழ்ச்சி எய்தினாள்.

"அலைகளுக்கு மேலே வந்து கரையோரங்களில் ஒதுங்கி நின்ற சிப்பிகள் தன் வாயினைப் பிளந்து சிப்பிகள் முத்துகளை வெளிவிடும். தெளிந்த உப்பங்கழிகளையும், சோலைகளையும் சூழப்பெற்று மணல் பொருந்திய கடற்கரையில் இருள் அதிகமாக சூழ்ந்து இருக்கும்.

அச்சத்தை தரும் இருளில் வர வேண்டாம்".[42] பின் தலைவியை விரைந்து மணம் புரிந்து கொள்ள வேண்டும் என திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள தலைவனிடம் இரவுக்குறியை மறுத்துரைக்கிறாள் தோழி.

தலைவிக்குத் தோழி ஆயர்கள் ஏறுதழுவியதை சுட்டிக்காட்டினாள். தலைவனைக் கண்டு வருந்தாமல் இருக்க தாம் பெற்ற நன்னிமித்தங்களைக் கூறினாள். தம் சுற்றத்தார் கூறிய கூற்றினைத் தெரிவித்தாள். தலைவன் ஓர் நாள் வந்து ஏறு தழுவி உன்னை விரைவில் திருமணம் செய்துக் கொள்வான். அதுவரை ஆற்றியிருக்க வேண்டும் என கலித்தொகையில் உள்ள தலைவிக்கு தோழி ஆறிவூட்டுவதாக உள்ளன.

ஆயர் ஏறு தழுவிய பாங்கினைத் தோழி தலைவிக்குத் தனித்தனியே எடுத்துக் காட்டினாள். ஏறு தழுவிய மகிழ்ச்சியில் குரவைக் கூத்து நிகழ்ந்தது. தலைவன் உன்னை விரைந்து மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நாம் சுற்றத்தார் ஏறு தழுவி உன்னை வரைந்து கொள்ள வேண்டும் என்று தலைவன் கேட்கும்மாறு குரவையுள் வேண்டி நின்றனர். தலைவியே நாமும் குரவை ஆடி வாழ்க என்று தெய்வத்திடம் உரைக்கின்றனர்.

### 4.2.2 தலைவன் தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் பொருள் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரியும்போது தோழி இடத்தில் தலைவியை பார்த்துக்கொள்ளுமாறு அறிவூட்டுதல். தோழி தலைவன் இடத்தில் தலைவியை விரைவில் திருமணம் செய்து கொள்ளுமாறும் தலைவியை என்னால் ஆற்ற இயலாது என்ற தகவலை ஒருவருக்கொருவர் பரிமாறுதல்.

சங்கத்தொகை நூல்களில் நற்றிணையில் அதிக எண்ணிக்கையிலானப் பாடல்கள் காணப்படுகின்றன. அடுத்ததாக குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு ஆகியவற்றில் சமமானப் பாடல்கள் தலைவன், தோழி உரையாடுவதாக அமைந்துள்ளன. மிகக் குறைவான பாடல்கள் ஐங்குறுநூற்றில் உள்ளன.

**“மல்லார் புயன்தஞ்சைவாணன் வெற்**
**பா எமர் வந்துஇனிக்**
**கல்லார் வியன்புனம் காவல்**
**விடார்அவர் காணின்மிகப்**
**பொல்லாது இருண்டது போதுமற்று**
**யாங்களும் போதும்இங்கு**
**…………………………………..”[43]**

தலைவியை திருமணம் செய்து கொள்ளாமல் காலம் தாழ்த்திய தலைவன் இடத்தில் தோழி நீ தலைவியை விரைவில் திருமணம் செய்துக் கொள்ளாவிடில் எம் உறவினர் யாராவது பெண் கேட்டு வந்துவிடுவர் எனத் தலைவியின் சூழ்நிலையை எடுத்துக் கூறி விரைவில் திருமணம் செய்து கொள்ளுமாறு நம்பியகப் பொருளின் தலைவன் இடத்தில் தோழி அறிவுறுத்தினாள்.

“தோழி தலைவன் இடத்தில் என் தலைவியும் நானும் தினைப்புனம் காப்பதற்கு இனி வரமாட்டோம். தினைக்கதிர் அறுவடை செய்யும் காலம் வந்துவிட்டது. எங்களை வெளியே விடாமல் எங்கள் உறவினர் காவல் காப்பர். உன்னை நாங்கள் காணமுடியாது.”[44] ஆகவே தலைவியை விரைந்து மணம் செய்துக் கொள்வதே நல்லது என்னும்

தகவலை திணைமாலை நூற்றைம்பது என்னும் பாடல் வழி உணர்த்துகிறாள்.

தலைவனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி அவனிடம், ''ஐயனே! தலைவி தனித்து வருந்தி காணப்படுகின்றாள். அவளை என்னால் ஆற்ற இயலாது. ஆயினும், கார்ப்பருவம் வந்துவிட்டது என வருந்துவாள். ஆகவே நீ தலைவியை மணம்புரிந்து இனி பிரியாதிருப்பாயாக என்று நற்றிணையில் கூறப்படுகிறது.

களவின் காரணமாக நாள்தோறும் தலைவன் தலைவியைக் காண வருகின்றான். தலைவன் தலைவியை விட்டுச் சில நாள் விலக இருப்பதை தோழி அறிகின்றாள். உன்னைத் தவிர தலைவி யாரையும் விரும்பமாட்டாள். நீ தலைவியிடம் விரும்பி அன்பு செலுத்தவில்லை என்றாலும் நான் உன்மேல் வைத்திருக்கும் நம்பிக்கை உரியதாவது. தலைவியை விரைவில் மணம் செய்து கொள்ள வேண்டும் எனத் தோழி தலைவன் இடத்தில் அறிவூட்டினாள்.

தலைவன் தலைவியை மணம் புரிந்து கொள்ளாமல் காலம் நீட்டித்தான். தோழி தலைவனிடம் களவை நீட்டிக்காது அவள் மகிழும் வகையில் எம் ஊர்க்குத் தலைவியை மணம் செய்து கொள்வதற்காக நீ வர வேண்டும். அதுவே மிகச் சிறந்த நலமானதாகும்.

தலைவன் தலைவியை மணம் புரியும் கருத்தின்றி களவில் காலம் தாழ்த்தினான். மலைநாடனே தலைவி உன் மார்பின்மீது வருத்திய நோயை யாரிடம் கூற முடியும். பலமுறை இனிய சொல் கூறி அருள் செய்யாமல் மயங்கினாய். இனிக் காலம் தாழ்த்தாமல் தலைவியை விரைவில் மணம் செய்து கொள்ள வேண்டும் எனத் தோழி தலைவனிடம் வலியுறுத்தினாள்.

களவினை நீடிக்காமல் தலைவியை மணம் செய்து கொள்ளுமாறு தோழி விரும்பினாள். அவள் தலைவனிடத்தில் வழியிடை துன்பத்தைப் பற்றிக் கூறினாள். கானவர் உறங்கமாட்டார். புலியும் முழங்கும், மழை பெய்து இடிக்கும். இத்தகைய பொழுதில் காமத்தால் வருந்தினாலும் அரிய வழியில் வாராதிருப்பது நல்லது. விரைந்து தலைவியை நீ மணம் புரிந்து கொள்ள வேண்டும்.

பொருள் தேடுவதற்காகப் பிரியக் கருதிய தலைவன் தன் கருத்தை தோழி இடத்தில் கூறி தலைவிக்கு அறிவிக்குமாறு கூறினான். அதற்கு அவள் உன்னிடம் இரக்கம் கொண்டு தலைவி உன்னை விடுப்பாள். அவ்வாறு விடுத்தாலும் புறாக்கள் ஒன்றோடு ஒன்று புணர அழைக்கும். அந்தக் குரலை கேட்டு அவள் வருந்துவாள். அப்போது தழுவி தேற்றிப் போவதற்கு உனக்கு வலிமை இருக்கின்றது என ஆறுதல்படுத்துகிறாள்.

திணைமாலை நூற்றைம்பது என்னும் பாடலில், ‘‘புன்னை மரங்கள் வளைந்த அடிப்பாகத்தில் அலைகள் தழுவிச்செல்லும் அழகானக் கடற்கரைத் தலைவனே. பூத்து மலர்ந்துள்ளக் கொடி போன்ற தலைவிக்கு அவளுடைய நெஞ்சிற்கு மகிழ்ச்சிடையக் கொடுப்பாயாக’’[45] என்று தலைவியை விரைவில் திருமணம் செய்து கொள்ளவேண்டும் என்று அறத்தோடு நின்றாள்.

அகநானூற்றில், தலைவன் தலைவியை நாள்தோறும் களவிலே கண்டு மகிழ்ந்து மீண்டான். அவள் நீ வரும் வழியைப்பற்றி அஞ்சியும் இருப்பாள். தலைவியைக் காண வாராமல் நீ ஒரு நாள் போனாலும் தலைவி உயிர் வாழமாட்டாள் எனத் தலைவன் இடத்தில் தலைவியை விரைந்து மணம் செய்து கொள்ளுமாறு தோழி அறிவூட்டினாள்.

களவின் காரணமாகத் தலைவன் தலைவியைக் காண இரவு நேரத்திலும் பகற்பொழுதிலும் வந்தான். தோழி ஓர் நாள் தலைவனிடத்தில் தலைவியின் தாய் வெறியாடல் நிகழ்த்தப் போகின்றாள். அதனால் தலைவி மிகவும் வருந்துகின்றாள். தலைவியை விரைந்து வரைந்து கொள்ளுமாறு தலைவனிடம் நிலைமையைக் கூறி வற்புறுத்துகிறாள்.

தலைவன் தலைவியை மணந்து கொள்ளாமல் களவின்பத்தையே விரும்பினான். ஒரு நாள் தோழி குறியிடத்தில் தலைவனைக் கண்டாள். தலைவா! என் தலைவியின்பால் உனக்கு அன்பில்லை. அவள் முன்னரே அறிவித்திருந்தால் அவள் மேனியில் பசலை பரவாது இருந்திருக்கும். ஆனால், இப்போது பசலை படர்ந்து காணப்படுகிறது. நீ தலைவியை விரைந்து மணம் செய்து கொண்டு நோயின் கொடுமையில் இருந்து காப்பாயாக என அறிவுறுத்துகிறாள்.

‘‘நறுமணமுடைய முள்தழையின் நீண்ட மொட்டுகளையுடைய நாரைகள் தம் குஞ்சு என எண்ணும். தாம் கொண்டு வந்த இரையினைத் தாம் உண்ணாது அம்மொட்டுகளின் வாயிலே பெய்யும். மேலும், மண இரக்கம் கொண்ட நாரை அம்மொட்டுகளின் மேல் சூரியஒளி படாமல் தன் இறகுகளினால் மறைக்கும். அவ்வாறு உடைய கடற்கரைத் தலைவனே! நீ அடிக்கடி இங்கு வந்து போகாமல் இரு.’’[46] ஏனென்றால் தலைவியை விரைவில் மணம் புரிந்து கொள்வதே நிலையானது.

களவின் காரணமாக தலைவியின் உள்ளத்தில் ஆற்றாமை மிகுகின்றது. தலைவா! நீ தலைவியைக் காண வந்தாள் அலர் உண்டாகின்றது. காண வராதபோது அவள் கைவளையல்கள்

நெகிழ்ந்து காணப்படுகின்றது. அதனால் சிறிய வளையல்களை அணிகின்றாள். களவினை விட்டுத் தலைவியை மிகக் குறுகிய காலத்தில் மணம் புரிந்து கொண்டு வாழ்வாயாக என்று வேண்டுவதாக அமைகின்றது.

தலைவியின் அன்னை உறங்காமல் காவல்ப்படுத்துகின்றாள். இரவு நேரத்தில் தலைவியைக் காண இயலாது. பகற்பொழுதில் நீ வருவதால் அலர் உண்டாகின்றது. பகற்குறி இரவுக்குறியைத் தவிர்த்து தலைவியை விரைவில் மணம் செய்துக் கொள்ள வேண்டும் எனத் தோழி தலைவன் இடத்தில் அறிவூட்டினாள்.

தலைவி உன் மேல் கொண்ட நட்பு மிகவும் பெரியது. அது அலர் தூற்றினாலும் அழியாது. அவள் உன் மேல் மிகவும் அன்பு வைத்திருக்கின்றாள். இனி களவை நீடிக்காமல் விரைந்து தலைவி வரைவு மேற்கொள்ளும் வழியை தலைவன் இடத்தில் தோழி தோற்றுவிக்கிறாள்.

தலைவன் தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்ல வேண்டும் என விரும்பினான். தோழி தலைவன் இடத்தில் பாலைநிலம் மிகவும் கொடியது. இந்தக் கடுஞ்சுரத்தின் வழியாக தலைவியைக் கூட்டிச் செல்ல வேண்டாம். அவளின் மென்மையினைச் சுட்டிக் காட்டுகிறாள்.

களவின் காரணமாகத் தலைவன் தலைவியைச் சந்திக்க இரவு நேரத்தில் காண வந்தான். தோழி அவன் எதிர்ப்பட்டாள். இரவுக்குறி வருதலினால் ஏற்படும் விளைவுகளையும் அக்குற்றத்தால் எவ்வகையான துன்பம் ஏற்படுகின்றது என்பதையும் விளக்கினாள். பின் தலைவியை

விரைந்து மணம் செய்து கொள்ளுமாறு கலித்தொகையில் தோழி பேசுவதாக அமைந்துள்ளன.

தலைவன் பொருள் தேடுவதற்கு வெளிவூருக்குச் சென்று வருவதாகக் கூறினான். அவனிடத்தில் தோழி தலைவி ஒரு நிமிடம் கூட உன்னை விட்டுப் பிரிந்திருக்கமாட்டாள். அவளை எண்ணாலும் ஆற்றுவிக்க இயலாது தோழி தலைவனிடத்தில் தலைவியை விரைந்து மணம் செய்து கொள்ளுமாறு அறிவூட்டினாள்.

தலைவன் தலைவியை திருமணம் செய்து கொள்ளாமல் காலம் தாழ்த்தினான். தோழி தலைவனிடத்தில் தலைவியின் கற்பு மிகுதியை எடுத்துக் கூறினாள். களவு ஒழுக்கத்தை மேற்கொண்டால் இவ்வூரில் அலராகிப் பரவுகின்றது. இனி காலம் தாழ்த்தாமல் தலைவி விரைவில் மணம் செய்துக்கொள் என்று கட்டளையிடுவது போல் கூறப்படுகின்றது.

தலைவி தலைவன் பிரிவினால் தோற்றப் பொழிவும், தோளும், கண்ணும் ஊராற்கு காட்டிக்கொடுத்தன. அதனால் அலர் வெளிப்பட்டன. பிரிவுத் துன்பத்தைத் தலைவி மறைத்தாள். ஆனால் முடியவில்லை. இனிக் காலம் தாழ்த்தாமல் தலைவியை விரைவில் மணம் செய்துக் கொள்ள வேண்டும் என்பதை தோழி தலைவனுக்கு எச்சரிக்கை விடுத்தாள்.

**“நினைக்கே அன்று அ.்.து எமக்குமார் இனிதே-**
**நின் மார்பு நயந்த நல் நுதல் அரிவை**
**வேண்டிய குறிப்பினை ஆகி,**
**ஈண்டு நீ அருளாது ஆண்டு உறைதல்லே”** [47]

என்னும் ஐங்குறுநூறு பாடலில், தலைவன் பரத்தையர் இல்லத்தில் இரவில் தங்கினான். பின் உலகத்திற்காகப் பரத்தை தலைவனை

விடுத்தாள். தலைவன் தன் இல்லத்திற்கு வர தோழியின் உதவியை நாடினான். அதற்கு தோழி இவ்வளவு நாட்கள் பரத்தையின் காரணமாக தலைவிக்கு துன்பம் விளைவித்தாய். இப்பொழுது அவள் விடுத்ததன் காரணமாக தலையளி செய்யப்போகின்றாயா என இடித்துரைத்தாள். கூட்டுவிக்கும் முயற்சியில் நீ தலைவியை விரைவில் மணம் செய்துக் கொள்ள வேண்டும் எனத் தோழி தலைவன் இடத்தில் அறிவூட்டினாள்.

தலைவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளாமல் களவினை மேற்கொண்டான். ஓர் நாள் தலைவியை மகிழ்விக்க வேண்டும் என எண்ணி வளையல்களைக் கொண்டு வந்தான். அப்பொழுது தோழி நீ களவினை விரும்பி இருக்கின்றாய். அதனால் தலைவி உடல் மெலிவுற்று இருக்கின்றாள். நீ கொண்டு வந்த வளையல்கள் கழன்று விழாமல் இருப்பதற்காக தலைவியை மணம் செய்து கொள் என்றாள் தோழி.

களவின் பொருட்டு தலைவன் தலைவியை மணம் செய்து கொள்வதற்காகத் தேவையானப் பொருள் தேடச் செல்வேன் எனக் கூறினான். அதற்குத் தோழி மலையின் அழகிய மாணிக்கக் கற்களைக் கொண்டு வந்தாலும் அங்கு செல்லாதிருங்கள். மீறிச் சென்றால் உரிய காலத்தில் வர இயலாது. வாடைக் காற்று வீசும். இதனால் தலைவி மிகவும் வருந்துவாள். எனவே போகாமல் இரு எனத் தோழி தடுப்பதைக் காணமுடிகின்றது.

தலைவன் தலைவியை மணம் புரிந்து கொள்ளாமல் களவினை நீடித்தான். இதன் பொருட்டு ஊரில் உள்ளவர்களுக்கு களவு வெளிப்பட்டது. அதனால் தலைவி மிகவும் வருந்துகின்றாள். வாடைக்காற்று வேறு வேகமாக அடிக்கின்றது. பசலையால் தலைவி

இறந்துவிடுவாள் போலிருக்கின்றது. தலைவியின் வரைவிற்காக அவனிடம் எடுத்துரைக்கிறாள்.

### 4.2.3 தலைவன் தலைவிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தலைவி இடத்தில் அவள் அழகை வர்ணிப்பது. தலைவியை உடன்போக்கு அழைத்துச் செல்லும் தலைவன் மென்மையாகப் பேசி மகிழ்வூட்டிச் செல்வது. தலைவன் தலைவியை விட்டுப் பொருள் காரணமாகப் பிரிந்து சென்றாலும் தலைவியிடம் நிலையை எடுத்துக் கூறிச் செல்வது போன்ற காரணங்களால் தலைவன் தலைவி ஒருவருக்கொருவர் உரையாடித் தகவலைப் பரிமாறுகின்றனர். சங்கத் தொகை நூல்களில் நற்றிணையில் மட்டும் தலைவன் தலைவி உரையாடுவது இருக்கின்றன.

**“பொழுதும் ஆறும் காப்பும் என்று இவற்றின்,**
**வழுவி னாகிய குற்றங் காட்டலும்,**
**தன்னை அழிதலும், அவன்ஊறு அஞ்சலும்,**
**இரவினும் பகலினும் நீவா என்றலும்,**
**கிழவோன் தன்னை வாரல் என்றலும்,**
**…………………………………………..”[48]**

என்னும் தொல்காப்பிய நூற்பாவில், தலைவி தன்னைக் காண வரும் தலைவன் வழி, ஊர்க்காவல் இதனால் ஏற்படக் கூடிய இடையூறு பற்றியும் என் நெஞ்சு மிகவும் துன்புறுகின்றது. இரவு நேரத்தில் என்னைக் காண வருவதால் தீமைதான் ஏற்படும். இந்த களவு வாழ்க்கையை நீக்கி விடலாம். என்னை விரைந்து மணம் செய்துக் கொள்ளவேண்டும் என்று இயம்பினாள்.

தலைவன் தலைவியை உடன்போக்கு அழைத்துச் செல்லும் வழியில் துன்பம் தெரியாமல் இருப்பதற்காக உன் அடிகள் வருந்துகிறதா ஆலமரத்தின் நிழலிலே தங்கி இளைப்பாறி அஞ்சாது தங்கிச் செல்லலாம் என்று தலைவன் தலைவியை அறிவூட்டி அழைத்துச் சென்றான்.

தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்றனர். இடைச் சுரத்தின் வழியே தலைவி நடக்க முடியாமல் துன்புற்றாள். தலைவன் சிறிது பொழுது வேங்கை மர நிழலில் விளையாடுக என்றான். நான் வேங்கை மரத்தின் பின்புறமாக மறைந்து நின்று இருக்கின்றேன். அங்கு மறவர் வந்தால் போரிட்டு வெற்றிப் பெறுவேன் என்று தலைவிக்கு துன்பம் தெரியாமல் இருப்பதற்காக ஆறுதல் கூறி அழைத்துச் செல்வதை அறியமுடிகின்றது.

### 4.2.4 செவிலி தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவி உடன்போக்குச் சென்று விடுகின்றாள். அதை அறிந்து செவிலி தோழியிடம் வினாவுதல். தலைவி பசலையுற்று உடல் மெலிந்து காணப்படும் போது தலைவியின் உடல்நிலைப்பற்றி தோழியிடம் கேட்டறிதல். தலைவியைப் பற்றி முழுவதுமாக தெரியக் கூடியவள் தோழியே ஆவாள். அவளிடம் தலைவியின் நிலைப் பற்றிக் கேட்டறிதல்.

**“வேங்கை நறுமலர் வெற்பிடை யாம்கொய்து**
**மாந்தளிர் மேனி வியர்ப்பமற்(று) – ஆங்கெனைத்தும்**
**பாய்ந்தருவி ஆடினேம் ஆகப் பணிமொழிக்குச்**
**சேந்தனவாம் சேயரிக்கண் தாம்”**[49]

என்னும் ஐந்திணை ஐம்பது பாடலில், செவிலித்தாய் தலைவியை இல்லத்திற்கு அழைத்துப் போக வந்திருந்தாள். அப்பொழுது தலைவியின் கண்கள் சிவந்திருந்தன. அதனால் அதற்குரிய காரணத்தை தோழியிடம் வினவினாள். நாங்கள் மலையிலுள்ள வேங்கை மரத்தில் மலர்ந்துள்ள நறுமணம் மிக்க மலர்களைக் கொய்தோம். அப்போது எங்கள் உடல் வியர்த்தன. அதனால் எங்கள் கண்கள் சிவப்பாயின எனத் தோழி செவிலிக்கு கூறினாள்.

தலைவியின் உடல் வேறுபாடு அடைந்ததை அறிந்து வருந்தினாள் செவிலி. உரிய நேரத்தில் தலைவியின் நோய்க்கு காரணம் காதலே என வெளிப்படுத்தினாள். அதன் பின்னும் தெளிவடையவில்லை. தோழி நெய்தல் நிலத்தில் உள்ள தலைவனை நம் தலைவி விரும்புகின்றாள் என்ற உண்மையை தோழி செவிலி இடத்தில் வெளிப்படுத்தினாள்.

### 4.3 மகிழ்வித்தல்

சங்கத் தொகை நூல்களில் உள்ள தலைவியை தோழி மகிழ்விப்பது. தலைவன் உன்னை திருமணம் புரிவதற்காக வருகின்றான் போன்ற தகவலைக் கூறி தோழி தலைவியை மகிழ்விப்பது. தலைவன் தோழியிடத்தில் தலைவி இருக்கும் இடத்தை அறிந்து தலைவன் மகிழ வைப்பது. தலைவன் சென்ற வினை முடிந்து தலைவியைப் பற்றி மகிழ்ந்து கூறுவது போன்ற காரணங்களால் ஒருவருக்கொருவர் தன் தகவலைப் பரிமாறி மகிழ்ந்து பேசுவது. தலைவன் தலைவி வாழும் இல்லறத்தின் சிறப்புகளைத் தோழி எடுத்துக் கூறி செவிலியை மகிழச் செய்தாள். ஒருவருக்கொருவர் எவ்வாறு தகவலைப் பரிமாறி மகிழச் செய்கின்றனர்.

### 4.3.1 மகிழ்வித்தல்

| தகவளலார்கள் | நற்றிணை | அக நானூறு | குறுந் தொகை | கலித்தொகை | ஐங்குறுநூறு |
|---|---|---|---|---|---|
| தலைவி தோழி | 8 | 7 | 3 | 8 | 24 |
| தலைவன் தோழி | 2 | - | - | - | 2 |
| தலைவன் பாங்கன் | 1 | - | - | - | - |
| தலைவன் தலைவி | - | 1 | - | - | 9 |
| செவிலி தோழி | - | - | 1 | - | 2 |
| தலைவன் தலைவி தோழி | - | - | - | 1 | - |

தலைவி தோழியை மகிழ்விப்பதாக ஐங்குறுநூற்றில் 24 பாடல்களும், கலித்தொகையில் 8 பாடல்களும், நற்றிணையில் 8 பாடல்களும், அகநானூற்றில் 7 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும் தோழி தலைவியை மகிழ்விப்பதாக இருக்கின்றன. தலைவன் தோழி உரையாடுவதாக நற்றிணை 2 பாடல்கள், ஐங்குறுநூறு 2 பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் பாங்கன் உரையாடுவதாக நற்றிணையில் 1 பாடல் காணப்படுகிறது. தலைவன் தலைவி உரையாடுவதாக அகநானூற்றில் 1 பாடலும், ஐங்குறுநூற்றில் 9 பாடல்களும், செவிலி தோழி உரையாடுவதாக குறுந்தொகையில் 1 பாடலும், ஐங்குறுநூறு 2 பாடல்களும் இருக்கின்றன. தலைவன் தலைவி தோழி உரையாடுவதாக கலித்தொகையில் 1 பாடலே உள்ளது. தோழி தலைவியை மகிழ்விப்பது மிகுதியான பாடல்கள் காணப்படுகின்றன. சங்கத் தொகை அகநூல்களில் கதை மாந்தர்கள் ஒருவருக்கொருவர் உரையாடுவதன் மூலம் எவ்வாறு மகிழ்கிறார்கள். தலைவி தலைவன் இல்லாமல் மிகவும் வருந்திக் காணப்படுவாள். தலைவி வருந்தி இருக்கும் நிலையைக் கண்டு தலைவன் இடத்தில்

கூறி மகிழச் செய்வாள். தலைவிக்கு சிறந்த தகவல் தொடர்பாளராகவும், ஆறுதல் கூறக்கூடியவளாகவும் தோழி விளங்குவாள். தலைவன் தலைவியை மணம் புரிய வருவதையும் கூறி மகிழ்விக்கிறாள். தோழி தலைவியை எவ்வாறு மகிழ்விக்கிறாள். சங்கத் தொகை அகநூலாகிய ஐங்குறுநூற்றில் தான் தோழி தலைவியை மகிழ்விப்பதாக மிகுதியான பாடல்கள் காணப்படுகின்றன.

நம்பியகப்பொருளில், “தலைவன் தலைவியை திருமணம் செய்யும் பொருட்டு பெற்றோர் உறவினருடன் வருகின்றான். அவ்வாறாக வருகையில் பரிசுப் பொருள்கள் தலைவிக்காக வாங்கி வந்தான். தலைவன் அவ்வாறு வருவதை அறிந்த தோழி தலைவியை மகிழ்விக்கும் பொருட்டு தலைவன் வருவதைக் கூறினாள்”.[50] இவ்வாறு தலைவன் வருவதைக் கூறி தலைவியை தோழி மகிழச் செய்தாள்.

தலைவன் தலைவியை திருமணம் செய்து கொள்ளும் பொருட்டுத் தேவையானப் பொருள் ஈட்டுவதற்கு தலைவியை விட்டுப் பிரிந்து சென்று பொருளை ஈட்டிக் கொண்டு திரும்பி வந்தான். அதை அறிந்த தோழி மகிழ்ச்சியில் தலைவி இடத்தில் தலைவன் வந்து இருப்பதைக் கூறினாள். தலைவன் தலைவியை திருமணம் செய்துக் கொள்வதற்காக தேரின் மீது ஊர்ந்து வந்தான் எனத் தலைவி மகிழ்ந்து நம் காதலனாகிய நெடிய தேரினை உடைய மலைநாட்டுத் தலைவன் தேரில் வருகின்றான். அவனை ஈர்த்து வரக்கூடிய குதிரைகள் நம் ஊர் சிறார் போலவே குடுமி தலையைக் கொண்டு வருகின்றது என ஐங்குறுநூற்றில் உள்ள தோழி தலைவி இடத்தில் மகிழ்வை எடுத்துரைக்கின்றாள்.

தலைவன் தலைவியை வரைவுக்குத் தேவையானப் பொருள் ஈட்டும் பொருட்டு சில காலம் பிரிந்திருந்தான். அதனால் தலைவி மிகவும் வருந்தினாள். தலைவன் குறித்தவாறு மண ஏற்பாட்டுடன் தலைவியைக் காண வந்தான். தலைவன் வருவதை அறிந்த தோழி கானக நாட்டின் தலைவன் உன்னை மணம் புரிய வருகின்றான் எனத் தோழி தலைவியை மகிழ்விக்கிறாள்.

தலைவன் தலைவியை திருமணம் செய்து கொள்வதற்காகத் தேவையானப் பொருள் ஈட்டுவதற்குப் பிரிந்து சென்றார். பொருள் ஈட்டிக் கொண்டு குறித்த பனிப் பருவத்திற்குள் வந்தான். தோழி மகிழ்ந்து அம்மகிழ்ச்சியை தலைவி இடத்தில் விரைந்து பெய்யும் தாங்குதற்கு அரிய பனியொடு கலந்த கூதிர்பருவத்தில் வாடைக்காற்று வீசுகிறது. அவ்வாடைக் காற்று வருவதற்கு முன் வந்தான். அவன் உயர்ந்தவன் எனத் தகவலைப் பரிமாறுகின்றாள்.

“பதிக்கப்பட்ட வெண்சங்கை போன்ற வரிகளையுடையது விரால் மீன். பழைமையான நீர் மோதும் கரைமுழுவதும் திரிந்து இரைகளை உண்டு நீரினுள் மூழ்கும். மருதநிலத் தலைவன் மலர்மாலை அணிந்த எம் புதல்வனை அவனுடைய நெற்றிச் சுட்டி அசையும் படி எம் இல்லத்திற்கு எடுத்துக் கொண்டு வருகின்றான். அவன் என் இடத்தில் உன்னை விரைவில் மணம் புரிந்து கொள்ளுமாறு கூறினான்.”[51] நீ கவலைப்படாதே என்னும் தகவலைக் கைந்நிலை என்னும் நூலின் வழி தோழி தன் மகிழ்வை வெளிப்படுத்துகிறாள்.

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். இளவேனிற் பருவத்தில் வருவதாக் கூறிச் சென்றான். ஆனால் வரவில்லை. அதனால் தலைவி வருந்தினாள். தலைவன் ஓர் நாள் வந்தான். தலைவன் வருவதை அறிந்த கலித்தொகை நூலில் உள்ள தோழி தகவலை தலைவி இடத்தில் கூறி மகிழச் செய்தாள்.

தலைவியும் தோழியும் வள்ளைப் பாட்டுப் பாடினார். தலைவன் தன் உறவினர்வுடன் வரைவு வேண்டி வந்தான். தலைவியின் தமர் அதற்கு உடன்பட்டனர். இதனை அறிந்த தோழி மகிழ்ந்து தலைவிக்குத் தெரிவித்தாள்.

தலைவன் இளவேனிற் காலத்தில் திரும்பி வருவேன் எனக் கூறிப் பிரிந்து சென்றான். இளவேனிற் காலத்தில் தலைவன் வராது கண்டு வருந்தினாள். தோழி அதற்குத் தலைவன் அதோ வருகின்றான் பார் எனக் கூறி தலைவியை ஆறுதல்படுத்தினாள்.

தலைவன் தலைவியை மணம் புரிவதற்குத் தேவையானப் பொருள் ஈட்டும் பொருட்டு பிரிந்து சென்றான். பகற்நேரத்தில் பலரும் காணுமாறு வருவதைக் கண்டாள் தோழி. தேடிய பொருள் முற்றி மணம் புரிய வருகின்றான் என்பதை உணர்ந்தாள். அவள் தலைவியிடம் சென்று பகற்பொழுதில் பலரும் காண தலைவன் வருகின்றான். அதை நீ அறிந்தாயோ என்று நற்றிணைத் தோழி தலைவியை மகிழ்வைப் புரியவைத்தாள்.

தலைவன் தலைவியை வரைந்து கொள்ள வருவதை அறிந்தாள். தோழி தலைவியிடம் நம் தலைவன் வந்த குதிரைகள் நாள் தோறும் வந்து அலைமோதின. இனித் தலைவன் உன்னை மணம் புரியப்

போகின்றான். ஆதலால் அவை அலைச்சல் ஒழிந்து துன்பம் நீங்கியது. என்று தோழி இச்செய்தியினைக் கூறி மகிழச்செய்தாள்.

தலைவனின் பிரிவை எண்ணி வருந்தினாள் தலைவி. தலைவியின் வருத்தத்தை உணர்ந்தாள் தோழி. தலைவன் மீண்டும் வருவதற்கு உண்டான நன்நிமித்தங்களை உணரப் பெற்றாள் தோழி. அதனைத் தலைவியை நோக்கி தலைவன் வருகின்ற தேரின் மணிகள் ஒலிக்கின்றது. அதோ பார் எனத் தோழி தலைவியை தெளியச் செய்கிறாள்.

“தலைவன் தலைவியை மணந்து கொள்வதற்காக தம் உறவினருடன் பெண் கேட்டு வந்தான். தலைவியின் தமர் உடனே வரவேற்றனர்.”[52] இதனை நம்பியக நூற்பாவில் உள்ள தோழி மகிழ்வதாக அமைந்துள்ளது.

தலைவன் தலைவியை மணந்து கொள்ளும் பொருட்டு தம் உறவினருடன் தலைவியின் இல்லத்திற்கு வந்தான். அப்போது தலைவியின் தமர் அவர்களை ஏற்றுக் கொண்டு வரவேற்றனர். தலைவன் தலைவியை மணம் புரிய வருகின்றதை அறிந்த அகநானூற்றின் தோழி அச்செய்தியை தலைவி இடத்தில் கூறி மகிழ்வு எய்தினாள்.

தலைவன் களவின் காரணமாக தலைவியைக் காண சென்றான். இதனால் தலைவி மிகவும் வருந்தினாள். இதை அறிந்த தலைவன் உற்றார் உறவினர்வுடன் தலைவியின் இல்லத்திற்கு வருவதை அறிந்த தோழி, இத்தகவலை தலைவியிடம் பரிமாறினாள்.

களவின் பொருட்டு தலைவன் தலைவியைக் காண நாள் தோறும் வந்தான். பின்னர் ஒரு நாள் வரைவோடு வந்து தலைவியை மணந்து கொண்டான். அதுவரை அலர் தூற்றிய அவ்வூர் மக்கள் வாய் அடங்கினார்கள். அதைக் கண்டு தோழி மகிழ்ந்து தலைவி இடத்தில் கூறினாள்.

“தலைவன் முழங்கும் சங்குடன் தேரின் மீது வருகின்றான். இவ்வொலி அறிந்த தோழி தலைவி இடத்தில் தலைவன் வரும் செய்தியைக் கூறி மகிழ செய்தாள்”[53] என்பதை அறிய முடிகிறது.

தலைவன் தலைவியை மணம் முடிப்பதற்காக வருகின்றான் என அறிந்த தோழி தலைவி இடத்தில் ஊரார் இவ்வளவு நாள் பழிச்சொல் தீட்டினார்கள். அவையாயும் இனி இல்லாது போக தலைவன் கொண்டு வரும் இனிய மணமுரசொலினை இவ்வூரில் உள்ளவர்கள் கேட்பாராக எனக் கூறி முரசினை தகவல் தெரிவிக்கும் பொருளாக காட்டப்பட்டுள்ளது.

அயல்மனையில் உள்ள ஒரு பெண் வருவார் எனக் கூறிய சொல்லை தலைவியும் தோழியும் விரிச்சியாகக் கொண்டனர். அவள் கூறியவாறே தலைவன் தலைவியை திருமணம் செய்து கொள்வதற்காக வந்தான். அதனால் தோழி தலைவியிடம் அமுதத்தை உண்க. அந்தப் பெண் கூறியது இனிதே என வாழ்த்தினாள். இது அவர்களுக்கு மகிழ்ச்சியை தருகின்றன.

### 4.3.2 தலைவன் தோழிக்கிடையேத் தகவலின் மூலம் மகிழ்வித்தல்

தலைவன் தலைவியைக் காண பகற்பொழுதிலும் இரவுப் பொழுதிலும் வந்துச் செல்கின்றான். தோழி தலைவன் இடத்தில்

இரண்டு குறியினையும் தவிர்த்து தலைவியை மணந்து கொள்வதே உமக்குச் சிறந்தது என்று அவனிடம் கூறினாள். அவள் கூறிய தகவலை தலைவன் அவன் ஏற்றுக் கொண்டதை அறிந்த தோழி மகிழ்ந்தாள். சங்கத்தொகை நூலில் நற்றிணையில் ஒரு பாடலும், ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் தலைவன் தோழி உரையாடுவதாக அமைந்துள்ளது. தலைவன் தோழி எவ்வாறு உரையாடுகிறார்கள் என்பதை "குளிர்ந்த குளத்தில் மலர்ந்துள்ள தாமரை மலரில் பெரிய ஆண் பறவை பெண் அன்னப்பறவையை நீரில் இருந்து நினைக்கும், கழனிகள் சூழப்பெற்ற மருதநிலத் தலைவனே! நீ தலைவி மேல் அன்புக் கொண்டு மணந்தது மிக்க மகிழ்ச்சி. உன்னை தலைவி மணந்ததால்தான் இன்று மகிழ்ச்சியுடன் இருக்கின்றாள்"[54] என்று மகிழ்வித்தலை பற்றி திணைமாலை நூற்றைம்பது என்னும் நூல் வெளிப்படுத்துகிறது.

தலைவன் தலைவியை மணம் புரிந்துக் கொண்ட மறுநாள் சென்ற தோழியிடம் தலைவன் இவ்வளவு நாட்கள் நன்கு எங்களை நான்கு பாதுகாத்தாய். நீ பெரியை என்று புகழ்ந்தான். அதற்கு அவள் என்னைப் புகழ்தல் வேண்டாம். உரிய நேரத்தில் தலைவியை மணந்து கொண்டது நீயே தலைவா என்று மறுத்துப் புகழ்ந்துரைத்தாள்.

தோழி தலைவனிடம் யாம் பகற்பொழுதில் இங்கிருந்து மாலையில் செல்லவேண்டாம். அவ்வாறு சென்றாள் தலைவி வருந்துவாள். அவளை அங்கு வருக என்று அழைக்கும் வலியும் எமக்கில்லை. தலைவி உன்னைக் கண்டு மகிழுமாறும் விரைந்து மணம் செய்ய தேரில் வருமாறும் தலைவன் இடத்தில் கூறுவதாக உள்ளது. மற்றொரு இடத்தில் தலைவன் தலைவியைப் பிரிந்து

பொருள் தேடுவதற்காகச் சென்று இளவேனிற் பருவத்தில் மீண்டும் வருவதாக தோழி இடத்தில் கூறினான். அதற்கு தோழி பெருமானே! நின் அழகிய மெல்லியக் கூந்தலைக் கொண்டக் காதலி நீ வரும் வரை ஆற்றியிருக்கமாட்டாள் நீ சென்றால் மிகவும் துன்பப்படுவாள். அவளை விட்டு பிரிந்து செல்லாமல் மகிழ்ந்து இருப்பாயாக என இயம்புவதை காணமுடிகிறது.

### 4.3.3 தலைவன், பாங்கன் இடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தோழனான பாங்கன் இடத்தில் தலைவியின் அழகு நலத்தையும், ஊரின் வளத்தையும் கூறல். பாங்கன் தலைவன் இடத்தில் இவ்வளவு அழகுள்ளவளா! என்று கேட்கின்றான். இவளே உனக்கு சிறந்தவள் எனத் தலைவனை மகிழ்விக்க பாங்கன் கூறியவை. சங்கத்தொகை நூல்களில் நற்றிணையில்தான் தலைவன் பாங்கன் உரையாடுவதாக பாடல்கள் இருக்கின்றன.

திருக்குற்றாலக் குறவஞ்சி என்னும் நூலில், “மேளதாளங்கள் முழங்க ஆடுகின்ற அழகுடைய தலைவி. திருக்கூத்தராகிய குற்றாலநாதர் மலையில் வாழ்கின்ற நீண்ட வாள் போன்ற அழகு பொருந்திய கண்கள், நெற்றியின் மேல் கஸ்தூரியால் இட்டப் பொட்டின் அழகு, காதழகு பொன்னாலான அணியுடன் கூடிய காதழகுடையவள்”[55] எனத் தலைவன் தலைவியின் அழகு நலத்தை பாங்கன் இடத்தில் கூறி மகிழ்ந்தான். தலைவனை நெருங்கி நீ கூறுகின்ற மங்கை யார்? எங்கே இருக்கின்றாள் என்று கேட்க தலைவன் அவள் தந்தையின் வீட்டில் உள்ளாள். அங்கு அவளுக்கு அன்னை உணவு ஊட்டுகிறாள் எனக் கூறுவதில் இருந்து தலைவியின் செல்வ செழிப்பை விளங்குகின்றது.

### 4.3.4 தலைவன் தலைவியிடத்தில் தகவல் தெரிவித்த விதம்

தலைவன் பரத்தையர் இடம் சென்றுவிட்டு வெகு நாட்களுக்குப் பிறகு தன் இல்லத்திற்கு வந்து தலைவியைக் கண்டு அவள் மேல் அன்புக்கொண்டு மகிழச்செய்கிறான். தலைவி தலைவனின் உறவினர்களுக்கு உணவுப் பரிமாறும் முறையைக் கண்டு மகிழ்தல். இவ்வாறு தலைவன் தலைவி ஒருவருக்கொருவர் தகவலை பரிமாறிக் கொள்ளுதல் சங்கத்தொகை நூல்களில் ஐங்குறுநூற்றில் தான் தலைவன் தலைவி பேசுவதாக மிகுதியானப் பாடல்கள் உள்ளன. அகநானூற்றில் ஒரு பாடல் மட்டுமே உள்ளது.

“தலைவனும் தலைவியும் தம் இல்லறத்தைச் சிறப்பாக நடத்தினர். அதன் பயனாக நிறைந்த மக்களுடன் வாழ்ந்திருந்தனர். அறத்தினைப் போற்றினர்.”[56] தொல்காப்பியம் தலைவன் தலைவி மகிழ்ந்து இல்லறம் சிறப்பாக நடத்தியதை கூறுகிறது. தலைவி தன் தோழியருடன் ஒரு பொழிலியில் விளையாடச் சென்றாள். அங்குச்சென்ற தலைவன் அவள்மேல் காதல் கொள்கிறான். அவளும் அவனை விரும்பினாள். ஒரு நாள் தினைப்புனத்தில் காவல் செய்த தலைவியை கண்டு தலைவன் மகிழ்ந்து என் தலைவியின் தோள்களுக்கு தினைப்புனக் காவலைத் தந்த கிளிகளே என்று கூறி உரையாடி மகிழ்வதை அறியமுடிகின்றது.

தலைவன் பகற்பொழுதில் தலைவியைக் காண குறித்த இடத்திற்கு வந்தான். அவன் பின்னால் தலைவி அவனுக்குத் தெரியாமல் அவன் கண்களை விளையாட்டாகப் பொத்தினாள். தலைவன் மகிழ்ந்து அழகான சிறந்த கைகளினால் என் கண்ணைப் பொத்தியவளே. மயில் போன்ற சாயலை உடையவளே. என்

நெஞ்சத்தில் நீங்காது இருப்பவளே. உன்னைத் தவிர என் கண்ணை யார் பொத்தி விளையாட முடியும் என்று தலைவன் தலைவி இடத்தில் மகிழ்ந்து கூறினான். தலைவன் தலைவியை பெரிய அமர்ந்த கண்ணையுடைய காதலியே! காயா, நெய்தல், முல்லை போன்ற பலவகையான மலர்களும் அழகுடன் காணப்படுகின்றது. அவைகளைப் பறித்து விளையாடி மகிழலாம் என அழைப்பதை உணரமுடிகின்றது.

தலைவன் தலைவியிடம் பருவம் குறித்து விட்டுச் சென்று கார்காலம் வருவதற்குள்ளாகவே வந்தான். தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு புறவிற்குச் சென்றான். அப்போது கார்பருவம் வந்தது. அது கண்டு மகிழ்ந்து தான் முன்னரே உன்னை காண்பதற்காக வந்தேன் என்று தலைவன் தலைவியிடம் மகிழ்ந்து கூறினான். ‘‘தேவாரம் பாடித் திருத்தொண்டு புரிந்தவரான சுந்தரமூர்த்தி நாயனார்க்கு தோழரான திருக்குற்றால நாதர்குரிய திரிகூட மலையிலே தவிழ்ந்தான். பின் ஒரு நாள் தன்னுடன் காதல் உரையாடுகின்ற தலைவியைக் கண்டான். அதனால் துள்ளி குதித்து ஆட்டம் போட்டான்.’’[57] மலரில் தேனினை உண்கின்ற அவளைப் பாராட்டிப் பாராட்டி கூத்தாடிக் கொண்டே திருக்குற்றாலக் குறவஞ்சித் தலைவன் இருந்தான். அதைப்போலவே, அகநானூற்றில் களவொழுக்கத்தில் இடையூறு ஏற்பட்டது. தலைவியைத் தலைவன் சுற்றத்தார் அறியாவண்ணம் அழைத்துக் கொண்டு பாலை நிலத்தில் சென்றான். தலைவிக்கு ஆறுதல் அடையவும் வழியில் வருத்தம் நீங்கவும் கானகக் காட்சிகளைச் சொல்லிச் சென்றான். தலைவன் தலைவியை மகிழச் செய்து அழைத்துச் சென்ற கதையும் ஒப்பிட்டு காணமுடிகின்றன.

### 4.3.5 செவிலித் தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவி தலைவன் இல்லாமல் பசலையுற்று காணப்பட்டாள். இதனால் தலைவி நோய்வாய்ப்பட்டவள் போல் இருந்தவளை கண்டு செவிலி ஐயுற்றாள். தோழி செவிலி இடத்தில் தலைவி தலைவனின் அன்பை எடுத்துக் கூறினாள். தலைவன் வந்தால் தலைவி மிகவும் மகிழ்வாள். தலைவியின் மகிழ்ச்சி நிலையை செவிலி இடத்தில் கூறினாள். சங்கத்தொகை நூல்களில் ஐங்குறுநூற்றில் 2 பாடல்களும், குறுந்தொகையில் ஒரு பாடலும் காணப்படுகின்றது. செவிலி தோழி எவ்வாறு உரையாடுகின்றனர் என்பதை அறியலாம்.

ஐங்குறுநூற்றில், தோழி தலைவியின் கற்பு பற்றி தன் தாய்க்கு முறைப்படி வெளிப்படுத்தினாள். தலைவன் திருமணத்திற்கு வேண்டிய செல்வத்தை ஈட்டிக்கொண்டு திரும்பினான். தலைவன் வரைவிற்குரிய ஏற்பாட்டுடன் வந்தமையால் தலைவியின் பசப்பு நீங்கி உடல் பூரித்தது. அதனைத் தன் தாய்க்குக் காட்டி தோழி கூறினாள். தலைவியின் காதலைச் செவிலிக்கு வெளிப்படுத்தினாள். செவிலியின் உதவியால் திருமணம் கைகூடும் நிலை உருவாக்கி மகிழ்ந்த தோழி தன் தாயைப் பாராட்டி மகிழ்ந்து கூறினாள். நம்பியகப் பொருளில், அசைந்து விளங்கும் வளையல் அணிந்த தலைவியின் நிலையில் வேற்றுமை ஏற்படுகின்றது எனும் காரணத்தை தோழி செவிலியிடம் கேட்டாள். அதற்குக் காரணம் மலைநாட்டுத் தலைவனே. தலைவன் தலைவியை மணம் முடிக்க வருவார் என உரைத்தாள். களவின்பத்தை வெறுத்து கற்பு நெறியைக் கொண்டான். தலைவன் தலைவியை மணம் புரிந்துக் கொள்ள வருகின்றான் என்பதை தெரிவித்தாள். அதேபோல் குறுந்தொகையிலும் தோழி செவிலிடம் கூறுவதாக அமைந்துள்ளன.

### 4.4.6 தலைவன், தலைவி தோழிக்கிடையேத் தகவல் தொடர்பு

தலைவன் தலைவி இல்லாமல் துன்ப நிலையில் இருப்பாள். அப்போது தோழி சிறந்த பாதுகாவலாக தலைவிக்கு இருப்பாள். தலைவியின் துன்பநிலையை தலைவி இடத்தில் எடுத்துக்கூறி தலைவியை மகிழச் செய்வது தோழியின் முக்கியக் கடமையாகும். சங்கத்தொகை நூல்களில் கலித்தொகையில் தலைவி தலைவன் உரையாடுவதாக உள்ளது. தலைவன், தலைவி தோழி எவ்வாறு உரையாடுகிறார்கள்.

‘‘காயாச் செடிகள் கரிய மை போன்று மலர்கள் மலர்ந்திருக்கின்றது. குருக்கத்திச் செடிகளின் இழைகள் பெண்களின் பற்களைப் போன்று அழகாக இருக்கின்றது. நறுமணம்மிக்க வெண்காந்தள் மலர்கள் பூத்துக் காணப்படுகிறது. வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிந்த தலைவர் மணம் பேச வருகிறேன் எனத் தலைவன் தோழியிடம் கூறினான்.’’[58] அப்பிரிவால் மெலிந்த நின் தோள்கள் முன் போல் பூரித்து விளங்குவன. தோழி தலைவன் மணம் புரிய வந்தது குறித்து மகிழ்ச்சியுடன் தலைவியை நோக்கி எடுத்துரைக்கிறாள்.

தலைவியைச் சந்திக்க தலைவன் இரவு நேரத்தில் வந்துச் செல்கின்றான். அப்போது தோழி தலைவனை எதிரே ஒரு நாள் கண்டாள். தலைவியது நிலைமையை பற்றி அவனிடத்தில் கூறினாள். விரைவில் தலைவியை திருமணம் செய்துக்கொள்ளுமாறு அறிவுறுத்தினாள். தலைவன் தலைவியை திருமணம் செய்துக் கொள்ள வருவதை அறிந்தாள். கலித்தொகையில் தோழி தலைவனின் வரவை மகிழ்ச்சியில் கூறிச் செல்கிறாள்.

## 4.5 தொகுப்புரை

தொகைநூல்களில் அறிவித்தல், அறிவூட்டல், மகிழ்வித்தல் என்னும் நான்காம் இயலில் ஒருவரின் அகமனதில் உள்ள கருத்துக்களைக் குறிப்பாக இன்ப துன்பங்களை மற்றொருவரோடுப் பகிர்ந்து கொள்ளும்போது இறுகிய மனம் நெகிழ்ச்சி அடைகின்றது. அறிவித்தல் என்பது இருவரின் இறுக்கங்களின் வடிகாலகிறது. சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவி இருவருக்கும் முன் வந்து செல்லும் தொடர்பாளர்கள் முக்கியப் பாத்திரங்களாக மாறி தங்கள் கருத்துக்களை அறிவித்தார்கள்.

தொகை நூல்களில் காணப்படும் தகவல்களில் அறிவித்தல் குறித்த பாடல்களின் எண்ணிக்கைகளில் 897 பாடல்களைப் பெற்று முதலிடம் வகிக்கின்றன. அதற்கடுத்தாற்போல் அறிவூட்டல் குறித்த பாடல்கள் 197 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. மேலும் மகிழ்வூட்டல் பாடல்கள் 69 பாடல்களின் மூலம் மூன்றாம் இடத்தில் உள்ளன. இதன்மூலமாக தொகை நூல்களில் அதிகமாக இடம்பெறுவது அறிவித்தல் பாடல்களே என்பது புலனாகின்றன.

சங்கத் தொகை அகநூல்களில் அகநிலை மாந்தர்கள் எவ்வாறு எல்லாம் தகவலை பரிமாறுகின்றனர் என்பதையும் தலைவி தோழி உரையாடுவதாக குறுந்தொகையில் மிகுதியான பாடல்கள் உள்ளன. தோழி தலைவி இடத்தில் ஆறுதல் அடையச் செய்ய தகவலை அறிவிப்பதாக 184 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 104 பாடல்களும், நற்றிணையில் 101 பாடல்களும், அகநானூற்றில் 91 பாடல்களும், கலித்தொகை 25 பாடல்களும் காணப்படுகின்றன. அடுத்ததாக தலைவன் தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 65 பாடல்களும், குறுந்தொகையில் 52 பாடல்களும், அகநானூறு 26 பாடல்களும்,

கலித்தொகையில் 14 பாடல்களும், நற்றிணையில் 10 பாடல்களும் இருக்கின்றன. தலைவன் தலைவி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 34 பாடல்களும், கலித்தொகையில் 17 பாடல்களும், அகநானூற்றில் 4 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், நற்றிணையில் 3 பாடல்களும் உள்ளன. தலைவன் தலைவி உரையாடுவது மிகக் குறைந்த பாடல்களேயாகும்.

தலைவி பாணன் உரையாடுவதாக நற்றிணையில் 74 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 6 பாடல்களும், கலித்தொகையில் 3 பாடல்களும், குறுந்தொகை, அகநானூற்றில் தலா ஒரு பாடலிலும் பேசுவதாக அமைந்துள்ளன. தோழி குயவனிடம் உரையாடுவதாக ஒரு பாடலும், தலைவன் தேர்பாகன் இடத்தில் உரையாடுவதாக அகநானூற்றில் 12 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 8 பாடல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. பின் செவிலி தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 12 பாடல்களும், கலித்தொகையில் 6 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடல் அமைந்துள்ளன.

பரத்தை தோழி உரையாடுவதாக இரண்டு நூல்கள் மட்டும் உள்ளன. அதில் அகநானூறு 2 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 1 பாடல் காணப்படுகின்றன. காதற்பரத்தை, தலைவன் அறிவிப்பதாக குறுந்தொகை 3 பாடல்கள், ஐங்குறுநூறு 2 பாடல்கள் இருக்கின்றன. அதற்குப் பின் செவிலி நற்றாய் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், பாணன் தலைவன் அறிவிப்பதாக குறுந்தொகையில் ஒரு பாடல், தலைவன் தலைவி உடன்போக்கு செல்கின்றார்கள். அப்பொழுது அவர்களை கண்டவர்கள் அறிவிப்பதாக கலித்தொகையில் ஒரு பாடல் ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும் தகவலை அறிவிக்கின்றது.

தலைவன் பாங்கனிடம் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும், தலைவி தன் மகனிடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலுமாக இருக்கின்றது.

தலைவன் காமக்கிழத்தியிடம் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் 8 பாடல்களும், தலைவன், தலைவி இருவருக்கும் இடையில் தோழி அறிவிப்பதாகக் கலித்தொகையில் 10 பாடல்களும், தோழி பாணன் இடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் அமைந்துள்ளன. தொகை நூல்களில் காணப்படும் தகவல்களில் அறிவித்தல் குறித்த பாடல்களின் எண்ணிக்கைகளில் 897 பாடல்களைப் பெற்று முதலிடம் வகிக்கின்றன. அறிவூட்டல் குறித்த பாடல்கள் 197 பாடல்கள் அடுத்த நிலையில் பெற்றுள்ளன. மேலும் மகிழ்வூட்டல் பாடல்கள் 69 பாடல்களின் மூலம் மூன்றாம் இடத்தை வகிக்கின்றன. இதன்மூலமாக தொகை நூல்களில் அதிகமாக இடம்பெறுவது அறிவித்தல் பாடல்களே என்பது புலனாகின்றன.

சங்கத் தொகை அகநூல்களில் அகநிலை மாந்தர்கள் எவ்வாறு எல்லாம் தகவலைப் பரிமாறுகின்றனர் என்பதையும் தலைவி தோழி உரையாடுவதாக குறுந்தொகையில் மிகுதியான பாடல்கள் உள்ளன. தோழி தலைவி இடத்தில் ஆறுதல் அடையும் பொருட்டு தகவலை அறிவிப்பதாக 184 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 104 பாடல்களும், நற்றிணையில் 101 பாடல்களும், அகநானூற்றில் 91 பாடல்களும், கலித்தொகை 25 பாடல்களும் காணப்படுகின்றன.

அடுத்ததாக தலைவன் தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 65 பாடல்களும், குறுந்தொகையில் 52 பாடல்களும், அகநானூறு 26 பாடல்களும், கலித்தொகையில் 14 பாடல்களும், நற்றிணையில் 10

பாடல்களும் இருக்கின்றன. தலைவன் தலைவி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 34 பாடல்களும், கலித்தொகையில் 17 பாடல்களும், அகநானூற்றில் 4 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும், நற்றிணையில் 3 பாடல்களும் இருக்கின்றன. தலைவன் தலைவி உரையாடுவது மிகக் குறைந்த பாடல்களே உள்ளன.

தலைவி பாணன் உரையாடுவதாக நற்றிணையில் 74 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 6 பாடல்கள், கலித்தொகையில் 3 பாடல்கள், குறுந்தொகை, அகநானூற்றில் தலா ஒரு பாடல் பேசுவதாக அமைந்துள்ளன. தோழி குயவனிடம் உரையாடுவதாக ஒரு பாடலும், தலைவன் தேர்பாகன் இடத்தில் உரையாடுவதாக அகநானூற்றில் 12 பாடல்களும், ஐங்குறுநூற்றில் 8 பாடல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. செவிலி தோழி உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் 12 பாடல்களும், கலித்தொகையில் 6 பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடல் அமைந்துள்ளன.

பரத்தை தோழி உரையாடுவதாக இரண்டு நூலில் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளன. அதில் அகநானூறு 2 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 1 பாடல் காணப்படுகின்றது. காதற்பரத்தை, தலைவன் அறிவிப்பதாக குறுந்தொகையில் 3 பாடல்களும், ஐங்குறுநூறுயில் 2 பாடல்களும் இருக்கின்றன. நற்றாய் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், பாணன் தலைவன் அறிவிப்பதாக குறுந்தொகையில் ஒரு பாடல், தலைவன் தலைவி உடன்போக்கு செல்கின்றார்கள் அப்பொழுது அவர்களை கண்டவர்கள் அறிவிப்பதாக கலித்தொகையில் ஒரு பாடல் ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் தகவலை அறிவிக்கின்றன.

தலைவன் பாங்கனிடம் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல், தலைவி தன் மகனிடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலுமாக இருக்கின்றது. தலைவன் காமக்கிழத்தியிடம் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் 8 பாடல்களும், தலைவன், தலைவி இருவருக்கும் இடையில் தோழி அறிவிப்பதாகக் கலித்தொகையில் 10 பாடல்களும், தோழி, பாணன் இடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலுமாக அமைந்துள்ளன.

உலகில் புதிய கண்டுபிடிப்புகளும் அறிவியல் முன்னேற்றங்களும் நாளும் பெருகிவருகின்றன. அன்றைய மக்களிடம் இன்றைய தகவல் தொடர்பு வசதிகள் இல்லை. தொகை நூல்களில் உள்ள தலைவன், தலைவி, செவிலி இவர்கள் மூவரிடமும் தோழி செய்தியைக் கூறி அறிவூட்டினாள். சங்கத் தொகை அகநூல்களில் தோழி தலைவன், தலைவி இடத்தில் அறிவூட்டுவளாக விளங்குகின்றாள். தொகைநூல்களில் கதை மாந்தர்கள் எவ்வாறு உரையாடுகிறார்கள் என்பதை தோழி தலைவி இடத்தில் அறிவூட்டுபவளாக குறுந்தொகையில் மிகுதியான பாடல்கள் காணப்படுகின்றன. அகநானூறு, நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய அகநூல்களில் குறைந்த பாடல்களே உள்ளன.

தோழி தலைவன் இடத்தில் அறிவூட்டுபவளாக நற்றிணையில் முதன்மையானப் பாடல்கள் இருக்கின்றன. மேலும், அகநானூற்றிலும், குறுந்தொகையிலும், கலித்தொகையிலும் ஒரே அளவாக இருக்கின்றன. ஐங்குறுநூற்றில் மிகக் குறைவான பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் தலைவி உரையாடுவதாக நற்றிணையில் மட்டுமே உள்ளன. செவிலி தோழி உரையாடுவதாக ஒரு பாடல் மட்டுமே ஐங்குறுநூற்றில்

காணப்படுகிறது. தலைவன் தலைவி இருவருக்கும் இடையில் தோழி அறிவூட்டுபவளாக விளங்குகின்றாள். தோழி தலைவன் வரும் செய்தியைக் கூறி மகிழச் செய்தல். தலைவன் தலைவியின் அழகு நலத்தைப் பற்றி கூறி மகிழ்தல் தோழி தலைவியின் கற்பு வாழ்க்கைப் பற்றி செவிலியிடத்தில் கூறி மகிழச் செய்தல் போன்ற பல நிகழ்ச்சிகளைக் காணமுடிகின்றன.

ஐங்குறுநூற்றில் 24 பாடல்களும், கலித்தொகையில் 8 பாடல்களும், நற்றிணையில் 8 பாடல்களும், அகநானூற்றில் 7 பாடல்களும், குறுந்தொகையில் 3 பாடல்களும் தோழி தலைவியை மகிழ்விப்பதாக இருக்கின்றன. தலைவன் தோழி உரையாடுவதாக நற்றிணையில் 2 பாடல்கள், ஐங்குறுநூற்றில் 2 பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் பாங்கன் உரையாடுவதாக நற்றிணையில் 1 பாடலைக் காட்டுகிறது. தலைவன் தலைவி உரையாடுவதாக அகநானூற்றில் 1 பாடலும், ஐங்குறுநூற்றில் 9 பாடல்களும், செவிலி தோழி உரையாடுவதாக குறுந்தொகையில் 1 பாடலும், ஐங்குறுநூறு 2 பாடல்களும் அமைந்துள்ளன. தலைவன் தலைவி தோழி உரையாடுவதாக கலித்தொகையில் 1 பாடல் இருக்கின்றது. தோழி தலைவியை மகிழ்விப்பது பற்றி கூறும் பாடல்கள் மிகுதியாக உள்ளன என்பது இதன் மூலம் விளங்குகின்றன.

தொகை நூல்களில் தோழிதான் சிறந்த தகவல் தொடர்பாளராக இருக்கின்றாள். தலைவன், தலைவி மற்றும் செவிலி போன்றோர்க்கும் தோழி செய்திச் சென்றடையச் செய்கிறாள் என்பது நமக்கு புலனாகின்றன.

## குறிப்புகள்

1. பத்துப்பாட்டு குறிஞ்சி (27,34), ப - 249
2. தொல் - பொருள் (1072), ப - 304
3. குறுந் - (43), ப - 115
4. பதி – கைந் (2), ப - 252
5. பத்துப்பாட்டு - (238-251), ப - 295
6. ஐங் - (199), ப - 421
7. பதி - திணை – ஐம் - 13, ப - 104
8. நற் - (149), ப - 274
9. பத்து - (1- 12), ப - 241
10. தொல் - பொருள் (1075), ப - 304
11. பதி - திணை – ஐம் - 22, ப - 110
12. பதி - திணை – ஐம் - 35, ப - 156
13. நம்பி - (202), ப - 65
14. பதி - கைந் - 13, ப - 258
15. நம்பி - (54), ப - 40
16. தொல் - பொருள் (1075), ப - 304
17. குறள் - 1187, ப - 258
18. பதி - திணை – ஐம் - 16, ப - 105
19. திருகுற்றால – 122, ப - 164
20. குறள் - 1162, ப - 253
21. திருகுற்றால – 121, ப - 173
22. குறள் - 1095, ப - 239
23. பத் - (183-190), ப - 283
24. பதி - திணை – நூற் - 5, ப - 136
25. பதி - கைந் - 41, ப - 270
26. பதி - திணை – நூற் - 136, ப - 7
27. குறள் - 1269 ப – 274
28. ஐங் - 488 - ப - 1052
29. பதி - திணை – நூற் - 140, ப - 229
30. குறள் - 1321 ப - 285

31. குறள் - 1311 ப - 283

32. குறள் - 1096 ப – 240

33. குறு – 291 – ப - 687

34. பதி - திணை – நூற் - 69, ப – 179

35. கலி – 80 – ப – 337

36. ஐந் - எழு -59 ப- 83

37. பதி - திணை – நூற் - 30, ப - 153

38. பதி - திணை – ஐம் - 14, ப – 104

39. அகம் - 25 – ப -72

40. பதி – ஐந் – ஐம் - 6, பக் - 99

41. பதி – ஐந் – ஐம் - 4, பக் - 10

42. பதி – எழுபது - 16, பக் - 57

43. பதி - திணை – நூற் - 48, ப - 166

44. நம்பி - 16, ப - 150

45. பதி - திணை – நூற் - 150, ப - 24

46. பதி - திணை – ஐம் - 42, ப - 161

47. பதி - திணை – நூற் - 36, ப - 157

48. ஐங் - 46, ப - 99

49. தொல் - பொருள் -(1156), ப - 329

50. ஐந்தி – ஐம்பது- 15, ப - 17

51. நம்பி – 347, ப - 270

52. பதி - கை – 39, ப - 269

53. நம்பி – 349, ப - 276

54. நம்பி – 17, ப - 30

55. பதி - திணை – நூற் - 142, ப - 241

56. திருகுற்றால – 92, ப - 131

57. தொல் - பொருள் -(92), ப - 131

58. திருகுற்றால – 124, ப - 65

59. பதி - திணை – ஐம் - 21, ப - 109

# 5. இறுவாய்

## 5.1. தகவல் தொடர்பு

சங்க இலக்கியத்தில் சிறந்த சிந்தனைகள் மிளிர்வதையும், ஓங்கி வளர்ந்த நாகரிக தளத்திற்கு அடித்தளமிடுதலையும் காணலாம். சங்க கால இலக்கியங்கள் அனைத்தும் அக்கால தலைவன், தலைவியிரிடையே நிகழும் உள்ளத்தைப் பிரதிபலிக்கின்றன. தொடர்பியல் என்பது ஒருவர் மற்றொருவருடன் தமது எண்ணங்கள், கருத்துக்கள், உணர்ச்சிகள், தகவல்கள் போன்றவற்றைப் பரிமாறும் செயலாகின்றன. ஒரு மனதின் வழியாக இன்னொரு மனதுடன் அது பேசுகின்றன. மனித தொடர்பு என்பது பொருளுள்ள செய்தியை ஒருவர் இன்னொருவருக்கு அனுப்புவதாகும். இத்தகைய தொடர்பியல் முறையை தொடர்பு விளக்கம், தொடர்பியல் தோற்றமும் வளர்ச்சியும், தொடர்பியல் செயல்முறை, தகவல் தொடர்பு வடிவங்கள் போன்ற தகவல் தொடர்பு முறைகளை பற்றி ஆராயாப்பட்டுள்ளன.

இருவர் அல்லது இரு அமைப்புகளுக்கிடையே நடைபெறுகின்ற செய்திப் பரிமாற்றம். அதனால் ஏற்படும் தெளிவும் தகவல் தொடர்பு எனப்படும். செய்தியை தெரியப்படுத்துதல், அறிவித்தல், செய்தியை அனுப்புதல், செய்தியில் பங்கு அளித்தல், கருத்துப் பரிமாறுதல், போன்றவை அடையாளம், குறியீடு, பேச்சு, எழுத்து, உடலசைவு மூலமாகவும் நடைபெறுகின்றன. தொடர்பு என்பது கருத்துக்கள் எண்ணங்கள், செய்திகள், மனநிலைகள் போன்றவை ஒருவர் அனுப்பி மற்றொருவர் பெறுவது செய்தி அனுப்புதலையும், பெறுதலையும் தொடர்பு என்பதை அறியமுடிகின்றது. தொடர்பியல் என்னும் சொல்லிற்குப் பொதுமையாக்குதல் என்பது பொருளாகும். அதாவது பெறுநருடைய மனதில் அனுப்புநரின் கருத்து அல்லது கருத்துப்

படிவத்தை உருவாக்குகிறது. அனுப்புநருக்கும் பெறுநருக்கும் இடையே நிகழும் செய்தி பரிமாற்றச் செயல் முறையே தொடர்பியல் எனப்படும்.

பன்னெடுங்காலமாக மனிதன் பிறரைப் பற்றி அறிய ஆவலாக இருந்து இருக்கிறான். தன்னுடைய பெருமைகளையும், வீர தீரச் செயல்களையும் இன்ப துன்பங்களையும் பிறருடன் பகிர்ந்து கொள்ள விழைந்தான். மற்றொருவருடன் பழகும்போது, தன்னை மற்றொருவருடன் ஒப்பிட்டுப் பார்த்தான். அதனால் பிறருடைய குறைகளையும், நிறைகளையும் அவனால் அறிந்துக் கொள்ள முடிந்தது

உடலசைவதன் காரணமாக பொருள் வேறுபாட்டைக் கொடுத்த போது பண்டைய மனிதன் ஒலிகளைப் பயன்படுத்தினான். இயற்கையாகவே மனிதனிடம் ஒலி இருந்தது. இயற்கையில் கேட்ட ஒலிகளையும் பயன்படுத்தக் கற்றுக் கொண்டான்.

மனிதன் எப்படிப் பேசத்தொடங்கினான் என்பது இன்னும் புலப்படாத புதிராகவே உள்ளன.

சங்க இலக்கியத்தில் நடுகல் பற்றிய செய்திக் காணப்படுகிறது. போரில் வீரமரணம் எய்தியவர்களுக்கு வைக்கப்படும் கல்லை நடுகல் என்பர். நடுகல்லில் வீரனின் பெயர், அவன் ஆற்றிய வீரச்செயல், பெருமை, மடிந்ததற்குக் காரணம் போன்ற மரணச் செய்தி எழுதப்பட்டிருக்கும் நடுகற்கள் மரணச்செய்திகளை அறிவிக்கும் நிறுவனமாக விளங்கின என்பது புலனாகின்றன.

பல வகையான கூத்துகள் தமிழகத்தில் இருந்தன. கூத்தின் மூலமாகவும், நாடகத்தின் மூலமாகவும் மக்களுக்குச் செய்திகள் சென்றடைந்தன என்பதை அறியமுடிகின்றன.

சங்க இலக்கியத்தில் காதல் கடிதங்களை எழுதியதாக சிலம்பும், அரசியல் கடிதங்கள் குறித்து சிந்தாமணியும் கூறுகின்றது.

தொடர்பை புரட்சிகாரமாக ஆக்கப் பல புதிய கண்டுபிடிப்புகள் கண்டுபிடிக்கப்பட்டன. கி.பி.1811 இல் பிரிடுகோயிங் என்பவர் அச்சு இயந்திரத்தை இயக்க நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். கோயிங்கின் அச்சு இயந்திரத்தைப் பயன்படுத்தி டைமஸ் ஆப் இலண்டன் மற்றும் பல செய்தித்தாள்கள் அதிக எண்ணிக்கையில் அச்சிடப்பட்டது.

உலக நாடுகளிடையே விரைவான தகவல் தொடர்பு பரிமாற்றம் நடைபெற 1962-ல் பன்னாட்டுச் செய்தித் தொடர்பு அமைப்பு உருவாக்கப்பட்டது.

தகவல் தொழில் நுட்பம் வானூயர ஓங்கி வளர்ந்துள்ள இந்நாளில் உலகெங்கும் வாழும் தமிழர்களை இணைக்கும் பாலமாக தமிழ் இணையம் உருவாகிவிட்டது.

தனிமனிதன் பேச்சு, உடலசைவுகள், செய்தித்தாள்கள் போன்றவைச் செய்தி மூலங்கள். கையசைத்தல், எழுத்து, ஓலியலை போன்றவைச் செய்திகளாகும். தனிமனிதன் அல்லது குழு சென்றடையும் எல்லையாகும். இது தொடர்புச் செயல்முறையாகும்.

தகவல் தொடர்பில் தகவலாளரையும் பெறுநரையும் தொடர்பு படுத்தும் கருவிகள் தகவல் தொடர்பு கருவிகள் எனப்படும்.

அனுப்புநர் பெறுநர் நேருக்கு நேர் சந்திக்காமல் தொடர்பு கொள்வது மறைமுகத் தொடர்பு எனப்படும்.

ஒருவன் தனக்குத் தானே பேசிக் கொள்வதும், தனக்குள்ளேயே தொடர்பு கொள்வதும் அகத் தொடர்பு எனப்படும்.

ஒருவருடைய வாழ்க்கையில் நடைபெறுவது நேரிடைத் தொடர்பு என்பர்.

வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம், பத்திரிக்கைகள் போன்றவை மக்கள் தொடர்புக் கருவிகாளாகக் கருதப்படுகின்றன.

தகவல் தொடர்பு வடிவங்களை வாய்மொழித் தொடர்பு, எழுத்து அல்லது அச்சுத் தொடர்பு, வாய்மொழியற்ற தொடர்பு விளக்கப்படங்கள், புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள், மரபு வழித் தொடர்பு எனப் பிரிக்காலம். தொகைநூல்களில் தொடர்பு திறன் என்னும் மூன்றாம் இயலில் தலைவன் தலைவிக்கிடையே தோழி சிறந்த தகவல் தொடர்பாளராக விளங்குகின்றாள் என்பதைக் காணமுடிகின்றது.

## 5.2. தொடர்புத் திறன்

தகவல் தொடர்பு சாதனங்களின் இடையீடு இல்லாமல் ஒருவருக்கொருவர் நேரடியாக உரையாடுவதை நேருக்கு நேர் தகவல் தொடர்பு என்பர். தொகை நூல்களில் தலைவன் தலைவியிடையே உள்ள காதல் குறித்த தகவல்களை தலைவன் மற்றும் தலைவி இருவரும் நேரடியாகப் பகிர்ந்து கொள்ளும் பொருட்டு காதல் ஏற்படும் காலங்களில் ஆறுதல் வகையில் தோழி,செவிலி, நற்றாய், பாங்கன் வாயிலாக தன் துன்ப நிலையை கூறும் நிலையில் நேருக்கு நேர் தகவல் தொடர்பு ஏற்படுகின்றன.

நேருக்கு நேர் தொடர்பு தலைவின் களவு காலத்தில் தலைவனை சந்தித்துப் பின் தகவலை தலைவியிடத்துக் கூறும் பொழுதும் கற்புக் காலத்தில் தலைவன் பொருள் காரணமாகப் பிரிந்த

காலத்தும் தலைவியை ஆற்றுபடுத்தும் காலத்தும் தொடர்பு ஏற்படுகின்றது. களவின் காரணமாக தலைவி தலைவனை சில இடையீட்டின் காரணமாகப் பார்க்க இயலாது போய்விடுகிறது. தலைவி வருந்திக் காணப்படுகிறாள். அப்போது தோழி தலைவி இடத்தில் நேருக்கு நேராக தன் கருத்தைக் கூறி ஆறுதல் அடையச் செய்வதையும் காணமுடிகின்றது.

தலைவி மற்றும் தோழி தகவல் பரிமாறிக்கொள்ளும் பாடல்கள் குறுந்தொகையில் தான் மிகுதியான பாடல்கள் காணப்படுகின்றன. அடுத்தாற்போல் நற்றிணையிலும், ஐங்குறுநூற்றிலும், கலித்தொகையிலும் மற்றும் அகநானூற்றிலும் பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் தோழி இடத்தில் நேருக்குநேர் தகவல் பரிமாறும் பாடல்கள் ஐங்குறுநூற்றில் மிகுதியாகவும் குறுந்தொகையில் அதற்கு அடுத்தாற் போலவும் அகநானூறு, நற்றிணை மற்றும் கலித்தொகை என்ற வரிசைமுறையில் அடங்குகின்றன.

உண்மையான கதாபாத்திரங்களாக வலம் வரும் தலைவன் தலைவி இருவரும் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும் கலித்தொகை, நற்றிணை, அகநானூறு, குறுந்தொகை என்ற வரிசையில் குறைவான பாடல்களும் அமைந்துள்ளன. தலைவன் தேர்பாகன் இடத்தில் நேருக்கு நேர் உரையாடுவதாக அகநானூற்றில் அதிகமான பாடல்களும், ஐங்குறுநூறு, நற்றிணை மற்றும் குறுந்தொகையில் மிதமான பாடல்கள் வரிசையில் அமைந்துள்ளன.

தலைவன் தலைவி உடன்போக்குச் செல்கின்றார்கள். அவர்களைக் கண்ட இடைச்சுரத்தோர் கூறுவதாக ஐங்குறுநூறு மற்றும் கலித்தொகையில் ஒரே சமமாக நான்கு பாடல்கள் காணப்படுகின்றன.

தலைவன் மற்றும் பாங்கன் உரையாடுவதாக குறுந்தொகையில் அதிகப்பாடல்களும், அகநானூறு, நற்றிணையில் குறைவான பாடல்களும் உள்ளன. பாணன், தோழி உரையாடுவதாக நற்றிணையில் ஆறு பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலும் காட்டப்பட்டுள்ளன. தோழி வேலனை இகழ்ந்து கூறுவதாக கலித்தொகையில் ஆறு பாடல்களும், நற்றிணையில் ஒரு பாடலும் அமைந்துள்ளன. தோழி உழவர் இடத்தில் உரையாடுவதாக ஒரு பாடலும் இருக்கின்றது.

செவிலி தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும், அகநானூறு மற்றும் கலித்தொகையில் குறைந்த பாடல்களும் உள்ளன. தலைவியைக் கண்டோர் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும், கலித்தொகையில் இரண்டு பாடல்களும் அமைந்துள்ளன. தூதுவர் தோழி ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் செவிலி தெய்வத்திடம் கூறுவதாக குறுந்தொகையில் ஒரு பாடலும், காதற்பரத்தை பாங்காயினர் இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் இரண்டு பாடல்களும், குறுந்தொகையில் ஒரு பாடலும் என வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

தலைவன் சான்றோர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல் உள்ளது. தலைவி பாணன் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும், குறுந்தொகையில் குறைவான பாடல்களாக இரண்டு பாடல்களும், தலைவி தெய்வத்திடம் கூறுவதாக குறுந்தொகையில் ஒரு பாடலும் காணப்படுகின்றது. தலைவன் முல்லைக் கொடி இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும், குறுந்தொகையில் ஒரு பாடல் அமைந்துள்ளது. செவிலி நற்றாய் இடத்தில் உரையாடுவதாக

ஐங்குறுநூற்றில் அதிகமான பாடல்களும் குறுந்தொகையில் குறைவான பாடல்களும் காணப்படுகின்றன.

பரத்தை பங்காயினர் இடத்தில் அறிவிப்பதாக ஐங்குறுநூற்றில் நான்கு பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் பாணன் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும், அந்தணர் செவிலி இடத்தில் ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும், கலித்தொகையில் ஒரு பாடலும் இருக்கின்றன. செவிலி தலைவியின் நலன்களைப் பற்றி அயலார் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும், பரத்தை தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூறு மற்றும் அகநானூற்றிலும் பாடல்கள் காணப்படுகின்றன.

நற்றாய், காக்கை இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடல் உள்ளது. பரத்தை தலைவன் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் அதிகமான பாடல்களும் ஐங்குறுநூற்றில் குறைவான பாடல்கள் காணப்படுகின்றன. தலைவி அயலார் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் தலைவன் உழையர் இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில் மூன்று பாடல்களும் அமைந்துள்ளன. செவிலி, முக்கோற்பவர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் ஒரு பாடல், தலைவி மாலைப்பொழுதை நோக்கிக் கூறுவதாக உள்ளது. தலைவனைப் பார்த்த இடைச்சுரத்தோர் கூறுவதாக ஐங்குறுநூற்றில் நான்கு பாடல்கள் காணப்படுகின்றன.

செவிலி ஏவலர் இடத்தில் கூறுவதாக ஐங்குறுநூற்றில் ஒரு பாடலும், நற்றாய் தோழி இடத்தில் உரையாடுவதாக ஐங்குறுநூற்றில்

இரண்டு பாடல்களும், அகநானூற்றில் ஒரு பாடலுமாக அமைந்துள்ளது. தலைவி அந்தணர் இடத்தில் உரையாடுவதாக கலித்தொகையில் மட்டும் ஒரு பாடல் உள்ளது. ஆய்ச்சியர் தென்னங்குரவர் உரையாடுவதாக கலித்தொகை மற்றும் ஐங்குறுநூற்றில் ஒவ்வொரு பாடல் உள்ளது.

பரத்தை தலைவி இடத்தில் உரையாடுவதாக அகநானூற்றில் நான்கு பாடல்களும், கலித்தொகையில் இரண்டு பாடல்களும் அமைந்துள்ளன. சான்றோர் அரசன் இடத்தில் உரையாடுவதாக குறுந்தொகையில் இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன. சுற்றத்தார் கூறியதாக கலித்தொகையில் ஒரு பாடல் உள்ளது. தலைவன் ஏவலர் இடத்தில் கூறியதுமாக அகநானூற்றில் இரண்டு பாடலுடன் விளங்குகின்றன. செவிலி வயலைக்கொடியை நோக்கிக் கூறுவதாக அகநானூற்றில் ஒரு பாடலுமாக செவிலி பெண்மானை நோக்கிக் கூறுவதாக ஒரு பாடலுமாக அமைந்துள்ளது.

குழுத்தொடர்பு தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் காலங்களில் தலைவன், தோழி, தலைவி, செவிலி, பாணன் போன்றோர் ஒருவருக்கொருவர் தன் தகவலை ஒருவரிடமிருந்து இன்னொருவர் பரிமாறுதல் போன்ற செய்திகளை ஆராய்ந்துக் கூறப்பட்டுள்ளது. தொகை நூல்களில் உள்ள கதை மாந்தர்கள் குழுவாகச் சேர்ந்து செய்தியை எவ்வாறு பரிமாறுகிறார்கள் என்பது வெளிகொணரப்பட்டுள்ளது.

தகவல் தொடர்பில் மிகவும் முக்கியமானது ஒன்று தூது. இன்றைய காலகட்டம் எவ்வளவோ வளர்ச்சி பெற்றிருக்கின்றது. ஆனால், அன்றைய நிலையில் ஒருவர் செய்தியை ஒருவரிடம்

